## தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள கிருமிகளிலிருந்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள் ...



# லைப்பாயின் பாதுகாக்கும் நுரையினால்!




நீங்கள் எவ்வளவு ஜாக்கிரதையாயிருந்தாலுங்கூட, தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள கிருமிகளின் அபாயத்துக்குள்ளாக நேரிடும். லைப்பாய் சோப் உபயோகித்துத் தவறாமல் ஸ்நானம் செய்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். லைப்பாய் சோப்பின் பாதுகாக்கும் நுரை அழுக்கிலிருக்கும் கிருமிகளை விரட்டுகிறது. உங்களை நாள்முழுவதும் புத்துணர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.



# லைப்பாய் சோப்

கல்கி

# பொருளடக்கம்

மலர் 13 இதழ் 14 | 1953 நவம்பர் 1 | விஜய ஐப்பசி 16





## அவர்கள் பங்கு!




இந்தியாவிலுள்ள மாஜி சுதேச மன்னர்கள் சர்க்கார் அவர்களுக்குக் கொடுக்கும் உதவித் தொகை தவிர வேறு வழிகளில் பெறும் வருமானத்துக்கு வரி செலுத்த வேண்டும் என்று இந்திய சர்க்கார் முடிவு செய்திருக்கிறது.

# தீபாவளி வெளியீடு

உங்கள் மனதுக்குகந்த
உல்லாச சித்திரம்...





# மனம்போல மாங்கல்யம்

நாராயணன் கம்பெனி தயாரிப்பு



மலர் 13 } தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் { இதழ் 14

# கைத்தறித் தீபாவளி

உலகம் தோன்றியது முதல் அசுரனுக்கும் மனிதனுக்கும் இடை விடாத யுத்தம் நடந்து கொண்டுதான் வந்திருக்கிறது.

அசுரத்தனத்துக்கும் மனிதத் தன்மைக்கும் எப்போதும் போராட்டம்தான்!

குறிப்பிட்ட ஓர் உருவத்தில் வந்த அசுரத்தனத்தை எதிர்த்து மனிதன் வெற்றி பெற்றால், அது மற்றொரு உருவத்தில் வந்து மனிதனைத் தாக்கத் தவறுவதில்லை.

பணச் செருக்கு ஹிரண்ய கசிபுவின் உருவத்தில் வந்து நான்தான் கடவுள் என்று மார் தட்டி, உலகத்தையே நடுங்கச் செய்தது.

ஆனால் பக்தி பிரஹ்லாதன் வடிவத்தில் தோன்றி அதற்குச் சரியான பதில் அளித்து உலகத்தை உய்வித்தது.

இவ்வாறாக, தீமைகள் அசுரர் உருவாக வந்து மானிட வர்க்கத்தை அடிமைப் படுத்த முயற்சித்ததையே நமது புராணக் கதைகள் சித்திரிக்கின்றன.

அப்போதைக் கப்போது கடவுளோ, கடவுள்தன்மை பொருந்திய மகான்களோ அவதரித்து அசுரர்களிடமிருந்து மக்களைக் காப்பாற்றி யுள்ளனர்.

அத்தகைய அசுரர்களில் ஒருவன் இந்த உலகிலிருந்து ஒழிந்த தினத்தையே நரக சதுர்த்தசி அல்லது தீபாவளியாகக் கொண்டாடுகிறோம்.

ஜனங்கள் பஞ்சத்தினால் கஷ்டப் படுவதைக் காட்டிலும் நரக வேதனை வேறு எதுவும் இருக்க முடியாது.

அத்தகைய பஞ்சமே நரகாசுரனின் உருவாகத் தோன்றி ஜனங்களை அல்லல் படுத்தி வந்ததாகக் கூறப்படுகிறது.

ஜனங்களுக்குச் சொல்லொணாத் துயர் விளைவித்து வந்த பஞ்சமாகிற நரகாசுரனையே ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஹதம் செய்து மக்களைக் காப்பாற்றி அருளினார்.

பஞ்சக் கொடுமை ஒழிந்த அந்தத் தினத்தையே எல்லோரும் மங்களத் திரு நாளாகக் கொண்டாடுகிறார்கள்; அன்று பரம ஏழை முதல் பெரும் பணக்காரர்கள் வரையில் யாவரும் ஏககாலத்தில் மங்கள ஸ்நானம் செய்து, புத்தாடை உடுத்தி, இனிய உணவு அருந்துகிறார்கள்.

பாரத நாட்டிலேயே இந்த ஒரு திருநாள்தான் வேற்றுமை யின்றி நாடெங்கும் எல்லோராலும் கொண்டாடப்படுகிறது.

* * *

சமீப நூற்றாண்டுகளில் அச்சம், துயர், அடிமைத்தனம் போன்ற அசுரர்கள் இந்தியாவில் ஆதிக்கம் செலுத்தலாயினர்.

அச்சமுந் துயருமென்றே — இரண்
டசுரர் வந் தெமையிங்கு சூழ்ந்துநின்றார்

என்று மேற்படி அசுரர்களைப் பற்றி நமது கவிச் சக்கரவர்த்தி பாரதியாரும் குறிப்பிட்டிருக்கிறார் அல்லவா?

பிறகு தெய்வத் தன்மை பொருந்திய காந்தி மகான் அவதரித்து அச்சத்தை விரட்டினார்; துயரைத் துடைத்தார்; அடிமைத் தனத்தை அகற்றினார். மக்களின் உதிரத்தை உறிஞ்சி வந்த மது அரக்கனையும் ஒழிக்க வழி காட்டினார்.

அதன் பயனாக இந்திய மகா ஜனங்கள் யாவரும் சுதந்திரத் தீபாவளியைக் குதூகலமாகக் கொண்டாடினார்கள்.

* * * *

இப்போது நம்மிடையே மற்றொரு அசுரன் அட்டகாசம் செய்து வருகிறான்.

மில் துணி மோகமாகிற அந்த அசுரன் இந்தியாவிலே மிகவும் அற்புதமான கைத்தொழிலாக விளங்கிய நெசவுத் தொழிலை நிர்மூலமாக்கும் விபரீதத்தில் ஈடுபட்டிருக்கிறான்; அம் முயற்சியில் வெற்றியும் அடைந்து வருகிறான்.

# பெரியாரே! தாங்களும் சற்றுத் திரும்பிப் பாருங்களேன்!




திராவிடக் கழகத் தலைவர் திரு ஈ. வே. ராமசாமிப் பெரியார் திராவிட முன்னேற்றக் கழகத்தார் சமீபத்தில் கையாண்ட நடவடிக்கைகளை வன்மையாகக் கண்டித்திருக்கிறார். ஆனால் அப்பெரியார் தம்முடைய சமீப கால போதனைகளினால் விளையக் கூடிய அபாயங்களையும் சற்று சிந்தித்துப் பார்ப்பது நலம்.

---

லட்சக்கணக்கான கைத்தறி நெசவாளர்களும் அவர்களுடைய குடும்பங்களும் பட்டினி கிடக்கும்படியான பயங்கர நிலைமையை அந்த அரக்கன் சிருஷ்டித்திருக்கிறான்.

உலகத்தைப் பிரமிக்க வைக்கும் கைத்திறன் வாய்ந்த நிபுணர்கள் உடல் கவிந்து, உள்ளம் உடைந்து தெருக்களில் பிச்சை யெடுக்கும்படியான பரிதாப நிலைமையை உண்டாக்கி யிருக்கிறான்.

அதன் காரணமாக, தமிழ் நாட்டில் கைத்தறி நெசவாளர் பெருவாரியாக வாழும் பல இடங்களில் அவர்கள் சகிக்க முடியாத கஷ்டத்துக்கு உள்ளாகி யிருக்கிறார்கள்.

அவர்களுடைய துன்பங்களைத் தீர்ப்பது சர்க்காருடைய கடமை என்று யாரும் மௌனமாக இருந்து விடக்கூடாது.

வேஷ்டிகள், சேலைகள் இவற்றின் உற்பத்தி உரிமையை இந்திய சர்க்கார் கைத்தறி நெசவாளர்களுக்கு ஒதுக்கி விடவேண்டும் என்று ராஜாஜி சென்ற வாரம் சேலத்துக்கு அருகில் நடந்த கைத்தறி நெசவாளர் மகாநாட்டில் மறுபடியும் கேட்டுக் கொண்டார். இல்லாவிடில் மில்களில் உற்பத்தியான வேஷ்டிகளையும் புடவைகளையும் இந்த மாகாணத்துக்காவது அனுப்பாமல் இருக்கட்டும் என்று கூறினார்.

இந்திய சர்க்கார் மேற்படி யோசனையை ஏற்றுக் கொண்டாலும் ஏற்றுக் கொள்ளா விட்டாலும், ராஜாஜியின் கோரிக்கையை நிறைவேற்றுவது தமிழ் மக்களின் கையில் இருக்கிறது. கைத்தறி வேஷ்டிகளையும் புடவைகளையும் தவிர வேறு எதையும் வாங்குவதில்லை என்று அவர்கள் உறுதி கொண்டு விட்டால், கைத்தறி நெசவாளர் பட்டினிப் பிரச்னை தீர வழி பிறந்துவிடும்.

"பட்டினி லாடையும் பஞ்சி லுடையும்
பண்ணி மலைகளென வீதி குவிப்போம்"

என்ற மகாகவி பாரதியாரின் வாக்கைக் கைத்தறி, கதர் நெசவாளர்கள் நிறைவேற்றி விட்டார்கள். ஆனால் அவ்விஷயமாகப் பொது ஜனங்கள் தங்களுடைய கடமையை நிறைவேற்றினார்களா என்பதுதான் இப்போது கேள்வி.

அவ்விதம் தங்கள் கடமையை நிறைவேற்றுவதற்கு இப்போது எல்லோருக்கும் அரிய சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது.

அதாவது நாளை வரும் தீபாவளியை எல்லோரும் கைத்தறித் தீபாவளியாகக் கொண்டாட வேண்டும் என்று விரும்புகிறோம்.

தீபாவளிக்குக் கைத்தறி, கதர்த் துணிகளைத் தவிர வேறு எதுவும் வாங்குவதில்லை என்று உறுதி கொள்ள வேண்டும்.

கைத்தறி நெசவுத் தொழில் நிபுணர்களின் வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள இந்தப் பெரும் நெருக்கடியை, தமிழ் நாடு சமாளிக்க வேண்டிய இந்தப் பெரிய பிரச்னையைப் பொது ஜனங்கள் மனம் வைத்தால் எளிதில் தீர்த்து வைக்கலாம்.

அவ்விதம் செய்தால், அவர்கள் கைத்தறித் தீபாவளியை விமரிசையாகக் கொண்டாடிய பெருமையை அடைவார்கள்.

மங்களத் தீபாவளித் திருநாளில் லட்சக்கணக்கான நிபுணர்களின் குடும்பங்களைக் காப்பாற்றிய புண்ணியத்தைக் கட்டிக் கொள்வார்கள்.

# நாட்டைக் கலக்கும் நெருக்கடி

ஒரு நாட்டின் பொருளாதார நிலைமையை நிர்ணயிக்க வேலையில்லாக் கஷ்டத்தைக் காட்டிலும் சிறந்த அளவுகோல் வேறு எதுவும் இல்லை. குறிப்பிட்ட தேசத்தில் வேலையில்லாத் திண்டாட்டம் இல்லை எனில், அந்த நாடு பொருளாதார சுபிட்ச ஏணியின் உச்சிப் படியில் இருக்கிறது என்று நிச்சயமாகச் சொல்லி விடலாம்.

எனவே, உலகில் முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகள் யாவும் வேலையில்லாப் பிரச்னையைத் தீர்ப்பதில் கண்ணும் கருத்துமாய் இருந்து வருகின்றன. ஜனநாயக நாடுகளில் மந்திரி சபை வாழ்வதும் வீழ்வதும் வேலையில்லாப் பிரச்னையை அது எவ்விதம் சமாளிக்கிறது என்பதையே பெரிதும் பொறுத்திருக்கிறது.

பிரிட்டன் போன்ற நாடுகளில் சர்க்கார் வேலையற்றோரின் தொகையை அடிக்கடி வெளியிடுவார்கள். அதை அடிப்படையாகக் கொண்டு, தேச நிர்வாகத்தில் சர்க்காரின் வெற்றி தோல்வியை ஜனங்கள் உணர்ந்து கொள்வார்கள்.

பிரிட்டிஷார் இங்கு விட்டுப்போன சொத்துக்களில் வேலையில்லாத் திண்டாட்டமும் ஒன்று.

இன்று நமது நாடு சமாளிக்க வேண்டிய பயங்கரமான பிரச்னைகளில் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். இந்தியாவில் இருப்பது போல், படித்துப் பட்டம் பெற்றவர் — பாமரர், தொழில் நிபுணர்கள் — தொழில் திறமையற்றவர்கள் முதலிய சகலரும் வேலையில்லாமல் கஷ்டப்படும் சகிக்க முடியாத விபரீதத்தை உலகத்தில் உள்ள எந்தச் சுதந்திர நாட்டிலும் காண முடியாது.

இந்த நிலைமையில் மில்கள் போன்ற பெரிய தொழிற்சாலைகளில் கைக்கொள்ளும் ஆள் குறைப்பு முறை, மாகாணப் பிரிவினை போன்ற காரணங்களாலும் வேலையற்றோர் படை நாளுக்கு நாள் பெருகி வருகின்றது.

மில்களில் ஆள் குறைப்பைத் தடுக்கவும், வேலை இழந்தவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கவும் இந்திய சர்க்கார் இப்போது அவசரச் சட்டங்கள் பிறப்பித்திருக்கிறார்கள். இதனால் வேலை இழப்போரின் கஷ்டம் சிறிதளவு குறையலாம்.

ஆந்திர மாகாணப் பிரிவினையின் விளைவாக வேலை இழந்தோரின் கஷ்டங்களைக் குறைக்கத் தங்களால் இயன்ற உதவி செய்வதாகச் சென்னை சர்க்கார் அறிக்கை விடுத்திருக்கிறார்கள். அவர்களைச் சாத்தியமான வரையில் தாங்கள் எடுத்துக் கொள்வதாக இந்திய சர்க்காரும் உறுதி கூறியிருப்பது போற்றத் தக்கது.

எனினும் இத்தகைய முறைகளால் அந்தப் பயங்கரமான பிரச்னையைக் கணிசமான அளவு தீர்ப்பதென்பது முடியாத காரியம்.

சென்ற வாரம் லயோலா கல்லூரியில் நடந்த சென்னைக் கல்லூரிகளின் மூன்றாவது பொருளாதார மாணவர் சம்மேளனத்தின் போது "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீ சி. ஆர். ஸ்ரீனிவாசன் சில யோசனைகள் கூறினார். ஆளுக்கு ஆயிரம் ரூபாய் வருஷச் சம்பளத்தில் பத்து லக்ஷம் பேரைத் திரட்டி வேலையில்லாக் கஷ்டத்தையும் பொருளாதார நெருக்கடியையும் சமாளிக்க வழி தேடவேண்டும் என்று அவர் குறிப்பிட்டார். இந்திய சர்க்கார் அமுல் நடத்தி வரும் ஐந்து வருஷத் திட்டம் எதிர் பார்க்கும் அளவுக்கு வெற்றி பெற வேண்டுமாயின், வேலையில்லாக் கஷ்டத்தைத் தீர்ப்பதற்குப் பெரும் தொகை ஒதுக்கி வைக்க வேண்டும் என்றும் அவர் வற்புறுத்தினார்.

பயங்கரமான நோய்க்குக் கடுமையான ஔஷதத்தைப் பிரயோகிக்க வேண்டும் அல்லவா! அதுபோலவே நாட்டின் பொருளாதார சுபிட்சத்துக்கு இன்றியமையாத வேலையில்லாக் கஷ்ட நிவாரணத்துக்கும் உடனடியாகத் தீவிரமான முறைகளைக் கைக்கொண்டுதான் தீர வேண்டும்.

# தெவிட்டாத தீபாவளி மலர்!

உலகத்திலே தெவிட்டாத வஸ்து ஒன்று உண்டா! என்று நேயர்கள் கேட்கலாம். அத்தகைய வஸ்துவை இது வரையில் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லையே என்று அவர்கள் ஆச்சரியப்படலாம்.

நேயர்கள் தயக்கத்துடன் கேட்கும் அந்தக் கேள்விக்கு நாம் மற்றொரு கேள்வி மூலம் பதில் அளிக்க விரும்புகிறோம்.

நவரசமும் பொருந்தி விட்டால் தெவிட்டுவதற்கு வழி ஏது!—இதுதான் நமது பதில்!

நவரசமும் பொருந்துவது எளிதான காரியமா! என்று நேயர்கள் சந்தேகத்துடன் முணுமுணுப்பது காதில் விழுகின்றது.

ஒன்பது ரசமும் ஒன்றித்துத் திகழும் திகட்டாத ''கல்கி'' தீபாவளி மலரை அவர்கள் வாங்கிப் பார்த்தால், அவர்களுடைய சந்தேகம் ஒளியைக் கண்ட இருள் போல் ஓடிவிடும்!

இந்த வருஷத்துக் ''கல்கி'' தீபாவளி மலரின் மணத்தை இரட்டிப்பாக்கும் இரட்டைச் சித்திர மடல் பார்ப்போரைப் பரவசப்படுத்துகின்றது.

புகழ் பெற்ற ஓவியர்களின் வண்ணச் சித்திரங்களும், கருத்தைக் கவரும் சிற்பச் செல்வங்களும் அழிவற்ற அமர ஓவியங்களும் அற்புதமாக அமைந்திருக்கின்றன. கதைச் சித்திரங்களோவெனில் மனத்தை உருக்கி, சிந்தனைகளைக் கிளறும் சிருஷ்டியாகக் காட்சி அளிக்கின்றன.

தீபாவளி மலரில் தோன்றும் நாரதர் நேயர்களைக் கந்தர்வலோகம், சத்தியலோகம், தர்மலோகம் முதலிய உலகங்களுக்கு ஏற்றிச் செல்லும். கண்கொள்ளாக் காட்சியான அங்குள்ள அதிசயங்களைக் காண்பித்த பின், அவர்களை யதாஸ்தானமான மண்ணுலகில் கொண்டு வந்து விட்டுவிடும்.

சித்திர புராணமோ வெனில் எல்லோரையும் வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கும்.

இவற்றைத் தவிர, கலை மணம் கமழும் ''கல்கி'' தீபாவளி மலருக்கு அற்புதக் கதைகள், அருமையான கட்டுரைகள், ஹாஸ்யச் சித்திரங்கள் முதலிய ஏராளமான இதழ்களும் மேற்கொண்டு அழகைக் கொடுப்பதாக இருக்கின்றன.

எனவே, இந்த ஆண்டு ''கல்கி'' தீபாவளி மலர், தமிழ் மகாஜனங்கள் கொண்டாடும் தீபாவளித் திருநாளை இன்பத் தீபாவளியாகப் பரிமளிக்கச் செய்யும் என்பதில் ஐயமில்லை.

# டாக்டர் ராஜன் மறைந்தார்

சென்னை மாகாணத்திலேயே தேசியப் போராட்டத்தில் முன்னணி வீரர்களில் ஒருவராக விளங்கிய டாக்டர் தி. சே. சௌ. ராஜன், திருச்சியில் உள்ள தமது ஜாகையில் காலமானார் என்ற செய்தி கேட்டு வருந்தாத தேசபக்தர்கள் இருக்க முடியாது. டாக்டர் ராஜன் ரயில்வே இலாக்காவில் வேலைபார்த்த ஓர் ஏழைக் குமாஸ்தாவின் புதல்வர். எனினும், அவரைப்போல் வாழ்க்கைப் போராட்டத்திலும் அரசியல் போராட்டத்திலும் ஏககாலத்தில் அமோக வெற்றி பெற்றவர் தமிழ் நாட்டிலேயே வேறு எவரும் இல்லை எனலாம்.

சென்னை வைத்தியக் கலா சாலையில் தேர்ச்சி பெற்றபின் டாக்டர் ராஜன் தமது இருபத்தைந்தாவது வயதில் பிழைப்புக்காகக் கப்பலேறி ரங்கூனுக்குச் சென்றார். அங்கு அவர், பர்மா சர்க்காரில் வேலைக்கு அமர்ந்தார். பள்ளிக்கூட நாட்களிலிருந்தே நியாயத்துக்காகப் போராடும் புரட்சி மனப்பான்மை பொருந்திய அவர், பர்மா சர்க்காரில் மூன்று மாதங்களுக்கு மேல் வேலை பார்க்க முடியவில்லை. பிறகு அந்த உத்தியோகத்தை உதறித் தள்ளிவிட்டு, அங்கேயே சொந்தமாகத் தொழில் நடத்த முற்பட்டார். அதிலும் அவரது மனம் அமைதியைக் காணவில்லை.

எனவே, அவர் லண்டனுக்குப் புறப்பட்டுச் சென்றார். அங்கு உயர்தர வைத்தியப் பரீட்சைகளில் முதல்தரமாகத் தேறிப் பரிசுகளும் பல பட்டங்களும் பெற்றார்.

பின்னர் அவர் இந்தியாவுக்குத் திரும்பி வந்து 1914-ம் ஆண்டில் திருச்சினாப் பள்ளியிலே முதன் முதலாக டாக்டராகத் தொழில் நடத்த முற்பட்டார். அவர் வைத்தியத் தொண்டை ஆரம்பித்த அந்த வருஷத்திலிருந்தே அவரது தேசத் தொண்டும் ஆரம்பமாயது.

எனவே, டாக்டர் ராஜன் தமது எழுபத்து மூன்று வருஷ ஆயுள் காலத்தில் பாதிக்கு மேல் தேசத்துக்காக அர்ப்பணம் செய்தார் என்று கூறுவது மிகையாகாது. ஒரு காலத்தில் திருச்சி ஜில்லாவிலேயே அரசியல் போராட்டத்துக்கு ஆக்கம் அளித்து வந்தவர் டாக்டர் ராஜன்தான்.

பெருவாரியான வருமானத்தைக் கொடுத்து வந்த வைத்தியத் தொழிலைத் தற்காலிகமாக நிறுத்திவிட்டு, 1920-ம் ஆண்டிலிருந்து டாக்டர் ராஜன் தேசியப் போராட்டத்தில் ஈடுபட்டது அவரது தியாகபுத்திக்குச் சிறந்த சான்று ஆகும்.

தேசத் திருப்பணியில் ஈடு பட்டதற்காகச் சிறை செல்லும் வாய்ப்பும் அவருக்குக் கிடைத்தது. மது விலக்கு இயக்கத்தில் சேர்ந்து போராடியதற்காகப் பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் டாக்டர் ராஜனுக்கு இரண்டு வருஷம் சிறைத் தண்டனை கொடுத்தது. பிறகு உப்புச் சத்தியாக்கிரகத்தில் பங்கு எடுத்துக் கொண்டதற்காக அவர் ஒன்றரை வருஷம் சிறைத் தண்டனை அடைந்தார். 1930-ல் திருச்சியில் உள்ள டாக்டர் ராஜனின் ஜாகையிலிருந்துதான் ராஜாஜியின் தலைமையில் உப்பு சத்தியாக்கிரகத் தொண்டர் படை வேதாரண்யத்துக்குப் புறப்பட்டது.

இரண்டாவது உலக மகா யுத்தத்துக்கு முன்பும் பின்பும் சென்னை மாகாணத்தில் அமைக்கப் பட்ட காங்கிரஸ் மந்திரி சபையில் டாக்டர் ராஜனும் சேர்ந்து பல நல்ல காரியங்களைச் செய்தார்.

யுத்தம் ஆரம்பமான பின் இந்தியாவில் நடைபெற்ற தனி நபர் சத்தியாக்கிரகப் போராட்ட சம்பந்தமாகத் தமிழ் நாட்டிலே முதன் முதலாகச் சிறைப் பட்டவர் டாக்டர் ராஜன்தான்.

தமிழ்நாடு ஹரிஜன சேவா சங்கத்தின் தலைவராக இருந்து அவர் ஆற்றிய தொண்டைப் பொது மக்களும், குறிப்பாக ஹரிஜனங்களும் மறக்க முடியாது. ஆலயப் பிரவேச சம்பந்தமாகவும் டாக்டர் ராஜன் தீவிரப் பங்கெடுத்துக் கொண்டு பணி புரிந்தார்.

அரசியல் தலைவராகவும் வைத்திய நிபுணராகவும் விளங்கிய டாக்டர் ராஜன், பல நூல்கள் எழுதித் தமிழ்த்தொண்டராகவும் திகழ்ந்தார்.

தமது கிராமமான திருவேங்கி மலையில் அவர் நவீன இயந்திரங்களின் உதவியால் விவசாயத் துறையிலும் தமக்குள்ள திறனை நிரூபித்தார்.

இவ்வாறாக, தமது வாழ்க்கையிலேயே பெரும் பகுதியை நாட்டின் விடுதலைக்காகவும் முன்னேற்றத்துக்காகவும் செலவிட்ட டாக்டர் ராஜனைத் தமிழ் நாட்டினர் மறக்க மாட்டார்கள்.

டாக்டர் ராஜனின் குடும்பத்துக்கு நமது அனுதாபம் உரியதாகுக!

# சிவனடி சேர்ந்த செல்வர்

பள்ளியில் பயிலாமல், பல்கலைக் கழகத்தில் பட்டம் பெறாமல் தொழில் துறைகளில் தேர்ச்சி பெற்றுக் குபேரச் செல்வம் திரட்டியவர்கள் உண்டு. பட்டம் பெறாமல் பதவியின் சிகரத்தையும் எட்டிப் பிடித்தவர்கள் இருக்கிறார்கள். ஆனால் கல்விச் சாலையிலோ கலாசாலையிலோ தேர்ச்சி பெறாமல் புலவர் திலகமாகவும் பேராசிரியராகவும் விளங்கியபெருமை மகாமகோபாத்தியாய பண்டித மணி கதிரேசன் செட்டியார் ஒருவருக்கே உரியது.

ராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்த மகிபாலன் பட்டிக் கிராமத்தில் ஜனித்த ஸ்ரீ கதிரேசன் செட்டியார் தமது சொந்த முயற்சியினால் தமிழ் நூல்களும் வடமொழி நூல்களும் கற்று அறிவுச் சுடராக விளங்கியவர். தமிழ்ப் பற்றும் சைவப் பற்றும் மிக்க பெரியாராகத் திகழ்ந்தார். மூது பெரும் தமிழ்த் தாத்தா மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதய்யர் கதிரேசனாரின் இலக்கிய மேதையை மெச்சி அவருக்குப் 'பண்டித மணி' என்று பட்டம் சூட்டினார் எனில், ஸ்ரீ செட்டியாரின் புலமையை ஊகித்துக் கொள்ளலாம்.

பண்டித மணி, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பன்னிரண்டு ஆண்டுகள் வரையில் தமிழ் ஆராய்ச்சிப் பகுதியின் தலைவராக இருந்து திறம்படப் பணி புரிந்து வந்தார்.

எழுத்து வன்மையும் நாவன்மையும் படைத்த பண்டித மணி தலைமை தாங்கிச் சிறப்பித்த சமய, இலக்கிய மகாநாடுகள் எண்ணில் அடங்கா.

சிவநேசச் செல்வரான கதிரேசனார் எழுதிய திருவாசக உரையின் ஒரு பகுதி சமீபத்தில்தான் வெளியாயிற்று.

புலவரில் பெரு முதல்வராகத் திகழ்ந்த கதிரேசனார் சிவனடி சேர்ந்தது தமிழ் நாட்டுக்கும் இலக்கிய உலகத்துக்கும் பெரும் நஷ்டம் ஆகும்.

அப்பெரியாரின் குடும்பத்துக்கு நமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 49

## துர்ப்பாக்கியசாலி

**ம**துராந்தகன் சிறிது நேரம் பிரமை பிடித்தவன் போல் உட்கார்ந்திருந்த பிறகு திடீரென்று எழுந்து நின்று, அநிருத்தரைப் பார்த்து, "முதன் மந்திரி! இதெல்லாம் உமது சூழ்ச்சி! எனக்கு அப்போதே தெரியும்! சுந்தர சோழரின் மக்கள், அதிலும் முக்கியமாக அருள்மொழி வர்மன் பேரில் உமக்குப் பிரியம். அவனுக்குப் பட்டம் கட்ட வேண்டும் என்பது உம்முடைய விருப்பம். அதற்காக, இப்படியெல்லாம் என் தாயாரிடம் பொய்யும் புனை சுருட்டும் கூறி அவருடைய உத்தமமான மனத்தைக் கெடுத்திருக்கிறீர்! அன்பில் பிரம்மராயரே! உமக்கு என்ன தீங்கு நான் செய்தேன்? எதற்காக எனக்கு இந்தத் துரோகம் செய்யப் பார்க்கிறீர்? உம்முடைய நோக்கத்துக்காக நான் என் தாயாருக்குப் பிள்ளை யில்லாமல் போக வேண்டுமா? இந்தமாதிரி ஒரு பயங்கரமான பாதகச் சூழ்ச்சி உலகில் இதுவரை யாரும் செய்திருக்க மாட்டார்களே? விஷ்ணு பக்தர்களின் குலத்தில் வந்த அந்தணராகிய நீர் இப்படிச் செய்ய வேண்டுமா? இல்லை, இல்லை! உமது பேரில் தவறு ஒன்றும் இல்லை. இளைய பிராட்டி குந்தவையும் அருள்மொழி வர்மனும் ஏதோ சூழ்ச்சி செய்து இப்படி உம்மைப் பாதகம் செய்யப் பண்ணியிருக்கிறார்கள்!" என்று கத்தினான்.

அநிருத்தர் சாவதானமான குரலில், "இளவரசே! தங்கள் பேரில் எனக்கு அவ்வளவு துவேஷம் இருந்தால், கொட்டுகிற மழையில் மரத்தடியில் விழுந்து கிடந்த தங்களை எடுத்து வந்திருக்க மாட்டேன். அருள்மொழிவர்மரைப் பற்றியும் தாங்கள் குறைகூற வேண்டாம். ஈழங்கொண்ட அவ் வீரர் இந்த நிமிஷத்தில் என்ன செய்து கொண்டிருக்கிறார் தெரியுமா? தஞ்சைக் கோட்டையைச் சூழ்ந்துள்ள படை வீரர்களிடத்திலும் மக்களிடத்திலும் சென்று நல்ல வார்த்தை சொல்லி அவர்களைச் சமாதானப் படுத்தி வருகிறார். அவருடைய சித்தப்பாவாகிய தாங்கள் உயிரோடிருக்கும் போது தாம் சிங்காதனம் ஏறுவது தர்மம் அல்லவென்றும், அம்மாதிரி வீரர்களும் மக்களும் கோரக்கூடாதென்றும் சொல்லி அவர்கள் மனத்தை மாற்றிச் சரிப்படுத்த முயன்று வருகிறார்......"

"அப்படியானால், அப்படியானால், நீங்கள் சற்று முன் சொன்ன செய்தி அருள்மொழிக்குத் தெரியாது அல்லவா?"

"அருள்மொழிக்கும் தெரியாது; வேறு யாருக்கும் தெரியாது."

"இனிமேல்தான் எதற்காகத் தெரியப்படுத்த வேண்டும்? அநிருத்தரே! நீர் மட்டும் வாயை மூடிக்கொண்டிருப்பதாக ஒப்புக் கொள்ளும். சக்கரவர்த்தி தங்களுக்கு ஒரு கிராமத்தில் பத்து வேலி

நிலந்தானே பட்டயத்தில் எழுதி மானிய சாஸனம் அளித்தார்? நான் உமக்குப் பாண்டிய நாட்டையே பரிசாக அளித்து விடுகிறேன்............"

"ஐயா! என்னை வாயை மூடிக்கொண்டிருக்கச் செய்வதற்குப் பாண்டிய நாட்டைத் தரவேண்டியதில்லை. தங்களுடைய அன்னையின் கட்டளை ஒன்றே போதும். அவரிடம் சொல்லுங்கள்!"

மதுராந்தகன் தன்னை வளர்த்த அன்னையைப் பரிதாபமாகப் பார்த்தான்.

"குழந்தாய்! மதுராந்தகா! அநிருத்தர் சொல்லுவது சரிதான். அவருக்கு இருபது வருஷத்துக்கு முன்னாலிருந்து என் இரகசியம் தெரியும். அன்றைக்கு அவர், 'மகாராணி! இது தங்களுடைய இரகசியம். தாங்கள் யாரிடமாவது சொன்னாலன்றி வேறு எவருக்கும் தெரிய முடியாது. என் வாய் மூலமாக ஒரு நாளும் வெளிப்படாது. இது சத்தியம்!' என்று சொன்னார். அதை இன்று வரையில் நிறைவேற்றி வருகிறார். சோழ குலத்துக்கு உண்மையாக நடப்பதாக இவர் சத்தியம் செய்து கொடுத்தவர். ஆயினும் சுந்தர சோழ சக்கரவர்த்தியிடம் கூடச் சொன்னதில்லை. நீ சோழ சிம்மாதனத்தில் ஏற நான் சம்மதித்தால் இவரும் பேசாமலிருந்திருப்பார்..."

"ஆம், தாயே! பேசாமலிருந்திருப்பேன். ஆனால் உள்ளத்தில் பொய்யை வைத்துக்கொண்டு முதன் மந்திரி உத்தியோகம் பார்த்திருக்க மாட்டேன். ஸ்ரீரங்கநாதருக்குச் சேவை செய்யப் போயிருப்பேன்!" என்றார் அநிருத்தர்.

"ஆனால் அதற்கு அவசியம் ஒன்றும் நேரப் போவதில்லை. மதுராந்தகன் சிங்காதனம் ஏறமாட்டான். என் விருப்பத்தை நிறைவேற்றுவான். அவனே இராஜ்யம் வேண்டாம் என்று சொல்லி விடுவான்! மகனே! 'ஆம்' என்று ஒப்புக் கொள்ளு!" என்றாள் பெரிய பிராட்டி செம்பியன் மாதேவி.

"தாயே! அப்படியானால், நான் சிங்காதனம் ஏறத் தடையாயிருப்பது தாங்கள் ஒருவர்தானா? நான் தங்கள் வயிற்றில் பிறந்த மகனில்லை யென்றே வைத்துக் கொள்கிறேன். இருபது வருஷத்துக்கு மேல் தங்கள் வயிற்றில் பிறந்த மகனுக்கு மேல் அருமையாக வளர்த்தீர்கள். இப்போது எதற்காக எனக்கு இந்தத் துரோகம் செய்கிறீர்கள்? நான் தங்களுக்கு என்ன தீங்கு செய்தேன்?"

"குழந்தாய்! நீ எனக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை. நான்தான் உனக்குப் பெருந் தீங்கு செய்து விட்டேன். இத்தனை நாளும் உன்னை என் வயிற்றில் பெற்ற மகனைப் போலவே வளர்த்து வந்துவிட்டு இப்போது 'நீ என் மகன் இல்லை!' என்று சொல்கிறேன். இதனால் உன் மனம் எத்தனை புண்ணாகும் என்பது எனக்குத் தெரியாதா? என் ஆயுள் உள்ள வரையில் இதை நான் வெளியிட்டுச் சொல்லியிருக்க மாட்டேன். முக்கியமாக, உன்னிடம் சொல்லியிருக்க மாட்டேன். ஆனால் என் கணவருக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டும். நான் புகுந்த சோழ குலத்துக்குத் துரோகம் செய்யக்கூடாது. சோழ குலத்தில் பிறக்காதவனைச் சோழ குல சிங்காதனத்தில் நான் ஏற்றிவைக்கக் கூடாது. ஏற்றுவதற்கு நான் உடந்தையாகவும் இருக்கக் கூடாது. என் மனம் இதைப்பற்றி வேதனை அடையவில்லை யென்று நினைக்கிறாய்? 'நீ என் மகன் அல்ல' என்று சற்று முன்னால் சொன்ன போது என் நெஞ்சே உடைந்து போய் விட்டது. கடைசி வரையில் சொல்வதற்குத் தயங்கினேன். உள்ளம் ஓரே குழப்பமாயிருந்தது. என்னுடைய கடமை என்ன, தர்மம் என்ன என்று தெரிந்து கொள்வதற்காகவே நம்பியாண்டார் நம்பியிடம் போயிருந்தேன். அந்த மகான் தர்ம சூக்ஷமத்தை விளக்கமாக எடுத்துச் சொன்னார். 'உலகிலுள்ள மாந்தர் அனைவரும் மகா தேவரின் புதல்வர்கள்தான். சிவ பக்த சிரோமணியான தாங்கள் 'சொந்தக் குழந்தை' என்றும், 'வளர்த்த குழந்தை' என்றும், பேதம் பாராட்ட மாட்டீர்கள். தங்களுடைய சொந்த சொத்துக்கள் எல்லாவற்றையும் வளர்த்த மகனுக்கே கொடுப்பீர்கள். ஆனால் இராஜ்யத்தின் சமாசாரம் வேறு. நம்முடைய பொய்யின் மூலம் இன்னொருவருடைய நியாமான உரிமையைத் தடை செய்வது பாவமாகும். சோழ குலத்தில் பிறக்காதவனைத் தெரிந்து சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைப்பது குலத்துரோகமாகும். தங்கள் மகனிடமும் சக்கரவர்த்தியிடமும் உண்மையைச் சொல்லிவிடுவதுதான் தர்மம்' என்று உபதேசித்தார். கேட்டுக் கொண்டு திரும்பி வந்தேன். குமாரா! நீ என் சொந்த மகன் அல்ல என்று சொல்வதில் எனக்குச் சந்தோஷம் இருக்க முடியுமா? சக்கரவர்த்தியிடம் சொல்லும்போதுதான் இதை நான் பெருமையுடன் சொல்லமுடியுமா?"

அச்சமயம் மதுராந்தகன் திடீரென்று எழுந்து செம்பியன்மாதேவியின் காலில் விழுந்து. "அன்னையே! எனக்கு இராஜ்யம் வேண்டாம்; சிங்காதனமும் வேண்டாம். இங்கே இருக்கச் சொன்னால் இருக்கிறேன்; தேசாந்திரம் போகச் சொன்னால் போய் விடுகிறேன். ஆனால் நான் தங்கள் மகன் அல்ல; தங்கள் திரு வயிற்றில் பிறந்தவன் அல்ல என்று மட்டும் சொல்ல வேண்டாம்! யாரிடமும் சொல்ல வேண்டாம்! சொன்னீர்களானால் அந்த அவமானத்தினாலேயே என் நெஞ்சு வெடித்து இறந்துவிடுவேன்!" என்று கதறினான்.

செம்பியன் மாதேவி கண்களில் நீர் ததும்ப மிகுந்த ஆவலுடன் மதுராந்தகனை வாரி எடுத்துத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள்.

"குமாரா! உன்னை இந்தத் துன்பம் அணுகாதிருக்கும் பொருட்டுத் தான் இந்த உலக இராஜ்யத்தில் விருப்பமில்லாதவனாகவும் சிவலோக சாம்ராஜ்யத்தில் பற்றுள்ளவனாகவும் வளர்க்க முயன்று வந்தேன். அதில் தோல்வி அடைந்தேன். எந்தப் பாவிகளோ உன் மனத்தைக் கெடுத்து விட்டார்கள். இப்போதும் மோசம் போய் விடவில்லை. நீயாக உன் மனப் பூர்வமாக 'இந்த ராஜ்யம் எனக்கு வேண்டாம்; சுந்தர சோழரின் மகன் அருள்மொழியே அரசாளட்டும்' என்று நாடு நகரமறியச் சொல்லி விட்டாயானால், 'நீ என் மகனல்ல' என்று பகிரங்கமாகச் சொல்ல வேண்டிய அவசியம் ஒன்றுமில்லை. உன் மனத்தை இப்போது புண் படுத்தியதே எனக்கு அளவிலாத வேதனை தருகிறது. இன்றைக்கு முதன் மந்திரி அநிருத்தரின் முன்னிலையில் ஒப்புக் கொள். மூன்று நாளைக்கெல்லாம் சிற்றரசர்களின் மகா சபை கூடும். அச் சபையின் முன்னிலையிலேயும் ஒப்புக்கொள். 'எனக்கு இராஜ்யம் ஆளும் விருப்பம் இல்லை. சிவ பெருமானுடைய கைங்கரியத்திலும் சிவாலயத் திருப்பணியிலும் ஈடுபட விரும்புகிறேன். என் தந்தை தாயின் கட்டளையும் அதுதான்! அருள்மொழி வர்மனுக்கே பட்டம் கட்டுங்கள்!' என்று சொல்லி விடு. 'சோழ இராஜ்யத்துக்கு விரோதமாக எதுவும் செய்வதில்லை, சிற்றரசர்கள் யாரேனும் துர்ப் புத்தி கூறினாலும் செவி சாய்ப்பதில்லை' என்று சத்தியம் செய்து விடு! அப்படிச் செய்து விட்டால் நானாவது முதன் மந்திரியாவது உன் பிறப்பைக் குறித்த இரகசியத்தை வெளியிடுவதற்கே அவசியம் இராது. நீ எப்போதும் போல் என் கண்ணின் மணியான அருமைப் புதல்வனாயிருந்து வருவாய். நாம் இருவரும் சேர்ந்து இந்தப் பரந்த பாரத தேசமெங்கும் யாத்திரை செய்வோம். கன்னியா குமரியிலிருந்து கைலாசகிரி வரையில் செல்வோம். ஆங்காங்கே சிவாலயத் திருப்பணிகள் செய்வோம். அருள்மொழி வர்மன் என்னிடம் அளவிலாத பக்தி உள்ளவன். உன்னைப் போலவே அவனையும் பெரும்பாலும் நான்தான் வளர்த்தேன். என் பேச்சுக்கு அவன் ஒருகாலும் மாறு சொல்லமாட்டான்!" என்றாள் மழவரையர் மகளான செம்பியன் மாதேவி.

மதுராந்தகன் இதைக் கேட்டு நெற்றியை இரண்டு கைகளினாலும் தாங்கிப் பிடித்துக் கொண்டு சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

"ஆகா! எனக்குப் பிராயம் தெரிந்தது முதல் ஏதேதோ உருவமில்லாத நிழல் போன்ற நினைவுகள் அடிக்கடி தோன்றி எனக்கு வேதனை அளித்து வந்தன. அவற்றுக்கெல்லாம் காரணம் இப்போது தான் தெரிகிறது. என்னைப் போன்ற துரதிர்ஷ்டசாலி இந்த உலகத்தில் யார் உண்டு? என்ன வேளையில் என்ன ஜாதகத்தில் பிறந்தேனோ தெரியவில்லை. ஒரே நாளில், ஒரு கண நேரத்தில், தாய் தந்தையரை இழந்தேன்; குலம் கோத்திரம் இழந்தேன்; ஒரு பெரிய மகா இராஜ்யத்தை இழந்தேன்; ஆயிரம் வருஷத்து வீர பரம்பரையில் வந்த சிங்காதனத்தை இழந்தேன்; சிநேகிதர்கள் யாவரையும் இழந்தேன். ஆம்; இந்த உண்மை தெரிந்தால் அப்புறம் எவன் எனக்குச் சிநேகிதனாயிருக்கப் போகிறான்? எனக்குப் பட்டம் கட்டுவதற்காக உயிரைக் கொடுப்பதாய்ப் பிரமாணம் செய்த சிற்றரசர்கள் எல்லாரும் ஒரு நொடியில் என்னைக் கைவிட்டு விடுவார்கள்!......ஆம்; என்னைப் போன்ற துர்ப்பாக்கியசாலி இந்த உலகம் தோன்றிய தினத்திலிருந்து யாரும் இருந்திருக்க முடியாது. அம்மா! என் அறிவு குழம்புகிறது. தெளிவாகச் சிந்திக்க முடியவில்லை. இரண்டு நாள் அவகாசம் கொடுங்கள்! என் முடிவைச் சொல்லுகிறேன்!" என்றான்.

"குழந்தாய்! நீ யோசிப்பதற்கு என்ன இருக்கிறது? என் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டுதான் இதைச் சொல்கிறேன்.

ஒன்று நீயாக இராஜ்யத்தைத் துறந்து விடுவதாய் ஒப்புக்கொள்ள வேண்டும். அல்லது நீ என் வயிற்றில் பிறந்த மகன் அல்ல என்பதை நாடு நகரமெல்லாம் அறிய நான் ஒப்புக்கொள்ள வேண்டும். எப்படியும் நீ சிங்காதனம் ஏற முடியாது. நீ யோசித்துச் சொல்வதற்கு என்ன இருக்கிறது?" என்றாள் பெரிய பிராட்டி யென்று உலக மெல்லாம் போற்றி வணங்கிய உத்தமி.

அப்போது அநிருத்தர் "அம்மா! இரண்டு நாள் அவகாசம் கொடுப்பதில் தவறு ஒன்றுமில்லை. மந்திராலோசனை சபையும் மகாஜன சபையும் கூடுவதற்கு இன்னும் மூன்று நாள் இருக்கிறது. அதுவரை இளவரசர் நிம்மதியாக யோசித்துப் பார்க்கட்டும்!" என்றார்.

"அம்மா! அம்மா! இந்த இரகசியம் தங்களையும் முதன் மந்திரியையும் தவிர வேறு யாருக்காவது தெரியுமா?" என்று மதுராந்தகன் திடீரென்று தோன்றிய ஆவலுடன் கேட்டான். அவன் உள்ளத்தில் என்ன தீய எண்ணம் தோன்றியதோ, எத்தகைய சூழ்ச்சி மூளை விடத் தொடங்கியதோ, நாம் அறியோம்.

மதுராந்தகனுடைய பரபரப்பு மழவரையர் மகளுக்குச் சிறிது வியப்பை அளித்தது. "எங்களைத் தவிர இன்னும் மூன்று பேருக்கு மட்டும் தெரிந்திருந்தது, மகனே! அவர்களில் உன் தந்தை,—சிவநேசச் செல்வரான என் சிந்தையில் குடிகொண்ட கணவர்,—காலமாகி விட்டார். தமக்கையும் தங்கையுமான இரண்டு ஊமை ஸ்திரீகளுக்குத் தெரியும். அவர்களிலும் ஒருத்தி,— உன்னைப் பெற்றவள்.— இரண்டு நாளைக்கு முன்பு சுந்தரசோழர் அரண்மனையில் துர்மரணம் அடைந்தாள். அவளுடைய உயிரற்ற உடல் அடக்கம் செய்யப் படாமல் கிடந்தபோதே உன்னிடம் உண்மையைச் சொல்லி விடலாமா என்று பார்த்தேன். ஆனால் மனம் வரவில்லை. உன்னை வேதனைப்படுத்த விருப்பமில்லாமல் சும்மா யிருந்து விட்டேன். மகனே! உன்னைப் பெற்றவளை நினைத்து நீ அழுவதா யிருந்தால் அழு! உன்னை அவள் பெற்றாளே யன்றி, அப்புறம் உனக்கும் அவளுக்கும் யாதொரு சம்பந்தமும் இருக்க வில்லை. உன்னை வந்து பார்க்க வேண்டும் என்றுகூட முயற்சி செய்ய வில்லை. அவள் புத்தி சுவாதீனத்தை இழந்து பிச்சியாகிப் போய் விட்டாள். அவளை நினைத்து நீ கண்ணீர் விடுவதா யிருந்தால் விடு!" என்று சொன்னாள் தேவி.

"இல்லை, இல்லை. தங்களைத் தவிர வேறு யாரையும் அன்னையாக நினைக்க என்னால் முடியவில்லை. முன்னாலேயே தாங்கள் சொல்லி யிருந்தாலும் அவள் அருகிலேகூடப் போயிருக்க மாட்டேன். இரகசியம் தெரிந்த இன்னொருவர் யார், அம்மா! அந்த இன்னொரு ஊமை ஸ்திரீ யார்?" என்று கேட்டான்.

"அவளுடைய தங்கைதான். இந்தத் தஞ்சைக்கு வெளியில் நந்தவனம் வைத்து வளர்த்து வருகிறவள். என் வயிற்றில் செத்துப் போய்க் கட்டைபோல் பிறந்த சிசுவையும் உன்னையும் மாற்றிப் போட்டவள் அவள்தான். பிறவி ஊமையும் செவிடுமாதலால் யாரிடமும் சொல்ல மாட்டாள். அவளுக்கும் ஒரு குமாரன் இருக்கிறான். தாயும் மகனும் தஞ்சைத் தளிக்குளத்தார் ஆலயத்துக்குப் புஷ்ப சேவை செய்து வருகிறார்கள். அவர்களுக்கு மானியம் கொடுத்து நான்தான் ஆதரித்து வருகிறேன்."

"ஆகா! அவர்களை எனக்குத் தெரியும். தாய், மகன் இருவரையும் தெரியும். மகன் பெயர் சேந்தன் அமுதன். வந்தியத்தேவன் என்ற ஒற்றன் இங்கிருந்து தப்புவதற்கு உதவி செய்தவன். அம்மா! அந்தப் பிள்ளைக்கு இதைப் பற்றி ஏதாவது தெரியுமா?"

"தெரியாது, மகனே! தெரியாது! அவனுடைய தாயார் இந்த இரகசியத்தை யாரிடமும் சொல்வதில்லை என்று என்னிடம் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறாள். அதைப் பற்றி உனக்குக் கவலை வேண்டாம். அவளைத் தவிர நானும் முதன் மந்திரியுந்தான்!"

மதுராந்தகனுடைய உள்ளத்தில் அச்சமயம் பயங்கரமான தீய எண்ணங்கள் பல தோன்றின. இவர்கள் இருவரும் இவ்வுலகை விட்டு அகன்றால், உண்மையைச் சொல்லக் கூடியவர்கள் யாருமே இல்லை என்று எண்ணினான். முதன் மந்திரிக்கு நான் எந்த விதத்திலும் கடமைப் பட்டிருக்கவில்லை. இந்த மாதரசியோ உண்மையில் என் அன்னை அல்ல. இவர்களிடம் எதற்காக நான் கருணை காட்ட வேண்டும்? ஆகா! என் பிறப்பைக் குறித்த இரகசியத்தை அறிவிப்பதாகச் சுந்தர சோழரின் தோட்டத்தில் கூறினானே, அவன் யார்? பொக்கிஷ நிலவறையில் என்னை வந்திருக்கும்படி சொன்னவன் யார்? அவனை

மட்டும் நான் சந்திக்கும்படி நேர்ந்தால்? சுந்தர சோழரைக் கொல்ல முயன்று அவன் அந்த ஊமை ஸ்திரீயைக் கொன்று விட்டான். அவன் பேரில் குற்றமில்லை. அவள்தான் என் தாயார் என்று இவர்கள் சொல்லுகிறார்கள். அவள் என் தாயார் என்றால், என் தகப்பனார் யார்? ஒரு வேளை ...... ஒரு வேளை ...... இந்த வஞ்சனை நிறைந்த கிழவியும் இந்த வேஷதாரிப் பிரம்மராயனும் என்னை வஞ்சிக்கத்தான் பார்க்கிறார்களோ? உண்மையில் நான் சுந்தர சோழரின் குமாரன் தானோ?......ஆகா! இந்த உண்மையை எப்படி அறிவது?

"மகனே! நான் போய் வருகிறேன். நன்றாக யோசித்துச் சீக்கிரம் ஒரு முடிவுக்கு வந்துவிடு! பெற்ற தாயை விடப் பதின்மடங்கு அன்புடன் உன்னை இருபத்திரண்டு வருஷம் வளர்த்த நான் உனக்குக் கெடுதலைச் சொல்ல மாட்டேன். இந்த நிலையற்ற பூலோக இராஜ்யத்தைத் தியாகம் செய்துவிடு! என்றும் அழியாத சிவலோக சாம்ராஜ்யத்தை அடைவதற்கு வழி தேடு!" என்று கூறினாள் பெரிய பிராட்டியார்.

இச்சமயம் அவர்கள் யாரும் எதிர் பாராத ஒரு சம்பவம் நடந்தது. அருள்மொழிவர்மன் அந்த அறைக்குள் வந்தான். நேரே செம்பியன்மா தேவியிடம் வந்து நமஸ்கரித்தான்.

"தேவி! தாங்கள் தங்களுடைய அருமைப் புதல்வருக்குக் கூறிய புத்திமதியை எனக்குக் கூறிய புத்திமதியாகவும் ஏற்றுக் கொண்டேன். இந்தச் சோழ சாம்ராஜ்யம் எனக்கு உரியதாக இருக்கும் பட்சத்தில் அதை நான் தியாகம் செய்துவிடச் சித்தமா யிருக்கிறேன். தங்களுடைய ஆசியினால் என் உள்ளம் சிவபெருமானுடைய பாத கமலங்களில் செல்லட்டும். சிவலோக சாம்ராஜ்யத்தில் ஒரு சிறிய இடம்,—தங்கள் கணவராகிய மகான் கண்டராதித்தர் இருக்கும் இடத்துக்கருகில், எனக்குக் கிடைக்கட்டும்! அவ்வாறு எனக்கு ஆசி கூறுங்கள்!" என்றான்.

இதைக் கேட்ட செம்பியன்மா தேவியும் முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயரும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு திகைத்து நின்றார்கள்.

"தேவி! சற்று முன்னால் தங்கள் செல்வப் புதல்வரிடம் தாங்கள் சொல்லிக் கொண்டிருந்ததை நான் விருப்பமின்றிக் கேட்கும்படியாக நேர்ந்து விட்டது. மன்னிக்க வேணும். இந்த மாளிகையைச் சுற்றி நின்ற ஜனங்களைக் கோட்டைக்கு வெளியே கொண்டு போய்ச் சேர்த்து விட்டுத் திரும்பி வந்தேன். முதன் மந்திரியைப் பார்த்து மேலே நடக்க வேண்டியதைப் பற்றிப் பேசுவதற்காக இந்த மாளிகையில் நுழைந்தேன். தாங்களும் இங்கு இருப்பதாக அறிந்ததும் 'பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று' என்று எண்ணிக் கொண்டு வந்தேன். தாங்கள் வழக்கத்தைக் காட்டிலும் உரத்த குரலில் பேசினீர்கள். மதுராந்தகத் தேவரும் சத்தம் போட்டுப் பேசினார். உள்ளே பிரவேசிக்கலாமா, வேண்டாமா என்று தயங்கி நிற்கையில் தங்களுடைய சம்பாஷணையில் ஒரு பகுதி என் காதில் விழுந்தது. தேவி! உயிரோடிருப்பவர்களில் தங்களுக்கும் முதன் மந்திரிக்கும் சேந்தன் அமுதனுடைய அன்னைக்கும் மட்டும் மதுராந்தகருடைய பிறப்பைக் குறித்த இரகசியம் தெரியும் என்று சற்று முன் சொல்லிக் கொண்டிருந்தீர்கள். அது சரியல்ல. எனக்கும் என் தமக்கையாகிய இளைய பிராட்டிக்கும் கூட அது தெரியும். சக்கரவர்த்தியின் உயிரைக் காப்பதற்காகத் தன் இன்னுயிரை ஈந்த மந்தாகினி தேவியை நான் ஈழ நாட்டில் அடிக்கடி சந்திக்க நேர்ந்தது. சித்திர பாஷையின் மூலம் அவர் எனக்கு இதையெல்லாம் தெரிவித்தார். நான் என் தமக்கையாரிடம் கூறினேன். இரண்டு பேரும் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தோம். என் சிறிய தகப்பனாராகிய மதுராந்தகத் தேவர்தான் சோழ சிங்காதனத்தில் வீற்றிருக்க வேண்டியவர். அவர் தங்களுடைய சொந்த மகனைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு ஆதரவுடன் வளர்க்கப்பட்டவர். என்னைக் காவேரி வெள்ளத்தில் மூழ்காமல் காப்பாற்றியதோடு, பின்னரும் பல முறை உயிர் பிழைப்பதற்கு உதவி செய்த மந்தாகினி தேவி வயிற்றில் பிறந்த புதல்வர். ஆகையால், எப்படிப் பார்த்தாலும் சோழ சிங்காதனத்தில் ஏற உரிமை உள்ளவர். அவருடைய உரிமையில் ஏதேனும் சந்தேகம் இருந்தால், நான் அதைத் தீர்த்து வைப்பேன். சோழ சிங்காதனத்தில் எனக்குள்ள பாத்தியதையைத் தங்கள் பாத தாமரைகளின் ஆணையாகத் தியாகம் செய்வேன். ஆகையால், தாங்கள் மதுராந்தகத் தேவர்

தங்கள் புதல்வர் அல்லவென்று சொல்ல வேண்டிய அவசியமுமில்லை. மதுராந்தகர் சோழ சிங்காதனத்தைத் தியாகம் செய்ய வேண்டிய அவசியமும் இல்லை!"

இவ்வாறு பொன்னியின் செல்வர் கூறியதைக் கேட்டு அந்த அறையில் இருந்த மூவரும் தங்கள் வாழ்நாளில் என்றும் அடைந்திராத வியப்பையும் பிரமிப்பையும் அடைந்தார்கள்.

அவர்களில் அநிருத்தர்தான் முதலில் அறிவுத் தெளிவு பெற்றார்.

"இளவரசே! தாங்கள் இப்போது கூறிய வார்த்தைகள் காவியத்திலும் இதிகாசத்திலும் இடம் பெற வேண்டும். கருங்கல்லிலும் செப்பேட்டிலும் பொன் தகடுகளிலும் பொறிக்கப்பட வேண்டியவை. ஆனால் இங்கேயுள்ள நாம் மட்டும் இந்த விஷயத்தைப் பற்றித் தீர்மானம் செய்ய முடியாது. சக்கரவர்த்தியையும் மற்றச் சிற்றரசர்களையும் கலந்தாலோசிக்க வேண்டும். பின்னொரு காலத்தில் உண்மை வெளியானால் மக்கள் என்ன சொல்வார்கள் என்பதையும் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். இளவரசே! மகா சபை கூடுவதற்கு இன்னும் மூன்று தினங்கள் தான் இருக்கின்றன. அதுவரையில் நாம் ஒவ்வொருவரும் நிதானமாக ஆழ்ந்து யோசனை செய்து பார்ப்போம்!" என்றார்.

## அத்தியாயம் 50

# குந்தவையின் கலக்கம்

செல்வத்தில் பிறந்து செல்வத்தில் வளர்ந்தவள் இளையபிராட்டி குந்தவை தேவி. அழகில் ரதியையும், அறிவில் கலைமகளையும், அதிர்ஷ்டத்தில் திருமகளையும் ஒத்தவள். சுந்தர சோழ சக்கரவர்த்தி முதல் சோழநாட்டின் சாதாரண குடிமக்கள் வரையில் அவளைப் போற்றினார்கள். அரண்மனையில் அவள் காலால் இட்டதைத் தலையினால் செய்ய எத்தனையோ பேர் காத்திருந்தார்கள். சிற்றரசர்கள் தங்கள் குலத்தில் வந்த அரசிளங் குமரிகளுக்குக் குந்தவை தேவியின் பணிப் பெண்ணாக இருக்கும் பாக்கியம் கிடைக்காதா என்று ஏங்கினார்கள். பாரத நாட்டில் அந்நாளில் பேரரசர்களாக விளங்கிய பலரின் பட்டத்துக்குரிய அரச குமாரர்கள் இளையபிராட்டி குந்தவையின் கைப்பிடிக்கும் பாக்கியத்துக்குத் தவம் கிடந்தார்கள்.

அத்தகைய சகல பாக்கியங்களும் வாய்க்கப்பெற்ற இளையபிராட்டி அளவில்லாத சோகக் கடலில் மூழ்கியிருந்தாள். ஆதித்த கரிகாலனுக்கு அவள் சொல்லி அனுப்பிய எச்சரிக்கையெல்லாம் பயனிலதாய்ப் போயிற்று. சம்புவரையர் மாளிகைக்குப் போக வேண்டாமென்று அவனுக்கு அவள் அவசரச் செய்தி சொல்லி அனுப்பியிருந்தாள். அவளுடைய வார்த்தைக்கு எப்போதும் மிக்க மதிப்புக் கொடுக்கக் கூடிய அருமைத் தமையன் இந்த வார்த்தையைத் தட்டிவிட்டுக் கடம்பூர் அரண்மனைக்குப் போனான். அங்கே மர்மமான முறையில் அகால மரணமடைந்தான். நந்தினி கரிகாலனுக்கும் தனக்கும் அருள்மொழிக்கும் சகோதரி என்றே அவள் நம்பியிருந்தாள். நந்தினி ஏதோ ஒரு காரணத்துக்காக அவன் மீது வஞ்சம் கொண்டிருந்தாள் என்பதையும் அறிந்திருந்தாள். நந்தினியின் கையினாலேயே கரிகாலன் மரணம் அடைய நேர்ந்திருந்தால் அதைக் காட்டிலும் சோழ குலத்துக்கு ஏற்படக் கூடிய அபகீர்த்தியும் பழியும் வேறெதுவும் இல்லை. கரிகாலன் மரணத்துக்குப் பிறகு நந்தினி என்ன ஆனாள் என்பது தெரியவில்லை.

அருமைத் தமையனைப் பறிகொடுக்க நேர்ந்தது அவளுக்கு எல்லையில்லாத துயரத்தை அளித்தது. உயிர் பிரிந்து இரண்டு நாளைக்குப் பிறகும் அவனுடைய திருமுகத்தில் குடிகொண்டிருந்த வீரக்களையை நினைத்து நினைத்து உருகினாள். ஆகா! என்னவெல்லாம் அந்த மகாவீரன் கனவு கண்டு கொண்டிருந்தான்? கரிகால் பெருவளத்தானைப் போல் இமயமலை வரையில் திக்விஜயம் செய்து அம் மாமலையின் சிகரத்தில் புலிக் கொடியை நாட்டப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தானே? அப்படிப் பட்டவனுடைய திருமேனி அரை நாழிகைப் பொழுதில் எரிந்து பிடிசாம்பராகி விட்டது. சோழநாட்டின் மண்ணோடு மண்ணாகக் கலந்து விட்டது. அப்படிக் கலந்த மண்ணிலிருந்து வருங்காலத்தில் ஆயிரமாயிரம் வீராதி வீரர்கள் தோன்றுவார்கள். சோழநாட்டி

விருந்து நாலா திசைகளிலும் செல்லுவார்கள். கடல்கடந்து தூர தூர தேசங்களுக்குச் செல்வார்கள். வீரப்போர்கள் புரிந்து சோழ சாம்ராஜ்யத்தின் எல்லையை விஸ்தரிப்பார்கள். போகுமிடங்களிலெல்லாம் வானளாவிய கோபுரங்களை உடைய கோவில்களை எழுப்புவார்கள். அவைகள் சோழ நாட்டின் பெருமையை உலகுக்கு எடுத்து இயம்பிய வண்ணம் கம்பீரமாக நிற்கும். தமிழையும் தமிழ்க் கலைகளையும் சைவ வைஷ்ணவ சமயங்களையும் பரப்புவார்கள். மூவர் தேவாரப் பதிகங்களும் ஆழ்வார்களின் பாசுரங்களும் கடல் கடந்த நாடுகளிலெல்லாம் ஒலி செய்யும். "வெற்றி வேல் வீர வேல்!" என்னும் வெற்றி முழக்கங்கள் கேட்கும்......

இவை யெல்லாம் வெறும் கனவு அல்ல. நடக்கக் கூடியவைதான். அருள்மொழி வர்மன் பிறந்த வேளையின் விசேஷம் பற்றிப் பெரியவர்களும் சோதிடர்களும் அநுபவம் வாய்ந்த தாய்மார்களும் சொல்லியிருப்பதெல்லாம் உண்மையானால், கரிகாலன் கனவு கண்டவை யெல்லாம் அருள்மொழி வர்மன் மூலமாக நிறைவாகக் கூடும்.

ஆனால், அதற்கு எத்தனை இடைஞ்சல்கள் குறுக்கே நிற்கின்றன? ஆகா! இச் சிற்றரசர்கள் தங்களுக்குள் பூசல் விளைவித்துக் கொண்டு என்ன விபரீதங்கள் விளைவிப்பார்களோ, தெரியவில்லை. மலையமானும் வேளானும் அருள்மொழி வர்மனைச் சிம்மாசனம் ஏற்றியே தீருவதென்று ஒரே பிடிவாதமாக இருக்கிறார்கள். பழுவேட்டரையர்களும் அவர்களுடைய நண்பர்களும் மதுராந்தகனுக்காகப் படை திரட்டிவருகிறார்கள். சக்கரவர்த்தியோ அடுத்தடுத்து நேர்ந்துவிட்ட இரு பெரும் விபத்துக்களால் சோகக் கடலில் ஆழ்ந்திருக்கிறார். யாரிடமும் எதைப் பற்றியும் பேச மறுக்கிறார். இளம் பிராயத்தில் தாம் செய்த பாவத்தை எண்ணி எண்ணிப் பச்சாத்தாபப் பட்டுக் கொண்டிருக்கிறார். அவருக்குத் தேறுதல் மொழி சொல்லக் கூட யாருக்கும் தைரியமில்லை. அவருடைய செல்வக் குமாரியாகிய தனக்கே அவரை அணுக அச்சமாயிருக்கிறதென்றால் மற்றவர்களைப் பற்றிக் கேட்பானேன்!

அருள்மொழிவர்மன் இராஜ்யத்தைத் தியாகம் செய்யச் சித்தமாயிருக்கிறான். மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டி வைத்து விட்டுத் தான் சோழர் படைகளுடன் கடல் கடந்து திக் விஜயம் செய்யப் போக விரும்புகிறான். ஆனால் அதற்கும் எதிர்பாராத முட்டுக்கட்டை ஏற்பட்டிருக்கிறது. ஏது காரணத்தினாலோ, சோழ நாடே போற்றிப் பணியும் முதிய பிராட்டியான செம்பியன்மாதேவி தம் மகனுக்குப் பட்டம் கட்டுவதை ஆட்சேபிக்கிறார். காலஞ்சென்ற தமது கணவரின் கட்டளை என்கிறார்...

இந்தச் சிக்கல்களெல்லாம் எப்படித் தீரப் போகிறதோ, தெரியவில்லை.

இப்படிச் சோழர் குலத்தைப் பற்றியும் சோழ மகாராஜ்யத்தைப் பற்றியும் ஏற்பட்டிருக்கும் கவலைகள் எல்லாம் போதாவென்று, குந்தவையை இன்னொரு பெருங்கவலை வாட்டி வதைத்தது. அவளுடைய உள்ளங் கவர்ந்த வாணர் குல வீரனைப் பாதாளச் சிறையில் அடைத்து வைத்திருக்கிறார்கள். ஆதித்த கரிகாலனுடைய மரணத்துக்கு அவனைப் பொறுப்பாக்க முயல்கிறார்கள். இதில் அந்தப் பல்லவர் குலத்துப் பார்த்திபேந்

திரன் பிடிவாதமாக இருக்கிறான். பாட்டனார் மலையமான் ஒருவனை தான் சொன்னால் கேட்டு விடுவார். ஆனால் சந்தேகத்துக்கு ஆளாகியிருக்கும் ஒருவன் விஷயத்தில் பெண்பாலாகிய தான் எப்படித் தலையிடுவது? தமையனாகிய ஆதித்த கரிகாலனைக் காட்டிலும் வழிப்போக்கனாக வந்த வந்தியத்தேவன் பேரில் தனக்கு அதிக அபிமானம் என்று ஏற்பட்டால், அதைவிட அபகீர்த்தி வேறு என்ன இருக்கிறது? பார்த்திபேந்திரன் வேணுமென்றே அத்தகைய அபகீர்த்தியைப் பரப்பக் கூடியவன். கரிகாலன் கொலையுண்டு கிடந்த இடத்தில் வந்தியத்தேவனைக் கையும் மெய்யுமாகச் சம்புவரையரும் கந்தமாறனும் பிடித்ததாகப் பார்த்திபேந்திரன் சொல்கிறான். இது உண்மையாகவே இருக்கலாம். ஆனால் கரிகாலனை ஒரு நிமிடமும் விட்டுப் பிரியக் கூடாது என்று தான் கூறிய வார்த்தையையே வந்தியத்தேவர் நிறைவேற்றியிருக்க வேண்டும். ஆதித்த கரிகாலனைக் கொலைகாரர்களிடமிருந்து காப்பாற்றுவதற்கு முயன்று அதில் வெற்றி காண முடியாமல் தோல்வியுற்றிருக்க வேண்டும்.

ஆனால் இதைப் பற்றிய உண்மையை எப்படி அறிந்து கொள்வது? வந்தியத்தேவரைத் தான் போய்ப் பார்க்க முயன்றாலும், அவரைச் சிறையிலிருந்து இங்கே தருவித்தாலும் வீண் சந்தேகங்களுக்கும் பழிச் சொற்களுக்கும் இடங்கொடுக்கும். தன்னைப் பற்றி யாரும் எதுவும் சொல்லத் துணிய மாட்டார்கள்; அப்படிச் சொன்னாலும் கவலையில்லை! ஆனால் கரிகாலனுடைய மரணத்துக்கு அருள்மொழி வர்மனையே காரணமாக்கவும் சில வஞ்சகர்கள் முயன்று வருகிறார்கள். தான் அவசரப்பட்டு ஏதாவது செய்வதால், அவர்களுடைய கட்சிக்கு ஆக்கம் உண்டாகிவிடக் கூடாது அல்லவா?

தெய்வமே! தேவி! ஜகன்மாதா! பிறந்ததிலிருந்து ஒரு கவலையுமின்றி வாழ்ந்திருந்த எனக்கு எப்பேர்ப்பட்ட சோதனையை அளித்து விட்டாய்?...

இவ்வாறெல்லாம் குந்தவையின் உள்ளம் எண்ணி எண்ணிப் புண்ணாகிக் கொண்டிருந்தது. கரிகாலனுடைய மரணச்செய்தியும் வந்தியத்தேவர் அதில் சம்பந்தப்பட்டிருக்கும் செய்தியும் வந்தது முதல் இளைய பிராட்டி இரவில் ஒரு கணமும் தூங்க முடியவில்லை. இந்தச் சிக்கலான நிலைமை தீர்வதற்கு வழி கண்டு பிடிக்க யோசித்து யோசித்து, பல வழிகளை யோசித்து, ஒவ்வொன்றையும் நிராகரித்துக் கொண்டிருந்தாள்.

அவளுடைய உயிருக்குயிரான தோழி வானதியிடம்கூட மனம் விட்டுப் பேசுவதற்கு மறுத்தாள்,

வானதியும் அவளுடைய மனோநிலையை ஒருவாறு உணர்ந்து கொண்டு ஏதும் பேசாமலும் கேட்காமலும் இருந்தாள். குந்தவைக்குப் பக்கத்தில் பெரும்பாலும் நிழல் போல் தொடர்ந்து இருந்து கொண்டு, அந்த நிழலைப் போலவே மௌனமாகவும் இருந்து வந்தாள்.

அவ்விதம் சமயோசிதம் அறிந்து குந்தவையின் சிந்தனைகளில் குறுக்கிடாமல் சர்வ ஜாக்கிரதையாக இருந்து வந்த வானதி அன்றைக்குத் திடீரென்று இளைய பிராட்டியை நெருங்கி, "அக்கா! அக்கா! தங்களைப் பார்ப்பதற்காக ஒரு பெண் வந்திருக்கிறாள். கண்ணீரும் கம்பலையுமாய் நிற்கிறாள். பார்த்தால் பரிதாபமாயிருக்கிறது!" என்று சொன்னதும் குந்தவைக்கே சிறிது வியப்பாகப் போய் விட்டது.

"அவள் யார்? என்ன விஷயம் என்று நீ கேட்கவில்லையா?" என்றாள்.

"கேட்டேன், அக்கா! அதைச் சொன்னால் தங்களுக்கு எரிச்சல் வருமோ, என்னமோ! சம்புவரையர் மகள் மணிமேகலையாம்! சின்னப் பழுவேட்டரையர் மாளிகையில் சம்புவரையர் குடும்பத்தைச் சிறை வைத்திருக்கிறார்கள். இவள் ஒருவருக்கும் தெரியாமல் வழி விசாரித்துக் கொண்டு ஓடி வந்திருக்கிறாள். என்ன காரியம் என்று கேட்டால், தங்களிடம் நேரிலேதான் சொல்வேன் என்கிறாள். அவளுடைய கண்ணீர் ததும்பிய முகத்தை நீங்கள் பார்த்தால் உடனே உங்களுடைய மனம்கூட மாறிவிடும்!" என்றாள் வானதி.

"அப்படியானால், என் மனம் கல் மனம் என்றா சொல்கிறாய்?" என்றாள் குந்தவை சிறிது கோபமாக.

"தங்களுக்கு உண்மையிலேயே கல் மனம் தான், அக்கா! இல்லாவிட்டால் வந்தியத்தேவரைப் பாதாளச் சிறையில் விட்டு விட்டுச் சும்மா இருப்பீர்களா?" என்றாள் வானதி.

"சரி, சரி! அந்தப் பெண்ணை இங்கே வரச் சொல்!" என்றாள் குந்தவை.

வானதி மானைப் போல் குதித்தோடி மறு நிமிடம் மணிமேகலையை அழைத்துக்கொண்டு வந்தாள். (தொடரும்)

### ஆலப்புழையில் பிரபல திருமணம்



ஆலப்புழையில், திருவாளர் கே. ராஜேந்திரபுத்திர பிள்ளையவர்கள் புத்திரி சௌபாக்கியவதி விஜயாளுக்கும், திருவனந்தபுரம் ரிட்டயர்ட் ஜில்லா ஜட்ஜ் திருவாளர் சி. எஸ். லக்ஷ்மண பிள்ளையவர்கள் புதல்வன் சிரஞ்சீவி சுப்பிரமணியனுக்கும் செப்டம்பர் மாதம் 13ம் தேதியன்று திருமணம் வெகு விமரிசையாக நடந்தது.

மணமக்களை வாழ்த்திப் பல பிரமுகர்களிடமிருந்து ஆசிச் செய்திகள் வந்தன. அன்றிரவு இசையாக திரு. எம். எம். தண்டபாணி தேசிகர் அவர்கள் தகுந்த பக்கவாத்தியங்களுடன் இன்னிசை விருந்தளித்தார்கள்.

வாழ்க விஜயாள் வாழ்க சுப்பிரமணியன்

தீபாவளியன்று வெளிவருகிறது

# சக்தி

மாதப் பத்திரிகை

ஆசிரியர் : வை. கோவிந்தன்

அரசியல், இலக்கியம் (கதை, கட்டுரை, கவிதை) பொருளாதாரம் சயன்ஸ், சமூகம்—இன்னும் பல விஷயங்கள். பெரும் புகழும் பெற்ற எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள்.

கிளேஸ் காகிதத்தில்
60 பக்கம். மூவர்ண அட்டை

**விலை அணா 4**
**வருட சந்தா ரூ. 3**

எங்கும் ஏஜண்டுகள் தேவை

**சக்தி காரியாலயம், சென்னை-14**

---

# தமிழ் வால்மீகி ராமாயணச் சுருக்கம்

பண்டித S. M. நடேச சாஸ்திரி
மொழிபெயர்ப்பைத் தழுவியது

★

451 பக்கங்கள்

**விலை ரூ. 4-8-0**

★

**கே. மஹாதேவன்**
82-A. ராயப்பேட்டை ஹைரோடு
மயிலாப்பூர் - சென்னை-4

---

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டிகளுக்கு

○●○

**பிரதி மாதாந்திர விஜயம்**

நோயாளிகளின் நன்மையை உத்தேசித்து, கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதத்திலும், குறிப்பிட்ட தேதிகளில் முறையே, எமது டாக்டர் ஆலோசனை கூறுவதற்குத் தயாராக இருப்பார். ஆலோசனைக்குரிய காலமும் இடமும் வழக்கம்போலவே.

| இடம் | தேதி | இடம் | தேதி | இடம் | தேதி |
|---|---|---|---|---|---|
| கரூர் | 1 | தென்காசி | 12 (A.M.) | நன்னிலம் | 21 (P.M.) |
| சேலம் | 2 | திருவனந்தபுரம் | 13 | மாயவரம் டவுன் | 22 |
| ஈரோடு | 3 (A.M.) | ராஜபாளையம் | 14 (A.M.) | சீர்காழி | 23 (A.M.) |
| திருப்பூர் | 3 (P.M.) | காரைக்குடி | 15 | சிதம்பரம் | 24 |
| கோயமுத்தூர் | 4 | புதுக்கோட்டை | 16 (A.M.) | கடலூர் | 25 |
| பாலக்காடு | 5 (A.M.) | தஞ்சாவூர் | 17 | விழுப்புரம் | 26 |
| பழனி | 6 (A.M.) | பட்டுக்கோட்டை | 18 (A.M.) | திருக்கோவிலூர் | 27 (A.M.) |
| திண்டுக்கல் | 6 (P.M.) | திருத்துறைப்பூண்டி | 18 (P.M.) | விருத்தாசலம் | 27 (P.M.) |
| மதுரை | 7 & 8 | மன்னார்குடி | 19 | காஞ்சிபுரம் | 28 |
| கோயில்பட்டி | 9 (A.M.) | திருவாரூர் | 20 | வேலூர் | 29 |
| திருநெல்வேலி | 10 & 11 | நாகபட்டினம் | 21 (A.M.) | சித்தூர் | 30 (A.M.) |

விவரங்களுக்கு எழுதவும் :

**ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்**
மதராஸ்-4 ★ திருச்சிராப்பள்ளி (தெப்பக்குளம்) ★ கும்பகோணம் (பெரிய தெரு)

# அன்பின் ஆற்றல்

த. நடராஜன்

மாலை ஏழு மணி யிருக்கும். சென்னைக் கோட்டை ரயில்வே ஸ்டேஷன் மாடிப் படியிலிருந்து ஒரு இளைஞன் வேகமாக இறங்கிச் சென்று கொண்டிருந்தான். அவனைப் பார்த்தால் படித்தவன் போலவும், பணக்காரர் வீட்டுப் பிள்ளை போலவும் தோன்றினான். அவன் அணிந்திருந்த ஆடம்பர உடைகள் அவனை மற்றவர்கள் நம்பும் படி செய்து கொண்டிருந்தன. இருந்தாலும், அவனை ஓர் உருவம் மட்டும் நம்பவில்லை.

தன்னை நம்பாமல் தன் பின்னால் ஒருவர் தொடருவதைத் தெரிந்து கொண்டவுடன் அவன் கடற்கரைக்குச் செல்லும் வழியாகத் திரும்பினான். அந்த வீதியில் அப்பொழுது மனிதர்கள் நடமாட்டம் குறைவாக இருந்ததனால்தான் அவன் அப்படித் திரும்பினான். ஆனால் அவன் மனத்தில் எண்ணங்கள் நடமாடத் தொடங்கி விட்டன. ஏதேதோ சிந்தித்த வண்ணம் வேகமாக நடந்து கொண்டிருந்தான். உடனே பின்புறத்திலிருந்து 'தம்பி, நில்லு!' என்று ஒரு குரல் கேட்டது. அதைக் கேட்டும் கேட்காதவன்போல் நடந்து கொண்டே யிருந்தான். மறுபடியும் "தம்பி, உன்னைத்தான்! போகாதே நில்லு!" என்று அழுத்தம் திருத்தமாகக் கேட்டது. அதற்குமேல் அவனால் அடியெடுத்து வைக்க முடியவில்லை. தயங்கிக் கொண்டே திரும்பினான்.

ஒரு பெரியவர். வயது ஏறக்குறைய அறுபது இருக்கும். தூய வெள்ளாடை யுடுத்தி, தலையில் பாகை யணிந்து, கையில் குடை பிடித்து, தடிக்குப் பதில் ஊன்றி வேகமாக வந்து கொண்டிருந்தார்.

அந்தப் பெரியவர் ஏன் தன் பின்னால் தொடருகிறார் என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும், ஒன்றும் தெரியாதவன் போல், "யாரது" என்று சொல்லிக் கொண்டே நின்றான்.

பெரியவர் அருகில் நெருங்கி வந்து, "தம்பி! உனக்குச் செலவுக்கு ஏதாகிலும் பணம் வேண்டுமா?" என்றார்.

இளைஞனுக்குக் கோபம் வந்து விட்டது. "ஐயா! என்னைப் பிச்சைக்காரன் என்றா நினைத்தீர்?" என்றான் இளைஞன்.

"அப்பா! அந்த நல்ல பெயரை உனக்குக் கொடுக்க நான் என்ன அறிவற்றவனா!"

"ஆம்மாம். உங்கள் அறிவுக்கு ஆள் நிதானம் கூடப் புரியாது போயிருக்கிறது!"

"தம்பி! 'பிக்பாக்கட்' அடிக்கும் ஒருவனைப் பிச்சைக்காரனென்று சொல்லுமளவுக்கு என் அறிவு மழுங்கிவிட வில்லை."

"ஏ கிழவா! மரியாதையாகப் பேசு."

"அப்பா! ஆத்திரப்படாதே. மரியாதைக் குறைவாக நடந்து உனக்குத் தொல்லை கொடுக்க வேண்டுமென்று நான் வரவில்லை. மரியாதை என்றால் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதைக் கற்றுக் கொடுத்து உனக்கு நன்மை செய்வதற்காகவேதான் வந்திருக்கிறேன்."

"தம்பி! ஒரு மனிதரைப் பார்த்து இவர் நாணயமுடையவர் என்று சொல்லுகிறோம். அந்தப் பெருமை அவருக்கு எப்படி வந்தது? அவர் நடந்து கொள்ளும் விதமல்லவா அவருக்கு அந்தப் பெயரைச் சம்பாதித்துக் கொடுக்கிறது? ஒரு மனிதன் பிறருக்குக் கெடுதி நினைக்காமல் எவ்வளவுக் கெவ்வளவு உதவி செய்கிறானோ அவ்வளவுக் கவ்வளவுதானே அவன் மதிப்பு உயரும்!

"தம்பி! உன்னைப் பார்த்தால் நல்லவனாகத் தெரிகிறது. இல்லாவிட்டால் என் சொல்லை இவ்வளவு பொறுமையோடு கேட்டுக் கொண்டிருக்க மாட்டாய். ஏதோ சந்தர்ப்ப வசம் உன்னை இக்கொடிய செயலில் இறக்கி விட்டிருக்கிறது. அதே சந்தர்ப்ப வசம் இப்பொழுது உன்னை நல்லவனாகவும் ஆக்கப் போகிறது. ஏன் தம்பி! இப்படி அன்றாடம் திருடிப் பிழைத்துக் கொண்டிருக்கிறாயே! அது யாரிடத்தில்?"

"அதுவா! ஏழை எளியவர்களை வாட்டி அவர்களுடைய இரத்தத்தை உறிஞ்சி, மாட மாளிகை கட்டிக் கொண்டு சுகபோக வாழ்வில் இருக்கிறார்களே அந்தப் பணக்காரர்களிடத்தில்."

"தம்பி! பணக்காரர்களிடத்திலிருந்து திருடுகிறேன் என்கிறாயே, அது எவ்வளவு தவறென்று இப்பொழுது தெரிந்து கொள். நானும் ஒரு பணக்காரன்தான். என்னிடத்திலிருந்து மணி பர்ஸைத் திருடினாயே அதில் என்ன இருக்கிறதென்று பார்!" என்றார்.

உடனே இளைஞன் சுறுசுறுப்போடு மணிபர்ஸை எடுத்துத் திறந்து பார்த்தான். அதில் ஒரு நான்கணாவும், அவனுடைய புகைப்படம் ஒன்றும் இருந்தன. இளைஞனுக்குச் சொல்லி முடியாத திகைப்பு உண்டாகி விட்டது.

"பெரியவரே! என்னுடைய படம் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது!" என்றான் இளைஞன்.

"தம்பி! என்னைப் போலீசின் ஒற்றனென்று நினைக்காதே. அப்படி யிருந்தால் உன்னைத் திருத்துவதற்காக இவ்வளவு நேரம் வாதாடி யிருக்க மாட்டேன். என்னை நம்பு. இந்தப் படம் கிடைத்த கதை ஒரு பெரிய கதை. இனி நான் திருடுவதில்லை என்று சத்தியம் செய்து கொடுத்தால் அதைப் பற்றிச் சொல்லுகிறேன்" என்றார்.

"பெரியவரே! எனக்குத் தாயுமில்லை, தந்தையுமில்லை. உலகுக்கே தாய் தந்தையாகிய கடவுளின் மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன். இனி நான் திருடுவதில்லை" என்றான் இளைஞன்.

"இப்பொழுதுதான் என் மனம் குளிர்ந்தது. தம்பி! இதோ அருகில்தான் இருக்கிறது என் வீடு. தடைசொல்லாமல் என்னுடன் வா. சிறிது களைப்பாறி விட்டு, உனக்கு எதனால் இந்தத் துன்பம் நேர்ந்தது என்பதைச் சொல். பிறகு படம் கிடைத்ததைப் பற்றி நான் சொல்லுகிறேன்" என்று சொன்னார்.

இருவரும் அங்கிருந்து சென்றார்கள்.

* * *

அந்த மாளிகையே ஒரு கலைக் கோயிலாகக் காட்சி யளித்தது அந்த இளைஞனுக்கு. முதல் வாசற்படியிலேயே 'அன்பு நிலையம்' என்று பெயர் பொறிக்கப் பட்டிருந்ததைக் கண்டான். மாளிகைக்கும் 'கேட்'டிற்கும் நடுவிலுள்ள சிறிய பாதையில் சென்று கொண்டிருக்கும் பொழுது இருபுறங்களிலுமுள்ள மல்லிகைச் செடிகளிலும் முல்லைக் கொடிகளிலும் பூத்துக் குலுங்கிய பூக்களின் மணம் அவனுக்கு ஒருவித இன்பத்தை உண்டாக்கியது. பலவித நிறங்களில் எரிந்து கொண்டிருந்த மின்சார விளக்குகளின் அழகு கண்ணுக்கினிய



காட்சியாக இருந்தது. மாளிகையின் உட்புறத்தில் நுழையும்பொழுது 'தெய்வம் தெளிமின்' 'தெளிந்தோர்ப் பேணுமின்' என்று பொறிக்கப்பட்டிருந்ததைக் கண்டு அவன் உடல் சிலிர்த்தது. அழகிய பீரோக்களில் புத்தகங்கள் வரிசை வரிசையாக அடுக்கப் பெற்றிருந்தன. கூடத்தின் நடுவில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் இருவரும் உட்கார்ந்தார்கள். எதிரிலிருந்த மேஜைமேல் தேவாரம், சிலப்பதிகாரம், திருக்குறள் மூன்றையும் ஒன்றன்மேல் ஒன்றடுக்கிப் பூச்சூட்டப்பட்டிருந்தது. இளைஞனுக்கு இப்படியும் ஒரு பணக்காரர் இருக்கிறாரா என்று வியப்பாய்ப் போய் விட்டது. உடனே ஒரு ஆள் சுக்கு, மிளகு, நன்னாரி வேர் போட்டுக் காய்ச்சின காப்பியை எதிரில் கொண்டு வந்து வைத்தான்.

பெரியவர், " தம்பி, சாப்பிடு !" என்றார்.

இளைஞன் நன்றி உணர்ச்சியோடு சாப்பிட்டு விட்டுத் தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தான்.

* * *

என் சொந்த ஊர் நெல்லிவனம். நான் என் தாய் தந்தையருக்கு ஒரே பிள்ளை. சிறு வயதிலேயே எங்களைத் தவிக்க விட்டு விட்டு என் தந்தை இறந்து விட்டார். வறுமை எங்களை அணைத்துக் கொண்டது.

என் தந்தை இறக்கும்பொழுது எங்களுக்கு வைத்துவிட்டுப் போன சொத்து நாங்கள் இருந்த வீடும், இரண்டு காணி நிலமும்தான். வறுமை மிஞ்சவே அவைகளை ஒவ்வொன்றாக அடகு வைத்துச் சாப்பிட வேண்டிய நிலை எங்களுக்கு ஏற்பட்டு விட்டது.

ஆனால் அப்பொழுது சிறுவனாக இருந்த எனக்குக் கவலை தெரியவில்லை. பள்ளிக்கூடத்துக்குச் சென்று திரும்பும்பொழுது பெரிய பெரிய ஆறுகளிலும் ஏரிகளிலும் ஆடிக் குதித்து நீந்தி வீடு திரும்புவேன். அப்பொழுது என் தாய் துன்ப ஆற்றில் சிக்கிக் கவலைப் படுகுழிகளில் வீழ்ந்து கண்ணீர் வடித்து என் வருகையை எதிர்பார்த்துத் தெரு வாசற்படியில் உட்கார்ந்து கொண்டிருப்பாள். நான் தூரத்தில் வரும்பொழுதே ஓடிவந்து 'பொன்னம்பலம்' என்று சேர்த்துக் கட்டிக் கொண்டு புலம்புவாள். "அப்பா ! இந்த உலக வாழ்வு வெறுத்து விட்டது. இந்த வீட்டிலுள் இருக்கவும் மனமில்லை. உன் ஒருவனுக்காகவே இந்த உடலைச் சுமந்துகொண்டு திரிகிறேன். நீ அருகில் இருந்தால் உன் முகத்தைப் பார்த்து ஆறுதலடைவேன். இனி பள்ளிக்கூடம் விட்டதும் சீக்கிரம் வீடுவந்து சேர்ந்துவிடு" என்று துக்கம் நெஞ்சை அடைக்கக் கூறுவாள்.

நாட்கள் உருண்டன. வளர்ந்த பிள்ளையானேன். கூடவே வறுமையும் வளர்ந்தது. என் தாய் அரும் பாடுபட்டு என்னைப் படிக்க வைத்தாள். எட்டாவது வகுப்பை எட்டிப் பிடித்தேன். அதற்கு மேல் எட்ட முடியவில்லை. உத்தியோகம் பார்க்குமளவுக்கு என்னைப் படிக்க வைக்க வேண்டுமென்று நினைத்த என் தாயின் நினைப்பில் மண் விழுந்தது. வாங்கின கடனுக்கு வட்டி வளர்ந்து விட்டது. தெருவில் தோட்டி தமுக்கை எடுத்துக் கொண்டு வந்து நின்று விட்டான். என் தாய் எவ்வளவு அழுது புரண்டும் பயன்படவில்லை. எங்கள் வீடு ஏலம் விடப்படுமென்று பறை சாற்றப்பட்டு விட்டது.

நெல்லிவனத்துக்கு இருபத்தைந்து மைலில் புன்னைவனமென்ற ஒரு ஊர். அதில் என் தாய் மாமன் வாழ்ந்து வந்தார். கெட்டு நொந்து ஒருவர் வீட்டுக்குப் போகக் கூடாது என்று தெரிந்திருந்தும் என் தாய் அங்கே போகத் துணிந்தாள்.

என் மாமன் நல்ல பணக்காரராக வாழ்ந்தார். எங்களை ஆதரிக்க வேண்டுமென்ற நினைப்பும் அவருக்கு இருந்தது. ஆனால் அவருக்கு வந்த மனைவியும் அப்படியே இருப்பாளா !

முதலில் எங்களுக்கு வரவேற்பு பலமாக இருந்தது. நாட்கள் செல்லச் செல்ல மதிப்புக் குறைந்தது. என் மாமிக்கு நாங்கள் அங்கிருப்பது பிடிக்கவில்லை. மாமனிடத்தில் பலவாறாக எங்களைப் பற்றிக் கோள் சொல்ல ஆரம்பித்தாள். என் தாயை வேலைக்காரிபோல் ஆட்டி வைத்தாள்.

என் தாய் படும் துன்பத்தைப் பார்த்து மனம் பொறுக்காமல் எங்கேயாவது போய் விடலாமா என்று நினைப்பேன். அதே நேரத்தில் போக வொட்டாமல் இழுத்துப் பிடிக்கும் ஒரு பாசத்தை நினைத்துத் தவிப்பேன்.

என் மாமனுக்கு ஒரே மகள். அவள் பெயர் கமலம். பெயருக்குப் பொருத்தமாக அவளுக்கு அழகும் அமைந்திருந்தது. சூரியன் அஸ்தமிக்கும் பொழுது ஏற்படும் செவ்வானத்தைப் போன்ற உடலழகு. சந்திரனைப் போன்ற முகம். மை இருட்டைப் போன்ற கரிய கூந்தல். மலரைப் போன்ற கண்கள். கோவைப் பழம் போன்ற அவள் உதட்டைக் கிளி மூக்கைப் போன்ற அவள் மூக்கு கொத்தத் தாவுவது போலிருக்கும். ஒளியில் இருள் மறைவதுபோல் அவள் சிரிப்பில் என் கவலை மறைந்து விடும்.

அவள் என்னைத் தோழனாக்கிக் கொண்டாள். அவள் எனக்குத் தோழியானாள். இருவரும் சேர்ந்து விளையாடிப் பொழுதைப் போக்குவோம்.

வீட்டுக்கு அடுத்தாற்போல் பெரிய மாந்தோப்பு. அதற்குப் பக்கத்தில் ஒரு தாமரைக் குளம். கமலத்தை அழைத்துக்கொண்டு மாந்தோப்பில் நுழைவேன். மாங்காய் அடித்து அவளுக்குக் கொடுப்பேன். தாமரைக் குளத்தில் குதித்துத் தாமரை மலர்களை அவளுக்குப் பறித்துக் கொடுப்பேன்.

நாங்கள் இப்படிப் பழகுவது என் மாமிக்குப் பிடிக்கவில்லை.

கமலம் பருவ மடைந்தாள் முன்போல் அவளுடன் பழக முடியாதபடி என் மாமியின் கொடுமை தடுத்து விட்டது. ஆனால் என் இளமைக்கு வறுமை தெரியவில்லை. அப்படியே அவளுக்கும் அவள் பெருமை தெரியவில்லை. சேந்

றில் மூழ்ந்த செந்தாமரை போல் என் ஏழை நெஞ்சத்தில் இடம் பெற்றுவிட்டாள் கமலம்.

கமலம் என்னுடன் பேசக் கூடாது என்பது என் மாமியின் கட்டளை. ஆனால் சமயம் பார்த்து என்னுடன் கலந்து கொள்வாள்.

ஒருநாள் காலையில் குடத்தை எடுத்துக் கொண்டு குளத்துக்குச் சென்றாள். நானும் அவள் பின் தொடர்ந்தேன். சூரியன் உதயம் கண்டு தாமரைகள் எல்லாம் அழகாக மலர்ந்திருந்தன. ஒரு மலரைப் பறித்து அவள் கையில் கொடுத்து "இதன் பெயர் என்ன தெரியுமா ?" என்றேன்.

" தாமரை " என்றாள்.

" இதற்குக் கமலம் என்று ஒரு பெயர் இருக்கிறதே உனக்குத் தெரியுமா ?" என்றேன். சிரித்தாள். அவள் சிரிப்பில் மெய்ம்மறந்து நின்றேன். உடனே அவள் என்னைக் கேள்வி கேட்கத் தொடங்கி விட்டாள்.

" இந்தப் பூ மலருவதற்கு யார் காரணம் ?"

அவள் கருத்தைப் புரிந்து கொண்டு குறும்பாக " நீதான் சொல்லேன் " என்றேன். அதற்கு அவள் அன்பாக என்னைப் பார்த்து முல்லைச் சிரிப்புச் சிரித்து கொண்டே, அந்த இடத்தை விட்டு நகர்ந்தாள்.

என் தாய் அவ்வளவு துன்பத்தையும் பொறுத்துக் கொண்டு அங்கே இருந்ததற்குக் காரணமுண்டு. நாங்கள் சுகமாக வாழ்ந்த காலத்தில் 'உன் பிள்ளைக்கே என் பெண்ணைத் தருகிறேன் ' என்றாராம் என் மாமன். அன்று மனத்தை விட்டும் கேட்டு விட்டாள் என் தாய். அவ்வளவுதான். என் மாமி சீறினாள். " பிச்சைக்கார நாய்களுக்குப் பெண் வேறு வேண்டுமோ !" என்றாள். " இந்த நினைப்புடன் இங்கே இருக்க வேண்டியதில்லை. வெளியே கிளம்புங்கள் !" என்றார் என் மாமன். அதற்குமேல் எங்களால் அங்கே இருக்க விருப்பமின்றி அவ்விடத்தை விட்டு வெளியேறினோம்.

அப்படிப் புறப்படுமுன் கமலத்தை மறைவில் சந்தித்து அழுதேன். " உன்னை விட்டுப் பிரிந்து போகப் போகிறேன் " என்று சொல்லி முடிவில் அவளிடம் என்னுடைய புகைப் படம் ஒன்றைக் கொடுத்தேன்.

நானும் என் தாயும் அழுது கொண்டே வெளிக்



கிளம்பினோம். சூரியன் மலைவாயில் விழுந்து கொண்டிருந்தான். கமலத்தின் முகம் சுருங்கி விட்டது. கண்களில் நீர் சோர எங்களையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

கவலையே என் தாய்க்கு நோயாக மாறிவிட்டது. ஒரு சிறிய ஊரில் மரத்தடியில் வந்து தங்கினோம். அங்கேயே என் தாய் படுக்கையாகப் படுத்து விட்டாள். இரண்டு நாளில் என்னை விட்டுவிட்டு என் தாய் மறைந்து விட்டாள். நான் தனியாக நின்று விட்டேன்.

அதே மன வருத்தத்தோடு சென்னைக்கு வந்தேன். பல இடங்களில் சுற்றி வேலை தேடினேன். வேலை கிடைக்கவில்லை. ஒரு நாள் எழும்பூர் ஸ்டேஷனை விட்டு இறங்கும்பொழுது என் சட்டைப் பையிலிருந்த மணிபர்சை எவனோ திருடிக் கொண்டான். உடனே எனக்கு ஒரு எண்ணம் தோன்றியது. 'நாமும் ஏன் இந்தத் தொழிலைச் செய்யக் கூடாது !' கமலத்தை அடைவதற்குப் பணம் சம்பாதிக்க வேண்டுமானால் இதுதான் சிறந்த வழி என்று நினைத்துத் திருடிக் கொண்டுவந்தேன். கடைசியில் அந்தக் கொடுந் தொழில் உங்களால் ஒழிக்கப்பட்டது. திருட்டே திருட்டை ஒழித்தது என்று கூறி முடித்தான்.

உடனே பெரியவர் " தம்பி, நேரம் ஆகிவிட்டது. நாளைக்கு வந்து விடு. படம் கிடைத்த கதையைப் பற்றிச் சொல்லுகிறேன் " என்றார். இளைஞன் மறுநாள் வந்தான். அன்றைக்கும் ' நாளைக்காகட்டும் ' என்றார். இப்படியே ஒரு வாரம் கழிந்தது.

அன்றுமாலை பொன்னம்பலம் நாலு மணிக்கே வந்து விட்டான். பெரியவர் ஒரு அறையில் உட்கார்ந்து எதையோ படித்துக் கொண்டிருந்தார். இளைஞன் அவர் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு " என்ன பெரியவரே ! தெரு வாசற்படியில் பந்தல் தடபுடலாக இருக்கிறதே " என்றான். ' ஆமாம். நாளைக் காலையில் எனக்குக் கல்யாணம்' என்றார். இளைஞனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. குலுங்கக் குலுங்கச் சிரித்தான். உடனே பெரியவர் "தம்பி! இங்குதானிரு. இதோ வருகிறேன்" என்று வெளியில் வந்து கதவை இழுத்துப் படார் என்று சாத்தி வெளிப் பக்கம் பூட்டுப் போட்டுக் கொண்டு வெளியே போய் விட்டார். இளைஞன் நடுநடுங்கி விட்டான். கதவை இரு கைகளாலும் ஓங்கி ஓங்கி அடித்தான். ஒன்றும் பயன் பெறவில்லை.

பொழுது விடியும் நேரம். மேளச் சத்தம் கேட்டது. உடனே பெரியவர் இரண்டு பேரோடு வந்து சிரித்துக் கொண்டே கதவைத் திறந்தார். கையில் ஒரு தட்டில் கூறை வேட்டியும் பூமாலையும் இருந்தன. இளைஞனுக்கு அவரைப் போற்றுவதா தூற்றுவதா என்று தெரியவில்லை.

" தம்பி ! இந்த வேட்டியைக் கட்டிக் கொண்டு மாலையைக் கையிலெடுத்துக் கொள் " என்றார்.

" ஐயா ! என்னை விட்டுவிட்டால் போதும். உங்கள் செயல் எனக்குப் பயமாக இருக்கிறது " என்றான் பொன்னம்பலம்.

"நீ இந்த வீட்டை விட்டுப் போகுமளவும் என் சொற்படிதான் கேட்டாக வேண்டும். சீக்கிரம் கட்டிக் கொள்" என்று அதட்டினார். மறுத்துப் பேச முடியாமல் புது ஆடையைக் கட்டிக் கொண்டு அவரைப் பின் தொடர்ந்தான்.

சூரியன் உதிக்கும் நேரம். கண்ணீரும் கம்பலையுமாக மணவறையில் உட்கார்ந்து கொண்டிருந்த கமலம் பொன்னம்பலத்தைக் கண்டதும் முக மலர்ச்சியோடு ஓடி வந்து 'அத்தான்' என்று சேர்த்துக் கட்டிக் கொண்டாள். பொன்னம்பலத்தின் முகம் பொன்னைப்போல் ஒளி வீசியது. மங்கல மேளம் முழங்கப் பொன்னம்பலம் கமலத்திற்கு மாலையிட்டான். உடனே கூட்டத்தில் சலசலப்பு எழுந்தது. பெரியவர் அவர்களை அடக்கி விட்டுப் பேசத் தொடங்கினார்.

"அன்பர்களே! இந்த உலகம் பொல்லாத உலகம். நல்லவர்களைப் பொல்லாதவர்களாக்குகிறது. பொல்லாதவர்களை நல்லவர்களாக நம்புகிறது. இந்தப் பொன்னம்பலத்தை யாரென்று நினைக்கிறீர்கள்! இதோ இருக்கிறாரே பெண்ணின் தகப்பனார் இவருடைய தங்கை மகன்தான். இவன் அனாதையானதற்குக் காரணம் இவர்தான். ஏழை என்ற காரணத்தால் உண்மைக் காதலைப் பிரித்து இவனை வீட்டை விட்டு ஓட்டிவிட்டார். அதே நேரத்தில் பணத்துக்கு ஆசைப்பட்டுக் கொண்டு அறுபது வயதுக் கிழவனென்று கூடப் பார்க்காமல் எனக்குப் பெண் கொடுக்க இசைந்தார்.

"இவரைக் குறை கூறுகிறேனே, நான் மட்டும் என்ன யோக்கியன்! வயது அறுபது ஆகிறது. எத்தனையோ நீதி நூல்களைப் படித்திருக்கிறேன். நல்லதையே நினைத்து நல்லதையே செய்து சாக வேண்டிய பருவம். இந்த வயதில் ஒரு இளம் பெண்ணின் வாழ்வைப் பாழாக்கத் துணிந்தேனே! என்னைவிடக் கொடியவன் யார் இருப்பான்! நல்ல வேளையாக இந்தக் கமலம் என் மனத்தில் படிந்த மாசைப் போக்கி விட்டாள்.

"ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன் என் மனைவி இறந்து விட்டாள். அதன் பிறகு பலவித தொண்டுகளைச் செய்தும் படித்துக் கொண்டும் காலத்தைக் கடத்தி வந்தேன். ஆனால் மனத்தில் ஒரு மூலையில் குழந்தை இல்லையே என்ற குறை இருந்து வந்தது.

"இதை அதிகப்படுத்துவதற்கு ஒரு நண்பர் வந்து சேர்ந்தார். நல்ல பயிரில் புல் முளைப்பது போல் அவர் துர்ப்போதனை என் மனத்தில் படிந்து விட்டது. அவரே இந்தக் கமலத்தைப் பேசி முடித்தார். மறு மணத்துக்கும் என் மனம் ஒத்துக் கொண்டது.

"திருமணம் நடப்பதற்கு ஒரு வாரத்திற்கு முன் எனக்கு ஒரு கவர் வந்தது. அதைப் பிரித்தேன். அதில் இந்த இளைஞனுடைய படமும் ஒரு கடிதமும் இருந்தன. ஆர்வத்தோடு கடிதத்தைப் படித்தேன். மனம் இளகி விட்டது.

"'தாத்தா! நான் உங்களுக்குப் பேத்திமாதிரியல்லவா! என்னை எப்படி மணக்கத் துணிந்தீர்கள்!' என்பதைப் போன்ற வரிகள் என் உள்ளத்தை எட்டி கொண்டு குத்தின. என்னுடைய மனம் திருந்தி விட்டது.

"என்னைத் திருத்திய உத்தமிக்கு நன்மை செய்ய வேண்டுமென்று நினைத்தேன். இவள் காதலன் படத்தை எடுத்துக் கொண்டு எங்கெங்கும் சுற்றி அலைந்தேன். இதைப் பற்றி ஒருவருக்கும் சொல்லாமல் திருமணத்தை ஒத்திப் போட்டுக் கொண்டே வந்தேன்.

"நல்ல வேளையாக ஒரு வாரத்துக்கு முன் இவன் கிடைத்துவிட்டான். தெய்வமே இவனை நம்மிடத்தில் கொண்டுவந்து சேர்த்தது என்று நினைத்து இவனைக் கட்டிக் காத்து இப்பொழுது இவளிடத்தில் ஒப்புவித்து விட்டேன். அது மட்டுமல்ல. என் சொத்து முழுவதும் இவர்களுக்கே எழுதி வைத்துவிட்டேன்" என்று கூறி முடித்தார்.

பொன்னம்பலமும், கமலமும் ஆனந்தக் கண்ணீர் சொரியப் பெரியவர் காலில் வீழ்ந்து வணங்கினார்கள். மற்றவர்கள் எல்லோரும் பெரியவரின் பண்பைப் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்தார்கள்.

## உதவி நடனக் கச்சேரி

சென்னை நகர சபை அங்கத்தினரில் தமது தொகுதியில் வசிக்கும் ஜனங்களுக்குச் சிறந்த தொண்டு ஆற்றி வருகிறவர்களில் ஒருவர் ஸ்ரீ கே. எம். சுப்பிரமணியம் பி. ஏ. அவர்கள். மேற்கு மாம்பலம் உயர்தரப் பள்ளியை நடத்தும் நிர்வாகக் கமிட்டியின் தலைவராக இருந்து அப் பள்ளியின் வளர்ச்சிக்கு ஸ்ரீ கே. எம். சுப்பிரமணியம் அவர்கள் பேருதவி புரிந்து வருகிறார்.



மேற்கு மாம்பலம் ஹைஸ்கூலுக்கு நல்ல கட்டிடம் இல்லாத குறையைத் தீர்க்கத் தற்போது தீவிர முயற்சி நடந்து வருகிறது. அடுத்த ஆண்டுக்குள் புதுக் கட்டிடத்துக்குப் பள்ளிக்கூடத்தைக் கொண்டு போகத் திட்டமிட்டிருக்கிறார்கள். இந்தச் சிறந்த நோக்கம் நிறைவேறுவதற்கு உதவி செய்ய ஸ்ரீ கே. எம். சுப்பிரமணியத்தின் சின்னஞ் சிறு குமாரிகள் முன் வந்திருக்கிறார்கள். குமாரிகள் சரஸ்வதி— ருக்மணியின் பரத நாட்டிய உதவிக் கச்சேரி நவம்பர் மீ 1உ ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்குச் சென்னை அண்ணாமலை மன்றத்தில் நடைபெறுகிறது. ரஸிகர்கள் திரளாக விஜயம் செய்து கல்வித் தொண்டுக்கு உதவி செய்யும்படி கோருகிறோம்.




நீடித்து உழைக்கும் தன்மையே பின்னியின் துணிகளை நம் நாட்டிலேயே மிகச் சிறந்தவையாக மதிக்கப்படுமாறு செய்கிறது. லட்டமின் ஷர்ட்டிங்குகள், ஜனுவா சூட்டிங்குகள், டிரில்கள் போன்ற நீண்ட நாட்களுக்கு உழைக்கக்கூடிய லாங்போரைட் துணிகள் பற்பல அழகிய டிசைன்களில் எங்களது ஷோரூம்களில் கிடைக்கும்.

**VENKATESH VASTRALAYA**

ஷர்ட்டிங்க்ஸ்-மிகப் புதிய போக்கான
"மாஸ்காட்"
துணியைக் கேட்டு வாங்குங்கள்

தி பெங்களூர் உல்லன் காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிட்., தயாரிப்பு

சில்லரையில் கிடைக்குமிடம்:

# வெங்கடேஷ் வஸ்த்ராலயா

டெலிபோன்: 4688

2, தம்பு செட்டித் தெரு :: சென்னை - 1

---

**தீபாவளி விற்பனை**

எங்களது வாடிக்கைக்காரர்களின் சௌகரியத்திற்காக எங்கள் ஷோரூம் 1-11-1953 ஞாயிற்றுக்கிழமை திறந்து இருக்கும்.




பத்மாஸனியின் பெற்றோர் கல்யாண மார்க்கெட்டில் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்து விட்டுத் தான் பார்த்தசாரதியை 'நல்ல வரன்' என்று தேர்ந்தெடுத்தார்கள்.

பார்த்தசாரதிக்கு என்ன குறைச்சல். 'இன்ஜினியரிங் கல்லூரி'யில் படித்து மாகாணத்திலேயே முதல் மாணவனாகத் தேறியிருந்தான். அவன் பெற்றோர்களும் நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அவனும் ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டிருந்தான். அதனால் அவனுக்கு நிச்சயமாகப் பெயரும் புகழும் செல்வமும் கொழிக்கப் போகிறது. ஆகவே இந்த வரன் கிடைக்க வேண்டுமென்றால் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே என்று நினைத்தார்கள்.

பத்மாஸனிக்கும் பார்த்தசாரதிக்கும் ஒரு நல்ல முகூர்த்தத்தில் கல்யாணம் நடந்தது.

கல்யாணமான சில தினங்களில் பத்மாஸனியும் பார்த்தசாரதியும் சென்னையில் தனிக் குடித்தனம் ஆரம்பித்தனர்.

பத்மாஸனி ரொம்ப ஆசை வைத்திருந்தாள். சென்னையில் குடித்தனம் ஆரம்பித்தால் தினம் தானும் தன் கணவனும் கடற்கரைக்குப் போகலாம், சினிமாவுக்குப் போகலாம் இன்னும் எத்தனையோ விதங்களில் உல்லாசமாக இருக்கலாம் என்று நினைத்தாள்; கனவு கண்டாள்.

கனவில் வேறு விதமாக இருந்தது.

பார்த்தசாரதி ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டிருந்தான். ஆம், அவன் ஏதோ ஒரு நூதன யந்திரம் கண்டு பிடிப்பதில் முனைந்திருந்தான். ஆகவே அவன் மனம் சதா சர்வதா அந்த யந்திரத்தின் மீதே கண்ணும் கருத்துமாக இருந்தது. அவனுக்கு உணவில் புத்தி செல்லவில்லை. உடையில் புத்தி செல்லவில்லை. தனக்கொரு இளம் மனைவி வந்திருக்கிறாள் என்ற நினைப்பே இல்லை! இந்நிலையில் பத்மாஸனியின் ஆசாபாசங்கள் நிறைவேறுவது எப்படிச் சாத்தியம்?

ஒரு நாள் பத்மாஸனி, "இன்றைக்கு வேண்டுமானால் நாம் கடற்கரைக்குப் போய் விட்டு வரலாமா?" என்றாள்.

"இல்லை, பத்மா! நீ வேண்டுமானால் போய் விட்டு, வா! என் இயந்திரத்தின் முக்கியமான கட்டத்திலிருக்கிறேன். இந்தச் சமயத்தில் விட்டு விட்டு வருவதற்கில்லை" என்று கூறினான் பார்த்தசாரதி.

இப்படி எத்தனையோ நாட்களாகி விட்டன!

பத்மாஸனிக்கு நேரம் போவது, பொழுது போவது சிரமமாக இருந்தது. என்ன செய்வாள், பாவம்! அவள் தன் வீட்டுத் தோட்டத்தை அழகுபடுத்த ஆரம்பித்தாள். தோட்டக் கலையில் ஆர்வம் கொள்ளலானாள்!

விதவிதமான புஷ்பச் செடிகளின் விதைகள் எல்லாம் வரவழைத்துத் தன் தோட்டத்தில் விதைத்தாள்.

ஒரு நாள் பார்த்தசாரதி மிக உற்சாகத்துடன் வீட்டுக்கு வந்தான். "பத்மா! பத்மா! என் நூதன இயந்திரம் முடிந்து விட்டது! ரொம்பவும் கீர்த்தியாகப் போய்விட்டது! அடுத்த வாரம் கவர்னர், முதன் மந்திரி ஆகியவர்கள் வந்து பார்வையிடப் போகிறார்கள்!" என்று ரொம்பவும் பெருமிதத்துடன், சொல்லிக் கொண்டான்!

பத்மாவும் ரொம்பவும் குதூகலத்துடன் கேட்டுக் கொண்டாள்!

ஒரு வாரத்துக்குப் பின், 'பார்த்தசாரதிக்குப் பாராட்டுவிழா நடந்தது. பிரமுகர்களும், பொறி இயல் கல்லூரி ஆசிரியர்களும், மந்திரிகளும் பார்த்த சாரதியின் தேசத் தொண்டைப் பற்றிப் பாராட்டிப் பேசினார்கள்; பூமாலைகள் ஏராளமாகச் சூடினார்கள்.

அந்தச் சமயத்தில் பத்மாஸனி வீட்டுத் தோட்டத்தில் புதுப் புது புஷ்பங்கள் ஏராளமாகப் பூத்துக் குலுங்கி யிருந்தன. ஆகா! அவற்றில்தான் எத்தனை நிற பேதங்கள்; கண்ணைக் கவரும் வர்ணங்கள்! வாசனையிலும் எத்தனை வகை! இவற்றைப் பார்த்துப் பார்த்துப் பத்மாஸனி உள்ளம் பூரித்துப் போனான். உள்ளத்தில் மகிழ்ச்சிக் கடல் பொங்கிப் பெருகியது! ஈசனின் அற்புதப் படைப்புத் திறனை எண்ணி எண்ணி வியந்தாள்; தலை வணங்கினான். அத்துடன் நின்றிருந்தால் நன்றாக இருந்திருக்கும்!

அந்தப் பலவர்ணப் புஷ்பங்களில் சிலவற்றைத் தொகுத்து அழகிய பூங்கொத்தாகக் கட்டினாள்.

பார்த்தசாரதி, பலருடைய பாராட்டுக்களைப் பெற்று வீட்டுக்கு வந்ததும், பத்மாஸனி மிக்க அன்புடன் அவனிடம் இந்தப் பூங்கொத்தைக் கொடுத்தாள். அவன் அதன் அழகில் மயங்கவில்லை. அவை வீசும் இன்மணத்தில் புத்தியைப் பறிகொடுக்கவில்லை. ஏன், கண்ணை ஏறெடுத்துப் பார்க்கவில்லை.

"இவற்றையெல்லாம் என்னிடம் ஏன் கொண்டு வந்து கொடுக்கிறாய், பத்மா! எனக்கு வேலை இருக்கிறது!" என்றான் பார்த்தசாரதி வழக்கம் போல்.

பத்மாவுக்குப் புரியவில்லை. இத்தனை நாளும் 'நூதன இயந்திரம் கண்டு பிடிக்க வேண்டும் என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார். இப்பொழுதுதான் அது முடிந்து விட்டதே! இன்னும் அதில் என்ன வேலை இருக்கக் கூடும்? வேறு ஏதாகிலும் புது இயந்திரம் கண்டு பிடிப்பதில் ஈடுபட்டிருக்கிறாரோ' என்று நினைத்தாள். இந்தத் தன் சந்தேகத்தை அன்று சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது கேட்டே விட்டாள்.

"இல்லை, பத்மா! நான் இப்பொழுது கண்டு பிடித்திருக்கிறேன், பார், புது இயந்திரம் அது பெட்ரோலினால் இயங்கக் கூடியது. ஏதோ ஒரு காரணத்தினால் பெட்ரோல் கிடைக்காமற் போய் விட்டால், என்ன செய்வது? ஆகவே, மின்சாரத்தினால் இயக்க வழி வகை கண்டு பிடிக்க முயன்று கொண்டிருக்கிறேன்" என்றான்.

"இப்படி ஒரு பிரச்னை கிளம்பிவிட்டதா?" என்று நினைத்துக் கொண்டாள் பத்மா!

* * *

பங்குனி மாதம். ஒரு நாள் காலை பத்மா தன் படுக்கையை விட்டுத் தோட்டத்துக்கு வந்தபோது அவளுக்கு ஒரு அதிசயம் காத்திருந்தது. அதாவது வீட்டுத் தோட்டத்திலிருந்த இரண்டு மாஞ்செடிகளில் சின்னஞ்சிறு பிஞ்சுகள் கொத்துக் கொத்தாகக் காய்த்துத் தொங்கிக் கொண்டிருந்தன. ஆகா! இந்தப் பிஞ்சுகள் எல்லாம் பத்து நாட்கள் பிஞ்சுகளாகவாவது இருக்க வேண்டும் போலிருக்கிறதே! ஏன் இத்தனை நாளும் என் கண்ணில் படவில்லை. தினமும் தானே இந்தத் தோட்டத்தைச் சுற்றி வருகிறேன். ஆகா! இந்தப் பிஞ்சுகள் எவ்வளவு அழகாக இருக்கின்றன! என்று நினைத்தாள்.

அவள் உள்ளத்தில் சொல்லி முடியாத ஆனந்தம் அலைமோதியது.

அன்று மாலை பார்த்தசாரதியும் என்றுமில்லாதபடி குதூகலமாகத் தென்பட்டான்.

"இன்றைக்கு ஏதாகிலும் விசேஷமுண்டா?" என்றாள்.

"ஒன்றுமில்லை! நான் சொல்லிக் கொண்டிருந்தேன், பார். மின்சார விசையால் எப்படி ஓட்டுவது என்று ஆராய்கிறேன் என்று, ஒரு மாதிரி இன்று அதை முடித்து விட்டேன்" என்று கூறினான்.

"ஓகோ! நம்ம வீட்டு மா மரங்கூடப் பிஞ்சு விடத் தொடங்கி விட்டன!" என்றாள்.

ஆம், இவ்விஷயத்தில் தன் உள்ள மகிழ்ச்சியெல்லாம் கொட்டிப் பேசத் தயாராயில்லை. பார்த்தசாரதி அதை நல்லபடி ரசித்து ரஸிக்கா விட்டால்......?

அவனும் அவள் கூறியதைக் காதில் வாங்கிக் கொண்டதாகக் கூடக் காட்டிக் கொள்ளவில்லை.

பத்மாஸனி நாளில் பெரும் பகுதியைத் தன் தோட்டத்தில் செலவழித்தாள். பட்டுப் போன பூச்செடிகளைக் களைவதிலும், புதிய செடிகளுக்குப் பதியன் போடுவதிலும் தண்ணீர் இறைப்பதிலும், தொட்டிகளை வரிசைப் படுத்துவதிலும் பொழுதைக் கழிப்பாள். மரங்களுக்கும் செடிகளுக்கும் பூச்சி பொட்டுகளினால் ஆபத்து சேர விடாமல் தடுப்பதற்கும் தக்க முயற்சிகள் செய்து வந்தாள். தன் குழந்தையைப் போல் பேணி வளர்த்து வந்தாள்.

பிஞ்சுகளாக இருந்தவையெல்லாம் பருத்த காய்களாகிப் பெரிதாகி வந்தன. அப்படிப் பெருத்த காய்கள் எல்லாம், நீண்ட மாவிலைகளில் பாதி மறைந்தும் மறையாமலும் காட்சியளித்தன. பருவமடைந்த அழகிய மங்கை நாணத்தினால் முகத்தைக் கவிழ்த்துக் கொள்வது போலவும் முகத் திரையினால் முகத்தை மறைத்துக் கொள்வது போலவும் தோன்றியது. தமிழ் நாட்டின் பெண் இயல்பை இந்த மாமரங்கூடப் பெற்றிருக்கும் அதிசயத்தை எண்ணி மனம் பூரித்தாள்.

ஆனால் பார்த்த சாரதியோ இந்த உணர்ச்சிகளில் பங்கு கொள்ளவில்லை. அவன் வேறு ஏதோ யோசனையில், ஆராய்ச்சியில் மூழ்கியிருந்தான். அது என்னவாக இருக்கும் என்று அறிந்து கொள்ள வேண்டும் என்ற உணர்ச்சி பத்மாஸனிக்குக் கொஞ்சங்கூட இருக்கவில்லை.

ஒரு நாள் தோட்டக்காரன், "அம்மா! மாங்காய்கள் எல்லாம் முற்றிவிட்டன! பறித்துப் பழுக்கப் போட வேண்டிய சமயம் வந்து விட்டது!" என்றான்.

"சரி, அப்படியே செய்யேன்" என்றாள்.

நான்கு நாட்கள் கழித்து, பறித்த மாங்காய்களைப் பார்த்தாள். அழகிய மஞ்சள் நிறம் படர்ந்து இனிய மணம் 'கம்'மென்று வீசிக் கமழ்ந்து கொண்டிருந்தன. அதை நறுக்கி ஒரு துண்டை வாயில் போட்டுப் பார்த்தாள். தேனை விட இனித்தது! "அந்தப் பழத்தை அவருக்குக் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும்" என்ற எண்ணம்தான் அவள் மனத்தில் முதலில் உதித்தது!

தட்டு நிறைய மாம்பழத் துண்டுகளை வைத்துப் பார்த்தசாரதி வேலை செய்துகொண்

டிருக்கும் அறைக்குக் கொண்டு போனாள். "இந்த நம் தோட்டத்து மாம்பழத்தைச் சாப்பிட்டுப் பாருங்கள்! என்னமா இனிக்கிறது!!" என்று கூறிக் கொண்டே அவன் முன்னால் வைத்தாள்.

"என்ன பத்மா, இது! மாம்பழம் சாப்பிட இதுவா சமயம்? நான் என் இயந்திரத்தின் உற்பத்தி வேகத்தை நூறிலிருந்து ஆயிரமாகப் பெருக்க என்ன பண்ணலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கும்போது, 'மாம்பழம் சாப்பிடு' என்கிறாயே? அப்புறம் எடுத்துக்கொண்டு போ!" என்றான்.

பத்மாவுக்கு என்ன சொல்வது என்றே புரியவில்லை. "ஈசன் படைப்பில் பூ, காய், கனி யாவும் நிறைவு பெற்று அழகாய்த் துலங்குகின்றன.

"மனிதனின் படைப்பில், ஓயாத பிரச்னைகள்தான் கவலைகள்தான் ஒன்றின் பின் ஒன்றாகத் தலை தூக்குகின்றன" என்று மனத்தில் எண்ணிக் கொண்டே அந்த அறையை விட்டு வெளியேறினாள்!

# இலங்கை நினைவுகள்

சோம. லெ.

இலங்கை என்றதும் கொழும்பு, கண்டி, யாழ்ப்பாணம் ஆகிய நகரங்களே நினைவுக்கு வருவது இயற்கை. காலி, நீர்கொழும்பு போன்ற நகரங்களும் இலங்கையில் முக்கியமானவை. பாராளுமன்ற அங்கத்தினர்கள் இலங்கையின் அன்றாட வாழ்வில் பொது மக்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளும் முறையும் அந்த நாட்டுக்கே சிறப்பாக உரியது.

கொழும்பு, கண்டி இவற்றுக்கு அடுத்தபடி இலங்கையில் பெரிய நகரம் காலி. காலிக்குப் புகழ் தருவது அது கொழும்பிலிருந்து கதிர்காமத்துக்குச் செல்லும் பாதையில் இருப்பதாகும். மற்றொன்று அங்கே சில மாதங்களுக்கு ஒரு முறை குலுக்கப்படும் "ஜிம்கானா ஸ்வீப்" என்னும் அதிர்ஷ்டச் சீட்டு. இரண்டு ரூபாய்ச் சீட்டு வாங்கினால், சிலசமயம் மூன்று லட்சம் ரூபாய்கூடக் கிடைத்துவிடும்! காலி ஒரு சிறந்த துறைமுகம். ஒரு காலத்தில் அங்கு போர்த்துகீசியர் ஆட்சி நடைபெற்றது. துறைமுகத்தின் ஒரு பகுதியில் கடலைத் தூர்த்து, கோட்டை அமைக்கப்பட்டிருக்கிறது. 350 ஆண்டுகளுக்குப் பிறகும், இந்தக் கோட்டையில் உடைவு அரிக்கவில்லை. கோட்டைக்குள்ளேதான் அரசாங்க அலுவலகங்களும் வணிகக் குழுக்களின் அலுவலகங்களும் உள்ளன. இலங்கை முழுவதிலும் தண்ணீர்ப் பிரச்னை இருந்து வருகிறது. காலியிலும் அப்படித்தான். இரவெல்லாம் மழை பெய்தாலும் காலையில் குடிப்பதற்குத் தண்ணீர் கிடைப்பதில்லை. தண்ணீர் முழுவதும் கடலில் போய் விழுந்து வீணாகி விடுகிறது. போர் நடந்த போதுதான், காலி செல்வச் செழிப்புடன் விளங்கிற்று. அப்போது, இராணுவத்தாருக்காக வானொலி நிலையமும் விமான நிலையமும் இருந்தன. விமான நிலையமும் இப்போது மூடப்பட்டிருக்கிறது. விமான நிலையத்தை நிருவகிப்பது என்பது யானையைக் கட்டித் தீனி போடுவது போன்றது. போர்க் காலத்தில் நடைபெறாத ஒரு களியாட்டம் இப்போது காலியில் ஆண்டுதோறும் நடைபெறுகிறது. காலியை அடுத்த சிற்றூரான பூசாவுக்கு, உரிய காலத்தில் சென்றால் குதிரைப் பந்தயத்தையும் புதுப் புது விதமான உடைகளுடன் காட்சி தரும் மங்கையர்களையும் காணலாம்.

* * *

யாழ்ப்பாணத்தாருக்கு அடுத்தபடி இலங்கையில் சிறந்த அறிவாளிகளாக விளங்குபவர்கள் நீர்கொழும்பைச் சேர்ந்தவர்களே. இலங்கையில் முதல் தடவையாகச் சினிமாப் படம் எடுத்தவர்; துப்பாக்கியால் சுடுவதில் முதல் பரிசு பெற்றவர்; இசைத்தட்டில் இசையை ஒலிப்பதிவு செய்தவர் நீர்கொழும்புக்காரர்களே. புது வகையான வீடுகள் அமைப்பது, ரொட்டி சுடும் தொழில் நடத்துவது ஆகியவற்றில் முதலிடம் பெற்றவர்களும் நீர்கொழும்புக்காரர்தான். இந்த ஊரில் சிறப்பான தொழில் மீன் பிடிப்பதேயாகும். இங்குள்ள செம்படவர் தென்னைமரப் பலகையால் சேர்க்கப் பெற்ற ஒரு வகை தட்டையான படகுகளில், காலை இரண்டு மணிக்குப் புறப்பட்டு முப்பது மைல் வரை கடலில் சென்று மீன்களுடன் காலை ஏழு மணிக்குத் திரும்பி விடுகிறார்கள்.

நீர்கொழும்பு என்ற பெயர் "நியர் கொழும்பு" (Near Colombo) என்ற சொற்களிலிருந்து ஏற்பட்டது என்றும், கொழும்புக்கு அருகாமையில் (22 மைலில்) இருப்பதால் ஆங்கிலேயர்களால் கொடுக்கப்பட்டதென்றும் சிலர் சொல்லுவார்கள். 17-ம் நூற்றாண்டில் டச்சுக்காரர் கட்டிய கோட்டை ஒன்று நீர்கொழும்பில் இருக்கிறது. அதற்கு அருகே, கடலுடன் ஆறு கலக்கிறது. இதை ஆங்கிலத்தில் "லகூன்" என்பர்; செம்படவர் இதனை, "களப்பு" என்பர். களப்பிலிருந்து ஏற்படும் தண்ணீர்ப் பெருக்கு-வடிவு இவற்றால், நீர்கொழும்பில் பல பகுதிகளில் சுற்றியோடும் கால்வாய் தூய்மையாக இருக்கிறது. இதன் நீளம் சுமார் எழுபது மைல் ஆகும்.

ஆசியாவிலுள்ள ஏனைய நாடுகளைவிட இலங்கையில்தான் உண்மையான ஜனநாயகம் நடைபெறுகிறது என்று சொன்னால் பலருக்கு வேடிக்கையாக இருக்கலாம். ஆனால், அது உண்மை. பாராளுமன்றத் தொகுதிகளின் அளவு மிகச் சிறியது. அதன் விளைவாக, "எம். பி."களுக்கும் பொது மக்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வருகிறது. "எம். பி." என்றால், இலங்கையில் தனி மதிப்பு உண்டு. அவர்களுக்கு மாதச் சம்பளம் ரூ. 600. இலங்கை யெங்கும் கட்டணமில்லாமல் ரயிலில் செல்லலாம். அவர்கள் எழுதும் கடிதங்கள், கொடுக்கும் தந்திகள் இவற்றுக்குப் பணம் செலுத்த வேண்டுவதில்லை. டெலிபோனில் பேசினாலும் அப்படித்தான். யார் வீட்டில் திருமணம் நடைபெற்றாலும், அந்தத் தொகுதி "எம். பி."க்குக் கட்டாயம் அழைப்பு அனுப்புவார்கள்; அதற்கு "எம். பி." போகா விட்டால் அந்த வீட்டிலுள்ளவர்களின் வாக்குகள் அடுத்த தடவை அவருக்குக் கிடைப்பது அருமை. ஆகையால், மக்களுடைய இன்பத்திலும் துன்பத்திலும் பங்கு பற்றுவதே இலங்கை எம். பி. க்களின் வேலை.



# Pearline

## FRENCH LAVENDER BRILLIANTINE

Made with natural FRENCH LAVENDER ESSENCE



the

## Smart man's choice

PEARLINE - PARIS LTD. P. O. Box 493, Bombay. BR.4

---

# மதராஸ் கார்ப்பரேஷன் உத்யோகஸ்தர்கள் கோவாபரேடிவ் பாங்க் லிமிடெட்

ஸ்தாபிதம் : 1920

மதராஸ் கார்ப்பரேஷன் : ரிப்பன் பில்டிங் : மதராஸ்

○●○

மேற்படி பாங்கியின் முப்பதாவது ஆண்டு பூர்த்தி விழாவை ஒட்டி பிக்ஸட் டெபாஸிட்டுகள் கீழ்க்கண்டவாறு விசேஷ கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் கோர தீர்மானிக்கப் பட்டுள்ளது.

6 மாத காலத்திற்கு 3 சத விதம்
12 மாத காலத்திற்கு 3½ சத விதம்
24 மாத காலத்திற்கு 4 சத விதம்

ரூ. 25,000/-மும் அதற்கு மேற்பட்ட டெபாசிட் தொகைக்கும் ½ சத வீதம் அதிக வட்டி அளிக்கப்படும்

மதபரிபாலன ஸ்தாபனங்களுக்கு மேலும் அதிகமாக ½ சத வீதம் வட்டி அளிக்கப்படும்

*இதர விவரங்களுக்கு காரியதரிசிக்கு விண்ணப்பிக்கவும் :*

( போர்டாரின் உத்தரவுப்படி )

**A. நாராயணசாமி** B. A., A. I. I. B. *காரியதரிசி*




## 16. மங்களம்

‘கிணறு வெட்டப் போய்ப் பூதம் புறப்பட்டது’ என்று சொல்லுவார்கள். அது போல் ஆகி விட்டது மந்திரவாதியின் வழக்கு! சேனுபதி மந்திரவாதிக்குத் தண்டனை கொடுக்க வேண்டும் என்று கேட்கப் போய் மந்திரவாதியே தனக்குத் தண்டனை கொடுங்கள்; எவ்வளவு கடும் தண்டனை கொடுக்க முடியுமோ கொடுங்கள் என்று கேட்கும் அளவுக்கு வந்து விட்டது என்ருல் என்னவென்று சொல்வது?

வழக்கின் போக்கே வேறு விதமாக மாறிப் போய் விட்டதே!

ராஜகுரு, முதன் மந்திரி, சேனுபதி மற்றுமுள்ள சபையோர் யாவரும் இதற்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் திகைத்தனர்.

பின்னர் ராஜகுரு தமது வயது முதிர்ந்த அனுபவத்தில் தம் மனத்தில் தோன்றியதை, நியாயம் என்று பட்டதைக் கூறலாளுர். “நம் நாட்டுக்கு வெகு காலமாக அரசன் இல்லை. அரசனைத் தேடிக்கொண்டு சென்ருேம். அரசன் கிடைத்தும், நாம் அவரைப் புரிந்துகொள்ளாமல், சிறையில் அடைத்து வைத்து, அனுவசியமாகத் துன்புறுத்தி விட்டோம். அதற்குப் பரிகாரமாக, பிராயச்சித்தமாகச் செய்ய வேண்டிய முதல் காரியம் அவரை நம் நாட்டு மன்னராக ஏற்றுக் கொள்வது தான். இளவரசர் நந்தகுமாரனை நம் மன்னராக ஏற்றுக்கொள்ள வேண்டும். அவரை நம் மன்னர் என்று வானம் அதிர முழங்கி வரவேற்க வேண்டியது. நம் நாட்டுச் சிம்மாஸனத்தில் ஏற்றி வைத்து வணங்க வேண்டும். பிறகு, ராஜா நந்தகுமாரன் இந்த மந்திரவாதியின் குற்றத்துக்குத் தகுந்த தீர்ப்பு அளிக்கட்டும்!”

அப்பொழுது பார்க்க வேண்டுமே, “ராஜா நந்தகுமாரன் வாழ்க!” என்ற குரல் நாலா திசையிலிருந்தும் எழும்பியது.

நந்தகுமாரனுக்கு ஒன்றும் புரியவில்லை; பிரபாவுக்கும் ஒன்றும் புரியவில்லை! ஆயினும் அவர்கள் உள்ளத்துக்குள் இனம்தெரியாத இன்பம் ஊற்ருகப் பெருக்கெடுத்தது; முறுவலாகப் பரிணமித்தது!

ஆம், அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துப் புன்னகை புரிந்துகொண்ட காட்சி அங்கு கூடியிருந்தவர்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது!

அதற்குள் சில சேவகர்கள் வந்து நந்தகுமாரன் கைகளில் இடப் பட்டிருந்த விலங்குகளைத் தகர்த்து எறிந்தனர்.

சேனுபதியும், ராஜகுருவும், முதல் மந்திரியும் ராஜா நந்தகுமாரனுக்கு வணக்கம்




ஒருவர் :—நீங்கள் தானே சுப்பரத்தினத்துக்குப் பிடில் சொல்லிக் கொடுத்தீர்கள்? நானும் உங்களிடம் பிடில் கற்றுக் கொள்ளப் பிரியப்படுகிறேன்.

பிடில் வாத்தியார் :—பேஷாய்ச் சொல்லிக் கொள்ளுங்கள் ! உங்களுக்குச் சங்கீதத்தில் ரொம்ப ஆசை போலிருக்கிறது !

வந்தவர் :—அதெல்லாம் ஒன்றும் இல்லை, ஸார் ! சுப்புரத்தினம் என் பக்கத்து வீட்டுக்காரர். அவரைப் பழிக்குப் பழி வாங்க உத்தேசம் பண்ணியிருக்கிறேன் !

செலுத்தி நீதிபதி ஆசனத்துக்கு மரியாதையோடு அழைத்துச் சென்றனர்.

நந்த குமாரன் கம்பீரமாக நடந்து சென்று நீதிபதி ஸ்தானத்தில் ஏறி அமர்ந்தான். சபையிலிருந்த பெரியவர்கள், கிழவர்கள், பெண்கள், குழந்தைகள் யாவரும் பேச்சும் மூச்சும் ஒடுங்கிப் போய் அமைதியாக இருந்தனர்.

" இந்த இளைஞன் என்ன தீர்ப்புக் கூறப் போகிறான் ?" என்று வெகு ஆவலுடன் உட்கார்ந்திருந்தனர்.

நந்தகுமாரன், தன்னைச் சுற்றி ஒரு முறை பார்த்தான். ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன்போல் தன் உதட்டைக் கடித்துக் கொண்டான். பின்னர், "பிரபாவதி! நீ இந்த மந்திரவாதியின் கூற்றை அங்கீகரிக்கிறாயா ?" என்று கேட்டான்.

பிரபாவதி மிகவும் அலட்சியமாக முன்னால் வந்து கூறலுற்றாள் :

" மந்திரவாதி கூறியவற்றில் உண்மையுமிருக்கிறது பொய்யுமிருக்கிறது ! என்னை அரண்மனையிலிருந்து ஏமாற்றி அழைத்து வந்தது என்னவோ உண்மை ! ஆனால் நான் சொல்லொணாக் கஷ்டங்களுக்கு உட்படுத்தப் பட்டேன் என்பது பொய். நான் மந்திரவாதியுடன் இருந்த நாட்களில் யாதொரு கஷ்டமும் அனுபவிக்கவில்லை. சந்தோஷமாகவே இருந்தேன். என் மேல் எவ்வளவோ பிரியமாகக்கூட இருந்தார். நான்தான் கடைசியில் அவரிடம் சொல்லிக் கொள்ளாமல் காட்டில் ஓடிப்போய், என் பொருட்டு அவர் தீராத மனக் கவலை கொள்ளச் செய்தேன். அதனால் எனக்குத் தான் தண்டனை விதிக்க வேண்டும்......"

இதைக் கேட்ட நந்த குமாரன் "பிரபாவை விட்டுப் பிரிந்ததினால் மந்திரவாதியுற்ற பல நானாவித மனக் கவலையே, அரண்மனையிலிருந்து பிரபாவை அபகரித்து வந்ததற்குப் போதுமான தண்டனையாகும்! ஆகவே, மந்திரவாதிக்குப் பரிபூரண விடுதலையளிக்கிறேன்" என்றான்.

சபையில் ஒரே சந்தோஷ ஆரவாரம் ஏற்பட்டது. ஏனெனில் அங்கு கூடியிருந்த மக்களுக்கு மந்திரவாதியின் பேரில் நல்ல எண்ணமே மிகுந்திருந்தது. மந்திரவாதி அவர்களுடைய நாட்டுக்கு ஒரு அரசனைத் தேடிக் கொடுத்தான் அல்லவா ?

அப்போது நந்தகுமாரன் "பிரபாவதி இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் ஓடியதற்குத் தக்க தண்டனை என்ன கொடுப்பது என்றுதான் தெரியவில்லை" என்றான்.

அதற்கு மந்திரவாதி " நீங்கள் அவளை மணந்து இந்த நாட்டின் ராணியாகத் தண்டனையளிப்பதுதானே !" என்று கூறினான்!

பிரபா, நாணத்தினால் தலை குனிந்து கொண்டாள் !

சபையோர் 'கொல்' என்று சிரித்துக் கைகொட்டி ஆரவாரித்தனர்.

பிரபாவின் தாய் தந்தையருக்கும், நந்த குமாரனின் தாய் தந்தையருக்கும் சொல்லியனுப்பப்பட்டது. அவர்கள் யாவரும் தங்கள் தங்கள் குழந்தைகளை இத்தனை நாட்கள் கழிந்தாகிலும் பார்க்க முடிந்ததே என்று சொல்லி முடியாத குதூகலத்துடன் வந்து சேர்ந்தனர்.

சங்கீத வித்வானுக்கும் விடுதலையளித்துத் தக்க பரிசுகள் அளிக்கப்பட்டன !

தன்னிடம் வேலைக்காரியாக வந்த பெண் இந்நாட்டு ராணியாகிவிட்டாள் என்பதை அறிந்த சங்கீத வித்வானின் மனைவி ஓடியோடி வந்தாள். ராணி பிரபாவதியின் காலில் விழுந்து தான் முன்னர் அடித்ததற்கு மன்னித்து விடும்படி கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

ராணி பிரபா சிரித்துக் கொண்டே, "மன்னிப்பாவது ஒன்றாவது ! நீங்கள் என்னை அடித்ததனால் நான் ஒன்றும் கெட்டுப் போய் விடவில்லை" என்றாள்.

நல்ல சுபயோக சுபதினத்தில் நந்த குமாரனுக்கும் பிரபாவதிக்கும் திருமணமும் பட்டாபிஷேகமும் நடந்தது !

தனக்கு ராஜ்யம்வேண்டாம் என்று ஓடிய நந்த குமாரனுக்குத் தன் நாட்டுடன், விதர்ப்ப நாடும், பிரபாவின் தேசமாகிய புஷ்பக தேசமும் சேர்ந்து கொண்டது. ஆக, மூன்று தேசங்களுக்கும் நந்த குமாரன் இப்போது அரசனானான். (முற்றும்)

# காதலும் கடமையும்

**ஜயலக்ஷ்மி**

நிர்மலமான நீல ஆகாயத்தில் வெள்ளித் தகடுபோல் மிதந்து சென்ற பூரண சந்திரனின் தண்ணொளியும், காற்றில் கலந்து வந்த மணமும், ஓடும் ரயிலில் அமர்ந்திருந்த சேகரனின் உள்ளத்தில் இன்பத்தைத் தூண்டி விட்டன. அவன் கண்டு வந்த ஆசைக் கனவுகள் நினைவாகும் நாள் சமீபித்து விட்டது என்பதை எண்ணும்போது அவன் உள்ளத்தில் ஓர் இன்பம் கலந்த புத்துணர்ச்சி உண்டானதில் வியப்பென்ன? உள்ளத்தில் எண்ணம் குமிழியிட, உணர்வில் உற்சாகம் கரை புரண்டோட, தன் உள்ளத்து எக்களிப்பை யாரிடமாவது கொட்டியளக்க வேண்டும் போல் தோன்றவே ஆவலுடன் எதிர் பெஞ்சியை நோக்கினான். ஆனால் அவன் கூறப் போவதைக் கேட்க எவரும் காத்திருக்கவில்லை. எல்லோரும் தூங்கி வழிந்து கொண்டிருந்தார்கள். அவனுடன் வந்த நீலகண்டய்யர்கூடப் படுக்கையின் மீது தலையைச் சாய்த்தபடி அயர்ந்த நித்திரையில் ஆழ்ந்திருந்தார். ஏமாற்றம் அடைந்த சேகரனின் உள்ளம் ஆர்வமிழந்தது. அந்த ஏக்கத்தால் அவன் மனம் சென்று போன நிகழ்ச்சிகளைச் சிந்திக்கத் தொடங்கியது.

மாங்குளம் மிராசுதார் ராமசர்மாவின் ஏக புத்திரன்தான் சேகரன். சீரும் சிறப்புமாக வளரும் பாக்கியம் பெற்றவன். அன்புத் தாயும் அருமைத் தந்தையும் அன்பை வாரிச் சொரிந்து ஆசையுடன் வளர்த்து வந்தார்கள். செல்லம் கொடுத்துக் கொஞ்ச அருமை அத்தையும், வீட்டிலேயே சதா விளையாட அத்தை மகள் அம்புஜமும் இருக்கவே, சேகரனுடைய வாழ்க்கை பாலும் தேனும் கலந்ததுபோல் இனிப்பாக இருந்தது.

உலகில் எதற்கும் தான் ஒரு முடிவு உண்டே, அதன் விளைவால் அவனுடைய அருமைத் தந்தை ராமசர்மா ஒரு நாள் திடீரென்று மாரடைப்பால் இறந்துபோய் விட்டார். அது முதல் சேகரனுக்குப் போதாத காலமும் ஆரம்பித்து விட்டது.

கணவன் இறந்த பிறகு குடும்ப நிர்வாகம் முழுவதும் சேகரனின் தாய் ஜானகி ஏற்றுக் கொண்டாள். சொத்துக்களை மேற் பார்வை பார்க்கப் பழைய கணக்குப் பிள்ளையான நீலகண்டய்யரையே நியமித்தாள். அப்போது சேகரன் எஸ். எஸ். எல். ஸி. முடித்து விட்ட படியால் அவனையும் காலேஜில் சேர்த்துப் படிக்க வைத்தாள். பிறகு குடும்பத்தின் செலவை அதிகரிக்கச் செய்யும் நபர்களான விதவை நாத்தனார் செல்லம்மாளையும், அவளுடைய பருவப் பெண்ணை அம்புஜத்தையும் வீட்டை விட்டு வெளியேற்றத் திட்டமிட்டாள். ரோசக் காரியான செல்லம்மாள் தன் அண்ணன் மனைவியின் சொல்லம்புகளைத் தாங்கும் சக்தி யற்றவளாய், தன்னுடைய பிறந்தகத்திலிருந்து வெளியேறிப் பக்கத்துக் கிராமத்தில் ஐந்து ரூபாய் வாடகைக்கு ஒரு சிறிய அறையில் மகள் அம்புஜத்துடன் குடி புகுந்தாள். அவர்களுடைய வாழ்க்கைத் தோணி மிகவும் கஷ்டத்துடன்தான் சென்று கொண்டிருந்தது.

விடுமுறைக்கு ஊருக்குவந்த சேகரன், வீட்டில் அருமை அத்தையும், ஆசை அம்புஜமும் இல்லாதது கண்டு மனம் வெதும்பினான். தாயின் ஈவிரக்கமற்ற செய்கையினால் உள்ளம் வருந்தித் தவித்தான். தாயாரிடம் நயமாகவும் பயமாகவும் சொல்லிப் பார்த்தான். அவன் தாயார் சிறிதும் தன் போக்கை மாற்றிக் கொள்ளவில்லை.

சேகரன் வேறு வழி ஒன்றும் தோன்றாமல், அத்தை செல்லம்மாளிடம் போய், தான் 'தன்னாலியன்ற பொருளுதவி செய்வதாகவும் அதை ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்றும் கெஞ்சினான். அண்ணன் மகனை அன்புடன் அழைத்து உபசரித்து உள்ளமுருக உரையாடிய செல்லம்மாள், அவனிடமிருந்து ஒரு செல்லாக் காசுகூடப் பெறுவதற்கு மறுத்து விட்டாள்.

அம்புஜத்தினிடமும் அத்தையின் பிடிவாதத்தைப் பற்றிக் கூறி வருந்தினான் சேகரன். அவளும், "அத்தான்! உங்களுடைய தயை நிரம்பிய உள்ளத்துக்கும், அன்பு இதயத்திற்கும் நான் மிகவும் பெருமைப் படுகிறேன். என் தூய உள்ளத்தில் தங்களுக்கு என்றென்றும் தனியிடம் உண்டு. ஆனால் மாமியின் விருப்பத்துக்கு மாறாகச் செய்யும் உங்களுடைய பொருளுதவி மட்டும் எங்களுக்கு வேண்டாம். இந்த ஏழைகளிடம் தங்களுக்கு இப்போது இருக்கும் இத்தகைய பேரன்பு மட்டும் எப்போதும் நிலைத்திருந்தால் அதுவே எங்கள் பாக்கியமாகும்" என்று பவ்யமாகக் கூறினாள்.

அம்புஜத்தின் மனத்தை, மனதாலேயே அறிந்துணர்ந்து கொண்ட சேகரன், உணர்ச்சி மிகுந்தவனாய், "அம்புஜம்! உன் உள்ளத்தைப் போலவே என் உள்ளத்திலும் உனக்கு என்றென்றும் நிரந்தரமான பீடமுண்டு. அதற்கு ஏழை, பணக்காரன் என்ற பாகுபாடு கிடையாது. ஆனால் உன்னிடம் நான் ஒரு உறுதி மொழி கேட்கிறேன். நீ கூறியது போல் எங்கம்மாவின் ஆசியும் சம்மதமும் பெற்று உன்னை என் இல்லத்தரசியாக்கிக் கொள்வதென்றால் கால தாமதமாகுமே! அது வரையில் நீ எனக்காகக் காத்திருப்பாயா, அம்புஜம்!" என்று அன்புடன் வினவினான்.

"அது பற்றித் தாங்கள் கேட்கவும் வேண்டுமா? அத்தான்! உங்களுக்காக அமைத்த இந்த இதயக் கோயிலில் தங்களைத் தவிர வேறு யாருக்கும் இடம் கிடைக்காது" என்று உறுதி கூறினாள் அம்புஜம். அவர்களிருவரையும் விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிந்து பள்ளிக்குச் சென்றான் சேகரன்.

2

அதற்கு அடுத்த வருஷம் படிப்பை முடித்துக் கொண்டு வீடு திரும்பிய சேகரனுக்குத் திடுக்கிடச் செய்யும் செய்தி யொன்று காத்திருந்தது. பலவித பண்டம் பாத்திரங்களுடனும், பதினாயிரம் ரூபாய் வரதட்சிணையுடனும், பண்ணையார் மகள் 'பத்மா'வைத் தன் மகனுக்கு மணப் பெண்ணாக வரித்திருந்தாள் ஜானகி! முகூர்த்தம் வைக்க வேண்டியது தான் பாக்கியாக இருந்தது.

"பத்மாவை மணக்க எனக்கு விருப்பமில்லை" என்று சீறி விழுந்தான் சேகரன்.

"அவளை மணந்தால் சீரும் சிறப்புமாக வாழலாம்" என்றாள் ஜானகி.

"என் இதயத்தரசியான அம்புஜம் தான் என் இல்லத்துக்கும் அரசியாக வேண்டும்" என்று கூறினான் சேகரன்.

"சோற்றுக்குக் கூட வழியில்லாத பெண் என் மருமகளாக முடியாது!" கண்டிப்புடன் வெளி வந்தன ஜானகியின் சொற்கள்.

"அம்புஜத்தை ஆதரித்து வருவது என் கடமைகளில் ஒன்று! அவள் ஏழையான தால் தான் நான் அவளை மணக்க விரும்புகிறேன்" என்று கூறினான் சேகரன்.

"அம்புஜத்தை நீ மணந்து கொண்டால் என்னை மறந்துவிட வேண்டியதுதான்" என்றாள் பணத்தாசை பிடித்த ஜானகி.

"இதே வீட்டில் பிறந்து வளர்ந்த அத்தை ஆதரவற்று அப்பளாம் இட்டு விற்கிறாள். அவளுக்கு ஆதரவு கொடுக்க வேண்டியது இந்தக் குடும்பத்தாரின் கடமை! அவளை விரட்டி விட்டு நீ உல்லாச வாழ்க்கை நடத்துகிறாய். அழகும் அறிவும் அன்பும் ஒருங்கே அமையப் பெற்ற அம்புஜத்தை என் மனம் விரும்புகிறது. அவளை மணக்க ஏழை யென்ற காரணத்தைக் காட்டித் தடுக்கிறாய்.



"இரண்டு சொத்துக்களுக்கு எஜமானியான உனக்கு இன்னமும் எதற்கு வரதட்சிணைப் பணம்? மகனை விடப் பெரிதா பணம்? என் ஆசைக்கும் அப்பாவின் ஆத்ம சாந்திக்கும் மாறாக நீ செய்ய விரும்பினால் இனி இந்த வீட்டில் எனக்கு இருக்க விருப்பமில்லை. அத்தையை வீட்டை விட்டுத் துரத்திய அன்றே நானும் வெளியேறி யிருக்க வேண்டியவன்! தாயென்று மதித்துப் பொறுத்தேன். இப்போது போகிறேன். நீ பணத்தோடு சேர்ந்து வாழ்ந்து கொண்டிரு!" என்று ஆத்திரத்துடன் மொழிந்து விட்டு வெளியேறினான் சேகரன்.

சேகரன் அன்றிரவே சென்னைக்குப் போய் விட்டான். தன் ஆப்த சிநேகிதனான கோபாலனின் வீட்டுக்குச் சென்ற சேகரனுக்கு அதிர்ஷ்டவசமாக உடனே வேலை கிடைத்தது. நண்பன் வீட்டிலேயே ஒரு அறையில் குடியிருந்தான்.

மறுநாளே அத்தைக்கு, அம்மாவின் மன மாறுதலே வேண்டியே தான் தலை மறைவாக இருப்பதாகவும், எப்படியும் அம்மாவின் மனம் மாறியே தீரும் என்ற தீவிர நம்பிக்கை தனக்கிருப்பதாகவும், தன் நம்பிக்கை ஒளி சுடர்விடும் வரையில் அம்புஜம் தனக்காகக் காத்திருக்க வேண்டும் என்றும், அவசரப்பட்டு எதுவும் செய்து விட வேண்டாமென்றும் உறுதியுடன் கூடிய கடித மொன்று எழுதினான். அதற்கு அவன் அத்தை

விட மிருந்து. "உனக்கு அம்புஜத்தினிடம் இவ்வித பேரன்பு இருக்கும் பட்சத்தில், அம்புஜமும் உனக்காக எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் காத்துக் கொண்டிருப்பாள். ஆனால் பரம ஏழையான எனக்குப் பருவ மங்கையான அம்புஜத்தை ஆணுதவி யின்றி இந்த ஊரில் வைத்துக் கொண்டிருப்பதுதான் ரொம்பவும் கஷ்டமா யிருக்கிறது" என பதில் வந்தது.



அத்தையின் பொறுமைக்காக மனசுக்குள் சந்தோஷமடைந்தாலும், அவர்களின் வறுமையை எண்ணி மனம் வருந்தினான் சேகரன். தன்னிடம் உதவி பெற மறுக்கும் அத்தையின் மன உறுதியைக் கண்டு பெரிதும் வியந்தது அவனுள்ளம்.

என்னவோ 'ஆத்திரத்தில் அம்மாவிடமிருந்து பிரிந்து வந்துவிட்டானே யன்றி அவனுள்ளத்தின் அடித்தளத்திலுள்ள தாயன்பு மட்டும் சற்றும் மாறவில்லை. ஒரு காலத்தில் அன்புருவாயிருந்த தாயைக் காண அவன் சேயுள்ளம் ஏங்கித் தவித்தது. அம்மாவுக்கும் தனக்குமிடையே வாழ்க்கையில் குறுக்கிட்ட பத்மாவையும், அம்மாவின் பணத்தாசையையும் வெறுத்த சேகரின் மனப்புண் ஆறுவதற்கும் பல நாட்கள் சென்றன. இந்த நிலையில் வருஷம் இரண்டு சென்று மறைந்தது.

## 3

சேகரனின் உள்ளத்தில் தாயின் மனம் மாறும் என்கிற நம்பிக்கை சிறிது சிறிதாகத் தளர்ந்து வந்தது. செய்வதறியாது தவித்தான். அவன் மனத்துயரை அதிகரிக்கச் செய்யும் விதத்தில் அத்தை செல்லம்மாளிடமிருந்து, அம்புஜத்துக்கு வயது பதினெட்டுக்கு மேலாகிறதென்றும், தனக்குத் தள்ளாமை அதிகரித்து விட்டபடியால் அம்புஜத்தை யாரிடமாவது ஒப்படைத்தே ஆக வேண்டும் என்றும் அதற்கு அவன் யோசனையைத் தெரிவித்தால் நல்லது என்றும் எழுதி யிருந்தாள். இதைப் படித்த சேகரன் மனம் கலங்கியது. நண்பன் கோபாலனை அனுப்பி அத்தையையும் அம்புஜத்தையும் பார்த்துவிட்டு, அவர்கள் சம்மதித்தால் கையோடு இவ்விடம் அழைத்துக் கொண்டு வந்துவிடும்படியும் கூறி, அத்தை குடியிருக்கும் வீட்டின் விலாசத்தையும் கொடுத்தனுப்பினான்.

நான்கு நாட்களுக்குப் பிறகு திரும்பி வந்த கோபாலன், "நீ கொடுத்த விலாசத்தில் உன் அத்தையைக் காணோம்" என்று கூறிவிடவே, சேகரனின் மனம் துணுக்குற்றது. எங்கு போயிருப்பார்கள் என்று சிந்தித்துச்சிந்தித்துச் சித்தம் குழம்பித்தவித்தான். மேலும் ஒரு வாரம் சென்றது. அது எப்படியானாலும் சரி! ஒரு தடவை ஊருக்குப் போய் வருவது. சௌகரியப்பட்டால் அத்தையையும் அம்புஜத்தையும் இங்கு அழைத்துக்கொண்டு வந்துவிடுவது என்று முடிவுசெய்து, பிரயாணத்துக்கு வேண்டிய ஆடத்தங்களைச் செய்து கொண்டிருந்தான். காலை மணி ஒன்பதிருக்கும். அப்போது கொஞ்சமும் எதிர்பாராத வகையில் அவன் வீட்டுக் கணக்குப்பிள்ளை நீலகண்ட அய்யர், "சேகரன் இங்குதானே இருக்கிறார்!" என்று கேட்டுக் கொண்டே சேகரனின் அறைக்குள் நுழைந்ததைப் பார்த்தான்.

அவரைக் கண்டதும் திகைப்பு மிக்க அடைந்த சேகரன், "உங்களுக்கு எப்படி என் இருப்பிடம் தெரிந்தது?" என்றான்.

"உன்னுடைய அத்தைதான் சொன்னாள்" என்று மொழிந்தபடி அங்கு போடப்பட்டிருந்த பெஞ்சியின்மேல் உட்கார்ந்து கொண்டார் கணக்குப்பிள்ளை.

"அத்தை சொன்னாளா? அப்படியானால் அத்தை எங்கிருக்கிறாள் என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டான் சேகரன்.

"அத்தையும் அம்புஜமும் பத்து தினங்களுக்கு மேலாக நம் வீட்டில்தா னிருந்து வருகிறார்கள்."

"நிஜமாகவா? அதற்கு அம்மா சம்மதித்தாளா? அத்தையை அழைத்துக் கொண்டு வரும்படி எப்படி அவளுக்குத் தோன்றியது?"

"எல்லாம் காலம் செய்த மாறுதல் அப்பா! உன் அத்தைக்கு இரண்டு வாரங்களாக உடம்பு சரியாக இல்லை. படுத்த படுக்கையாகிவிட்டாள். பாவம்! அந்தப் பெண் அம்புஜம் மாலை மாலையாகக் கண்ணீர் சிந்திக் கொண்டே யிருக்கிறாள். நீ இப்படி அலட்சியமாக இருப்பது நன்றாகவே யில்லை. இது தெய்வத்துக்குக் கூடப் பொறுக்காது" என்று கூறித் தொந்தரவு செய்யத் தொடங்கி விட்டார்கள். அந்த இம்சை பொறுக்க முடியாமல் உன்னுடைய தாயார் என்னைப் போய் உன் அத்தையை அழைத்துக் கொண்டு வரும்படி கூறினாள். நான் போய் உன் அத்தையை அழைத்தேன். ஆனால் உன் அத்தை வர மறுத்து விட்டாள். பிறகு என்ன தோன்றியதோ என்னமோ, உன் தாயாரே நேரில் போய் வற்புறுத்திக் கூப்பிடவே அதைத் தட்டமுடியாமல் மகளுடன் நம் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். டாக்டர் வந்து மருந்து

கொடுத்துக் கொண்டிருக்கிறார். இப்போது கொஞ்சம் தேவலை. இருந்தாலும் இனி அவள் பிழைத்தெழுந்து நடப்பாள் என்று எனக்குத் தோன்றவில்லை'' என்று கூறி முடித்தார் நீலகண்டய்யர்.

தன் கண்களில் துளித்த கண்ணீரைத் துடைத்துக் கொண்ட சேகரன், "அதிருக்கட்டும். நீங்கள் எதற்கு இங்கு வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

"அதுவா? உனக்கு நிச்சயித்திருந்த பண்ணையாரின் மகள் பத்மாவுக்குப் போன வருஷம்தான் வேறு இடத்தில் கலியாணம் நடந்தது. தலை தீபாவளிக்காக மாப்பிள்ளையும் அவருடைய பெற்றோர்களும் வருவதாகக் கிளம்பி வந்தார்கள். அவர்கள் வரும் ரயில் துரதிருஷ்டவசமாகக் கவிழ்ந்து போய்விடவே மூவரும் இறந்து போய் விட்டார்கள். ஊரில் எல்லோரும் அந்தப் பெண்ணின் ஜாதகத்தில் மாங்கல்ய பாவமே கிடையாது; அதனால் தான் பாவம், மாப்பிள்ளை அற்பாயுசில் போய் விட்டான்; அவர்கள் குடும்பமே நசித்து விட்டது என்று பேசிக் கொள்கிறார்கள். அந்தப் பெண்ணை உனக்கு முடித்திருந்தால் நீயும் உன் தாயும் இப்படித்தானே இறந்து போயிருக்க வேண்டும் என்று தோன்றவே, உன் தாயாரின் மனம் திடீரென்று மாறி விட்டது'' என்றார் நீலகண்டய்யர்.

"சரி! நீங்கள் இன்னும் இரண்டு நாட்கள் தங்கி ஊரையெல்லாம் சுற்றிப் பார்க்கிறீர்களா?'' என்று கேட்ட சேகரனிடம் "இல்லை! இல்லை! உன்னை அழைத்துக் கொண்டு உடனே வந்துவிடும்படி கூறி யிருக்கிறார்கள். ஆகையால் இன்றிரவே கிளம்பிவிட வேண்டியதுதான்'' என்று கூறிவிடவே இருவரும் அன்றிரவே கிளம்பி விட்டார்கள்.

## 4

சேகரன் சிந்தனையிலிருந்து விடுபட்ட போது மணி ஐந்து இருக்கும். "என்னப்பா! சேகரா! பொழுது விடிந்து விட்டதா, என்ன? இது என்ன ஸ்டேஷன்?'' என்று வினவியபடி கணக்குப் பிள்ளை, சோம்பல் முறித்துக் கொண்டார்.

"ஆமாம். மாமா! பொழுது விடிந்து விட்டது. நம்ம ஊரும் வந்து விட்டது'' என்று கூறினான் சேகரன். இருவரும் ரயிலை விட்டு இறங்கி மாட்டு வண்டியில் சாமான்களை ஏற்றிக் கொண்டு கிளம்பினர்.

வண்டி வந்து நிற்கும் சப்தம் கேட்டு வாசலுக்கு விரைந்து வந்த ஜானகி, இரண்டு வருஷத்துக்கு மேலாகப் பார்க்காதிருந்த மகனைப் பார்த்ததும் தாய்மையன்பு மேலிட "சேகரா!'' என்று மகனை ஆவலுடன் வரவேற்று அவன் கைகளை அன்போடு பற்றிக் கொண்டாள்.

"அம்மா! என்னை மன்னித்துவிடு! உன் சொல்லை மீறி நடக்கத் தலைப்பட்டது என் தப்பிதம்தான்!'' என்று கூறித் தாயைச் சாஷ்டாங்கமாய் விழுந்து வணங்கினான் சேகரன். ஜானகியினால் ஒன்றும் பேச முடியவில்லை.

"அம்மா! அத்தை எங்கே?'' என்று ஆவலுடன் வினவிய சேகரனை அழைத்துக் கொண்டு செல்லம்மாள் படுத்திருந்த கட்டிலின் அருகே சென்றாள் ஜானகி.

சேகரனைக் கண்டதும் மிக்க மனமகிழ்ச்சி அடைந்த செல்லம்மாள், "அப்பா சேகரா! வந்து விட்டாயா? என்கண்ணே! என் உடம்பைப் பற்றி இனிமேல் கவலை இல்லை. நீ வந்து விட்டாய். என் உயிருள்ளபோது நீ அம்புஜத்தின் கழுத்தில் மூன்று முடிச்சுகளைப் போட்டு விட்டால் எனக்குப் பரம திருப்தி!'' என்று கூறினாள்.

"அதற்கென்ன அக்கா! அடுத்த வாரமே முகூர்த்தம் வைத்து விட்டால் போச்சு'' என்று கூறினாள் ஜானகி.

சேகரனின் கண்கள் அந்த அறையை ஒரு சுற்றுச் சுற்றி வந்து வாசற்படியருகில் நின்று கொண்டிருந்த மதிமுகத்தில் வந்து லயித்தது.

அம்புஜத்திற்கும் சேகரனுக்கும் நடந்த விவாகத்தின் சிறப்பைப்பற்றிப் பேசிப்பேசிப் பதினைந்து நாட்களைக் கழித்து விட்டாள் ஜானகி! மருமகள் அம்புஜத்தின் அழகும், அடக்கமும் அவள் உள்ளத்தை வெகுவாகப் பூரிக்கச் செய்து விட்டபடியால், மகிழ்ச்சி தாங்கமாட்டாதவளாய் 'அம்புஜம், அம்புஜம்' என்று அம்புஜத்தைச் சுற்றிச் சுற்றி வந்தாள்.

சேகரனுக்கும் அம்புஜத்துக்கும் விவாகம் நடந்த ஒரு வாரத்துக் கெல்லாம் செல்லம்மாளின் உடல் நிலை மோசமாகி விட்டது. எல்லோரும் அவள் பக்கத்திலேயே இருந்தார்கள். அன்று "அம்புஜம் அம்புஜம்!'' என்று மெல்லிய குரலில் செல்லம்மாள் அழைக்கவே, மூவரும் அவள் கட்டிலின் அருகில் சென்றார்கள். அவர்களைக் கண்ணுற்ற செல்லம்மாள், "சேகரா! என் உடம்பை என்னவோ செய்கிறது. இனி நான் ஒரு நிமிஷம் கூட இருக்க முடியாது. அம்புஜத்தைப் பார்த்துக் கொள்! அவளுக்கு நீதான் இனி சகலமும். அம்மா, ஜானகி! அம்புஜம் குழந்தை! அவளை உன் பெண்ணைப் போல் நினைத்து அவளுக்கு எல்லாம் கற்றுக் கொடு. அவள் அறியாமல் ஏதாவது தவறு செய்து விட்டாலும் அவளை மன்னித்து விடு!'' என்று தழதழத்த குரலில் கூறினாள்.

சேகரன், அம்புஜம் இருவரின் கைகளையும் பிடித்திருந்த செல்லம்மாளின் கரம் நழுவிச் சரிந்தது. தலை ஒருக்களித்துக் கொண்டது. அவ்வளவுதான். கூண்டில் அடைபட்டிருந்த கிளி கூண்டைவிட்டுப் பறந்தோடியது.

'அத்தை! அத்தை!' என்ற குரலும், 'அம்மா! அம்மா!' என்ற குரலும் ஒன்றை ஒன்று பீறிட்டுக் கொண்டு வரச் செல்லம்மாளின் உயிரற்ற உடலின் மீது விழுந்து புரண்டழுதார்கள் சேகரனும் அம்புஜமும். அவர்களைத் தேற்றுவதற்குக் கூட தோன்றாமல் கண்களில் கண்ணீர் மல்க, சிலையாக நின்றாள் ஜானகி!

# சோதனை

### கி. ரா. கோபாலன்

மனிதர்கள்தான் இல்லாமையை உணராமல் பிறரிடம் எதையேனும் கேட்டு இம்சைக்கு உள்ளாக்குவார்கள். ஆனால் கடவுள் என்பவரும் அப்படித்தானா? இல்லாத காலத்திலும், மனிதனின் தரித்திர நிலைமையிலும் அவன் தனக்கு ஏதேனும் செய்து தானாக வேண்டும் என்று விரும்புவாரா? இந்தத் தத்துவத்தைக்கூட உணராத முழு அஞ்ஞானியல்ல ரகுநாதய்யர். ஆனால் மனச் சாட்சிக்காகவும், மன ஆறுதலுக்காகவும் ஒரு காரியத்தைச் செய்யும் மனிதனை முழு அஞ்ஞானியாகவோ, மூட பக்தனாகவோ நினைக்க இடமிருக்கிறதா ......?

நாளையதினம் கோகுலாஷ்டமி. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் ஜனன தினம். ஒவ்வொரு வருஷமும் ரகுநாதய்யர் இந்த நல்ல நாளைத் தம் வீட்டில் வெகு விமரிசையாகக் கொண்டாடுவது வழக்கம். ரகுநாதய்யர் செல்வச் செழிப்போடு வாழ்ந்துவந்து கடந்த இரண்டு வருஷங்களாக மிகவும் தரித்திர நிலைக்கு வந்து விட்டார். மனித வாழ்வில் ஏற்படும் இந்த ஏற்றத் தாழ்வு மிகச் சகஜமானதுதான். தினசரி வாழ்க்கையையே மிகவும் கஷ்டமான நிலையில் நடத்தும் ரகுநாதய்யர் கோகுலாஷ்டமியை மிகவும் விரிவாகக் கொண்டாட வேண்டுமென்று நினைத்தால் அந்த மனிதர் பெரிய அஞ்ஞானியோ என்றுதானே நினைக்கத் தோன்றும்? ஆனால் ரகுநாதய்யரைப் பற்றி அவ்வளவு சுலபமாக முடிவு கட்டிவிட முடியாது. அவர் நன்கு படித்தவர். நல்ல அனுபவ ஞானமுள்ளவர். புத்திசாலி. பல வருஷங்களாக மிகவும் சிறப்பாகக் கொண்டாடி வந்த கோகுலாஷ்டமியை அந்த வருஷம் கொண்டாடாமல் நிறுத்தி விடுவதென்றால் வாழ்வின் நிறைவும், பிறவியின் லட்சியமும் சிதைந்து விடுமோ என்றுதான் அஞ்சினார்.

ரகுநாதய்யருக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து, அவருடைய பாட்டனார் காலத்திலிருந்து அவருடைய கிரகத்தில் கோகுலாஷ்டமி மிகவும் பிரபலமாகக் கொண்டாடப் பட்டு வந்தது. ரகுநாதய்யரின் பாட்டனாருக்கு அதனாலேயே 'கோகுலாஷ்டமி நாகராஜய்யர்' என்று பட்டப் பெயரும் ஊரில் ஏற்பட்டு விட்டது. பல வருஷங்களாகக் கொண்டாடி வந்த இந்த நன்னாளைத் திடீரென்று நிறுத்திவிட்டால் அந்தக் குடும்பத்திற்கே உரித்தான தனி மதிப்பும் கௌரவமும் குறைந்து விடாதா?

ரகுநாதய்யர் தம் குடும்பத்தின் கௌரவத்தையும், மதிப்பையும் கூடப் பெரிதாகக் கருதவில்லை. ஊரிலுள்ளவர்கள் இல்லாத குறையினால் செய்யவில்லை என்று நினைப்பார்களே தவிர வேறு எதுவும் நினைத்து விடப் போவதில்லை. இது ஊர் ஜனங்களிடம் கௌரவம் சம்பாதிக்க வேண்டுமென்பதற்காகவோ, வெறும் பகட்டுக்காகவோ செய்யக்கூடிய காரியமும் இல்லையல்லவா? பகவானிடம் உள்ள பக்தியினாலும், பிரேமையினாலும் செய்யக் கூடிய காரியமல்லவா? இதைச் செய்யாமல் எப்படி மனச் சாந்தியும் ஆறுதலும் அடைய முடியும்?

சென்ற வருஷமும் அவர் மிக வறுமை நிலையில்தானிருந்தார். அப்பொழுது ஒரு நண்பரிடமிருந்து ஐம்பது ரூபாய் கடனாக வாங்கிக் கோகுலாஷ்டமியைக் குறைவின்றிக் கொண்டாடிவிட்டார். இவ் வருஷமும் கோகுலாஷ்டமி நெருங்கி வந்து விட்டது. ஆனால் இன்னும் சென்றவருஷம் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுத்தபாடில்லை. இந்த வருஷம் கடன் வாங்குவதற்கு வழியுமில்லை. ஏனென்றால், யார் யாரிடமெல்லாம் கடன் வாங்க முடியுமோ அவர்களிடமெல்லாம் ஏற்கெனவேயே பல காரியங்களுக்காகக் கடன் வாங்கி இருந்தார். இனி, கடன் கேட்டு வாங்க வேறு மனிதர்கள் இல்லை. அப்படி யாரையாவது அவர் கடன் கேட்கத் துணிந்தாலும் அவருக்குக் கடன் கொடுக்க யாரும் துணியமாட்டார்கள். இந்த நிலையில் அந்த வருஷம் கோகுலாஷ்டமியை வெகு விமரிசையாகக் கொண்டாட முடியாவிட்டாலும் சாதாரணமாகவாவது கொண்டாடலாம் என்று நினைத்தார். அவர் நினைத்தபடி வெகு சாதாரணமாகக் கொண்டாடுவதாக இருந்தாலும் குறைந்தது முப்பது ரூபாயாவது செலவாகும். நிச்சயம் பாகவதர் தம் பஜனை கோஷ்டியுடன் வந்து விடுவார், அவரை ரகுநாதய்யர் வலுவிலே கூப்பிடா விட்டாலும் தாமாக வருகிற பாகவத கோஷ்டியை வராதே என்று எப்படிச் சொல்ல முடியும்?

நரசிம்ம பாகவதர் ரகுநாதய்யரின் தகப்பனார் காலத்திலிருந்து கோகுலாஷ்டமிக்கு முதல் நாளே தம் சிஷ்ய பரிவாரங்களுடன் வந்திருந்து தம்முடைய திவ்யநாம பஜனையினால் உத்ஸவத்திற்குச் சிறப்பை அளிப்பது வழக்கம். ஒவ்வொரு வருஷமும் ரகுநாதய்யர் கோகுலாஷ்டமிக்கு நான்கு நாள் முன்னதாகவே பக்கத்துக் கிராமத்திலிருந்த பாகவதருக்கு அழைப்பு அனுப்புவது வழக்கம். சென்ற வருஷம் பாகவதருக்கு அழைப்பு அனுப்பவில்லை ரகுநாதய்யர். இதற்குக் காரணம் அவருக்கு ஏற்பட்டிருந்த வறுமை நிலைதான். அழைப்பு அனுப்பாததினால் பாகவதர் வரமாட்டார் என்றுதான் நினைத்தார் ரகுநாதய்யர். பாகவதர் பகவத் கைங்கர்ய விஷயத்தில் அத்தகைய உபசார அழைப்புக்களை எதிர்பார்க்காமல் தம் பரிவாரங்களுடன் வந்து விட்டார். என்ன செய்வார் பாவம் ரகுநாதய்யர்? அன்று எப்படியோ கோகுலாஷ்டமியைக் குறை ஏற்படாமல் கொண்டாடி, பாகவதரையும் கௌரவித்து அனுப்பி விட்டார். சென்ற வருஷம்போல் இவ்வருஷமும் அழைப்பை எதிர்பார்க்காமல்

பாகவதர் வந்து விடலாமல்லவா? நிச்சயம் வந்து விடுவார். பாகவத கோஷ்டிகளை வர வேண்டாமென்று முன்னதாகவே சொல்லி அனுப்புவதும் கண்யக் குறைவாகப் பட்டது ரகுநாதய்யருக்கு. எப்படியோ அந்த வருஷமும் கோகுலாஷ்டமியைக் கொண்டாட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. கொண்டாடினால்தான் அவர் மனசுக்கும் ஒரு நிம்மதி ஏற்படும் போலிருந்தது. பகவான் எப்படியாவது தமக்கு உதவி செய்து தன்னுடைய காரியத்தைக் குறைவின்றி நடத்திக் கொள்வார் என்ற நம்பிக்கையிலிருந்தார். பல நண்பர்களிடம் பண உதவி நாடிச் சென்றார். ஆனால் ஒருவரும் அவருக்கு உதவி செய்வதாய் இல்லை. அனேகர் "நீர் படும் கஷ்டத்தில் கோகுலாஷ்டமி என்னய்யா வேண்டிக் கிடக்கிறது......!" என்று அறிவு விளக்கம் செய்து அனுப்பினார்கள். ரகுநாதய்யர் சோர்ந்த உள்ளத்துடன் வீடு வந்து சேர்ந்தார்.

"எங்கெங்கோ அலைந்து பார்த்தேன். தம்பிடி கூடப் பெயரவில்லை. பகவானின் சித்தம் எப்படியோ......? நாளைய தினம் பாகவதர் வந்து விடுவார். பகவான் என்னை இப்படிச் சோதிக்க வேண்டாம்......" என்றார் ஒரு பெரு மூச்சு விட்டுக்கொண்டே.

அவருடைய மனைவி சாரதாம்பாளின் முகத்திலும் கவலையும்கலவரமும் தோய்ந்திருந்தன. அவள் தயக்கத்தோடும் பயத்தோடும் பேசலானாள். இது தன் கணவரிடம் அவளுக்குள்ள பயமோ அல்லது பகவானிடம் அவளுக்கு ஏற்பட்ட டபயமோ! "இதை இந்த வருஷத்தோடு நிறுத்திக் கொள்ளுங்கள். பாகவதரிடம் 'அடுத்த வருஷம் வரவேண்டாம். திவ்ய நாமபஜனையெல்லாம் கிடையாது' என்று கண்டிப்பாய்ச் சொல்லி விடுங்கள்" என்றாள்.



ரகுநாதய்யர் ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்தார். "அடுத்த வருஷம் பஜனையெல்லாம் கிடையாது என்று பாகவதரிடம் சொல்லி விடலாம். ஆனால் அடுத்த வருஷத்தைப் பற்றி இப்பொழுது என்ன கவலை? இந்த வருஷம் இதை நடத்தாமல் இருக்க முடியாதே? அதற்குப் பணத்திற்கு என்ன செய்வது என்பதுதான் இப்பொழுது யோசனை!" என்றார்.

"அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். மத்தியானம் எங்க சின்னம்மா வந்தாள். 'அடமானம் வைத்திருக்கும் வளையலை மீட்டுப் போட்டுக்கொள்' என்று ஐம்பது ரூபாய் கொடுத்து விட்டுப் போனாள்.

இதைக் கேட்டதும் ரகுநாதய்யரின் முகம் மலர்ந்தது. இந்தச் சோதனையான கட்டத்தில் பகவான்தான் இப்படி அருள் செய்திருப்பதாக நினைத்தார். அடகு வைக்கப்பட்டிருக்கும் மனைவியின் நகைகளை மீட்பதற்குக் கொடுக்கப்பட்ட பணத்தைக் கோகுலாஷ்டமி செலவுக்கு உபயோகிப்பது முறையா என்பது பற்றி அவர் யோசிக்கவே யில்லை. "பகவான் கைவிட மாட்டார்" என்றார்.

"இன்று மத்தியானம் எங்க சின்னம்மா ஒரு விஷயம் சொன்னாள்" என்றாள் தயக்கத்துடன் சாரதாம்பாள்.

"என்ன சொன்னாள்? அந்தப் பணத்தை வேறெதற்கும் செலவு செய்யக் கூடாது என்று சொன்னாளா?" என்றார் ரகுநாதய்யர்.

"அப்படி யெல்லாம் சொல்ல வில்லை..." மறுபடியும் எதையோ சொல்லப் பயப்பட்டவள் போல் தயங்கினாள் சாரதா. அவளுடைய தயக்கம் ரகுநாதய்யருக்கு மனக் குழப்பத்தை உண்டாக்கியது.

"ஏன் இப்படித் தயங்குகிறாய்? என்னதான் சொன்னாள் உன் சின்னம்மா?" என்றார் பதட்டத்துடன்.

சின்னம்மா சொல்லியதைத் தன் கணவரிடம் சொல்லச் சிறிது பயப்பட வேண்டித்தானிருந்தது சாரதா. ஆனால் அதை எப்படியாவது அவரிடம் சொல்லுவதுதான் நல்லதென்றும் அவளுக்குப் பட்டது. "ஒன்றுமில்லை; இந்தப் படம் இருக்கிறது பாருங்கோ......" என்று தடுமாறும் குரலில் சொல்லி நிறுத்தினாள்.

"எந்தப் படம்?"

"நம் அகத்திலிருக்கிற கிருஷ்ணன் படம்."

"ஆமாம்."

"அதை வைத்துக் கொள்ளக் கூடாதாம். வீட்டுக்கு ஆகாதாம்!"

"என்ன? உன் சின்னம்மா ரொம்பக் கண்டவளோ!" என்றார் இயற்கையாகத் தமக்கே உரித்தான முன்கோபத்துடன்.

தன் கணவருக்கு ஏற்பட்ட கோபத்தை அறிந்து கொண்ட சாரதாவுக்கு மேலும் அவ

ரோடு பேசத் துணிவில்லை. ஆனால் ரகுநாதய்யர் அதை அத்துடன் விட்டு விடுவதாக இல்லை. "அந்தப் படத்தில் என்ன தோஷமாம்?" என்றார்.

"சின்னம்மா நமக்குக் கெடுதலா சொல்லுவாள். அது குழல் ஊதுகிற கிருஷ்ணனாம்!"

"ஆமாம், வேணு கோபாலன் படம். அதில் என்ன தோஷம்?"

"குடும்பம் ஊதி விடும் என்று சொல்லுவார்களாம். அதனால்தான் குடும்பத்தில் இப்படி......!"

ரகுநாதய்யர் ஒரு கோபச் சிரிப்புச் சிரித்தார். "சரிதான்; அதனால் அந்தப் படத்தை என்ன செய்ய வேண்டுமாம்?"



"ஏதாவது கோயிலிலாவது பஜனை மடத்திலாவது கொண்டு போய் வைத்து விட்டால் குடும்பத்துக்கு நல்லதாம்!" என்றாள் சாரதா தழுதழுத்த குரலில்.

"சரிதான்; நல்ல யோசனைதான். உன் சின்னம்மா சொல்லுவதையே ஒப்புக் கொண்டாலும் இவ்வளவு நாளும் இல்லாமல் பகவானை நம் வீட்டிலிருந்து அப்புறப்படுத்த உன் மனம் இடங்கொடுக்கிறதா?" என்றார்.

"மனசுக்குச் சங்கடமாய்த்தானிருக்கிறது. ஆனால்......" என்றாள் மெதுவான குரலில் அவர் மனைவி சாரதாம்பாள்.

"ஆனால் என்ன? இதெல்லாம் இப்படி இருக்குமோ அப்படி இருக்குமோ, இதனால் தோஷமோ, அதனால் கெடுதலோ என்று பலமாகத் தடுமாறும் சிலருடைய மனப் போக்குத்தான் காரணம். பாட்டனார் காலத்திலிருந்து இந்தப் படம் எங்கள் வீட்டில் இருக்கிறது. நம்முடைய குடும்பத்தில் செல்வம் கொழித்த காலத்திலெல்லாம் இப்படி யாராவது தோஷம் சொன்னார்களா? என் காதால் எத்தனையோ தடவை கேட்டிருக்கிறேன், நம்முடைய குடும்பம் மேன்மையாக இருப்பதற்குக் காரணம் இந்தக் கிருஷ்ணனின் படம்தான் என்று. இந்தப் படத்திற்கு ஆயிரம் இரண்டாயிரம் தருவதாகச் சொல்லி எத்தனையோ பேர் கேட்டார்கள். இப்பொழுது நமக்கு வறுமை வந்த காலத்தில் யாரேனும் ஏதேனும் தோஷம் சொன்னால் இது மனிதர்களுக்கே ஏற்பட்ட சுபாவமான பைத்தியக்காரத்தனம் என்றுதானே சொல்ல வேண்டும்......?" என்றார்.

இதற்குமேல் அவளால் எதிர்வார்த்தை பேச முடியுமா? தன்னுடைய கணவரின் வார்த்தைகளில் மறுதளிக்க முடியாத உண்மையிருப்பதாகச் சாரதா உணர்ந்தாலும் தன்னுடைய சின்னம்மாவின் வார்த்தையிலும் ஏதோ அனுபவ பூர்வமான உண்மை இருப்பதுபோல்தான் அவளுடைய பேதை நெஞ்சுக்குத் தோன்றியது.

ரகுநாதய்யர் அத்துடன் அந்தச் சம்பாஷணையை முடித்துக் கொண்டு மறுநாள் கோகுலாஷ்டமிக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதில் முனைந்தார்.

ரகுநாதய்யர் வீட்டிலிருந்த கண்ணனின் படம் மிகப் பழமையானது. அவருடைய பாட்டனார் காலத்தில் வாங்கப்பட்ட படம். கண்ணாடியிலேயே எழுதப்பட்ட தஞ்சாவூர் படம். சுமார் நான்கடிக்கு மேல் உயரமுள்ளது. நீல மேக வர்ணத்தில் குழலூதுவதுபோல் காட்சியளிக்கும் பாலகிருஷ்ணன். அந்தப் படம் அழகும் கவர்ச்சியும் கொண்டதாக விளங்கியது. கண்ணாடியில் அவ்வளவு அழகாக எழுதப்பட்ட அப்படத்தைப் போன்ற படம் பார்ப்பதே மிக அபூர்வம்.

மறுநாள் எதிர்பார்த்தபடி பரிவாரங்கள் சூழ நரசிம்ம பாகவதர் வந்து விட்டார். ரகுநாதய்யரும் அவரை வரவேற்று உபசரித்தார்.

கோகுலாஷ்டமி பஜனை, பிரசாத விநியோகங்களுடன் ஒரு குறைவுமில்லாமல் விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. மறுநாள் காலையில் பாகவதர் ரகுநாதய்யரிடம் விடைபெற்றுக் கொள்ள வந்தார். "நான் கேள்விப் பட்டேன். இப்போது உங்கள் குடும்ப நிலைமை முன்போல் அவ்வளவு சௌகரியமாக இல்லை என்று...ஆனால் இந்த நிலையிலும் பகவான் உங்களைக் கைவிடாமல் உங்கள் குடும்பத்திற்குள்ள கௌரவத்தையும், மதிப்பையும் பாதுகாத்துக் கொண்டுதான் வருகிறார்......" என்றார் பாகவதர் ஒரு இனிய சிரிப்போடு.

"பகவான் கைவிடுவதில்லைதான். ஆனால் அவர் ரொம்பவும் சோதனை செய்கிறார். அதை என்னால் தாங்க முடியாது. போன வருஷமும் இந்த வருஷமும் இதை நடத்த நான் எவ்வளவு கஷ்டப்பட்டேன் என்பது அந்த பகவானுக்குத் தெரியாமல் போகாது. அதனால்தான் உங்களுக்கு முன்னதாக அழைப்பு அனுப்ப முடியவில்லை. ஆனால் நீங்களாக வந்து விட்டீர்கள். அடுத்த வருஷத்தைப் பற்றி எனக்கு நம்பிக்கையே இல்லை. இதை உங்களிடம் சொல்லவே எனக்கு வேதனையாக இருக்கிறது. அடுத்த வருஷத்திலிருந்து நீங்கள் செய்யும் திவ்ய நாம பஜனையை நிறுத்த வேண்டியிருக்கிறது. இந்த அபசாரத்துக்கு நீங்கள் மன்னிக்கணும். பகவானும் க்ஷமிக்கணும்" இதைச் சொல்

லும்போது ரகுநாதய்யரின் குரல் தழு தழுத் தது. துக்கத்தினால் நெஞ்சு பொருமியது. கண்கள் கலங்கி விட்டன.

ரகுநாதய்யரிடமிருந்து இத்தகைய வார்த்தைகள் வரும் என்று பாகவதர் எதிர்பார்க்கவில்லை. அப்பொழுதுதான் பாகவதருக்கு ரகுநாதய்யர் எவ்வளவு வறுமை நிலைக்குள்ளாகி இருக்கிறார் என்பது விளங்கியது. அவர் ஒரு பெருமூச்சு விட்டார். "மனம் கலங்காதீர்கள். நல்ல குடும்பத்துக்கு இப்படி ஒரு சோதனை வேண்டாம். பணத்தால் மனிதன் உயர்வதும் தாழ்வதும் உலகத்தில் சகஜம். ஆனால் பகவானைக் கிரகத்தில் வைத்துக் கொண்டு சிரமமாகச் செய்ய வேண்டியதை நிறுத்தினால்...." என்று முழுவதையும் சொல்லி முடிக்காமல் நிறுத்தினார் பாகவதர்.

"அபசாரம்தான். ஸ்வாமியை வீட்டில் வைத்துக் கொண்டு வழக்கமாகச் செய்து கொண்டு வந்ததை நிறுத்துவது தகாது தான். அது மனசுக்கும் பெரிய குறையாகத்தானிருக்கும். அந்த அபசாரத்துக்குப் பயப்பட்டுத்தான் பகவானின் படத்தை பஜனை மடத்திலாவது கொண்டு போய்ச் சேர்த்துவிட நினைக்கிறேன்..." அவருடைய வார்த்தைகள் தழுதழுத்தன. கண்கள் கலங்கிய வண்ணமே இருந்தன.

"பகவானைக் கோயிலிலாவது பஜனை மடத்திலாவது சேர்த்து விடப் போகிறீர்களா...? வேண்டாம். உங்கள் கிரகத்தில் வைத்துக் கொள்ள இஷ்டப்படாவிட்டால் என்னிடம் ஒப்படைத்து விடுங்கள். அந்தப் படத்தைப் பெருமையோடு கொண்டு போய் என் கிரகத்தில் பூஜை செய்கிறேன். நான் சென்ற இருபத்தைந்து வருஷத்துக்கு மேலாக உங்கள் கிரகத்துக்கு வந்து பரமாத்மாவைப் பார்த்துப் பார்த்து உருகி பஜனை செய்திருக்கிறேன். என்னிடம் அவரை ஒப்படைத்து விடுங்கள். நான் பாக்கியசாலியாகிறேன்" என்றார் பாகவதர் பதைபதைப்பும் கெஞ்சுதலும் கூடிய குரலில்.

இதைக் கேட்டு ரகுநாதய்யர் துள்ளிக் குதித்தார். "இதைவிட எனக்கு வேறு என்ன வேண்டும்? தாராளமாக இப்பொழுதே எடுத்துக் கொண்டு போங்கள். உங்களைவிட பகவானை ஒப்படைக்கத் தகுந்த இடம் உலகத்தில் எங்கு தேடினாலும் எனக்கு அகப்படும்...?" என்றார் குழைவோடு.

தாழ்வாரத்தில் பாகவதரும் ரகுநாதய்யரும் பேசிக் கொண்டிருந்தது சமையலறை வாசற்படியில் நின்று கொண்டிருந்த சாரதாம்பாளின் செவிகளிலும் விழுந்தது. தன்னுடைய கணவர் கிருஷ்ணன் படத்தை வேறு ஒருவருக்குக் கொடுத்துவிடத் தீர்மானிப்பார் என்று அவள் நினைக்கவே இல்லை. பாகவதரிடம் படத்தைக் கொடுத்துவிட அவர் செய்த முடிவு அவளைத் திகைக்க வைத்தது. அது அவள் மனசுக்குக் கலக்கத்தையும் உண்டாக்கியது. 'தன் சின்னம்மாவின் வார்த்தையைக் கேட்டுத் தான் அவரிடம் சொன்னதற்காகத் தான் அவர் அப்படிச் செய்கிறாரோ' என்று சாரதாம்பாள் சந்தேகித்தாள்.

ரகுநாதய்யர் சமையலறைப் பக்கம் வந்த போது சாரதா, "இத்தனை நாளாக வீட்டிலிருந்த படத்தை எதற்காக நாம் பயந்து கொண்டு வேறொருவரிடம் கொடுக்க வேண்டும்? சின்னம்மா ஏதோ சொன்னாளே என்று..." என்றாள் விம்மும் குரலில்.

ரகுநாதய்யர் ஒரு ஏளனச் சிரிப்புச் சிரித்தார். "அதற்காகப் பயந்து நான் கொடுக்கவில்லை. நான் பயப்படும் காரணம் வேறு. எனக்கு நம்பிக்கை இல்லை, இந்தச் சோதனையான காலத்தில் பகவானுக்குக் குறையில்லாமல் எதுவும் செய்ய முடியுமென்று. தவிர, பாகவதரிடம் நான் கொடுத்து விடுவதாக வாக்குக் கொடுத்து விட்டேன்" என்று சொல்லிவிட்டு வெளியே வந்தார்.

பாகவதரின் சிஷ்யரில் ஒருவர் அலங்காரம் செய்து வைக்கப்பட்டிருந்த கிருஷ்ணன் படத்திலிருந்த மாலைகளைக் களைந்து அந்தப் படத்தை ஒரு வெள்ளைத் துணியால் சுற்றி மறைத்துக் கையில் எடுத்துக் கொண்டார். பாகவதர் ஒரு புறம் சந்தோஷமும் ஒரு புறம் துயரமும் தோய்ந்த மனத்தோடு ரகுநாதய்யரிடம் விடை பெற்றுக் கொண்டார். ரகுநாதய்யர் துயரம் நிறைந்த முகத்தோடு அவருக்கு விடை கொடுத்தார். சாரதாம்பாள் கண் கலங்கச் சமையலறை வாசற்படி அருகே நின்று கொண்டிருந்தாள்.

வீட்டு வாசலில் ஒரு ஒற்றை மாட்டு வண்டி நின்று கொண்டிருந்தது. பாகவதரின் சிஷ்யர் கையிலிருந்த படத்தை மெதுவாக வண்டியில் சாய்த்தாற்போல் வைத்தார். அவர் வண்டியில் படத்தை வைத்து விட்டுத் திரும்புவதற்குள் வண்டிமாடு சிறிது மிரண்டது. வண்டியில் சாய்த்து வைத்திருந்த படம் சரிந்து விழுந்தது. கண்ணாடி உடைந்து நொறுங்கியது போன்ற சப்தம் கேட்டது. "ஹா! படம் உடைந்து விட்டது போலிருக்கிறதே!" என்று கூச்சலிட்டார் பாகவதர்.

பாகவதரின் சிஷ்யர் நடுங்கிய வண்ணம் படத்தில் சுற்றியிருந்த துணியை விலக்கினார். கண்ணாடியில் வரையப்பட்டிருந்த தெய்விக அழகு பொருந்திய வேணுகோபால மூர்த்தியின் படம் தூள் தூளாகியிருந்தது.

பாகவதர் தடுமாறிய குரலில் "பகவானுக்கு உங்கள் கிரகத்தில் இருக்கத்தான் இச்சை. உங்கள் கிரகத்தில் இருக்க வழி இல்லையானால் போய்விடலாம் என்று போய் விட்டார்" என்றார்.

கண்ணீர் பெருக நின்று கொண்டிருந்த ரகுநாதய்யர், "இல்லை. அவர் என்னைச் சோதனை செய்து பார்த்தார். அவருடைய சோதனையில் நான் தோற்றுப் போய்விட்டேன். உலகத்தின் வாழ்வு தாழ்வுகளைப் பெரிதாக நினைத்து மனம் நிடமிழந்து கோழைத் தனத்துக்கு ஆளாகி விட்டது. தர்மத்தையும் லட்சியத்தையும் எதற்கோ பயந்து நழுவ விட்டு விட்டது!" என்றார்.

# மறதியும் பரிசும்

கே. ஆர். கௌஸல்யா

சில மாதங்களுக்கு முன்புதான் விவாகமாகியிருந்த புது மாப்பிள்ளை டாக்டர் கிருஷ்ணமூர்த்திக்கு வேட்டகத்திலிருந்து அழைப்பு வந்திருந்தது. அருமை மனைவி சந்திராவிட மிருந்து அன்பு பொங்கி வழியும் 'ஸ்பெஷல் இன்விடேஷன்' வேறு வந்திருந்தது.

சென்னையிலிருந்து புறப்பட்டு வரும்போது தனக்காகவும், தன் தம்பி ஸ்ரீதரனுக்காகவும் வாங்கிவரச் சொல்லி ஒரு நீண்ட சாமான் 'லிஸ்ட்'டையும் கடிதத்துடன் சேர்த்திருந்தாள் சந்திரா. புதிதாகக் கல்யாணம் செய்து கொண்ட மனைவி என்றால், அவள் 'குதிரைக் கொம்பு' வேண்டும் என்று சொன்னாலும், அப்படி ஒரு வஸ்து இல்லையே என்று கூட யோசிக்கத் தோன்றாமல், அதை வாங்கித் தந்து அவளை மகிழ்விக்கத் தயாராக இருக்கும் மன இயல்பு இருக்குமல்லவா எந்தக் கணவனுக்குமே! (கொஞ்ச நாட்கள் வரை) அதற்குக் கிருஷ்ணமூர்த்தி மட்டும் விதிவிலக்கல்லவே......! மனைவி கொடுத்திருந்த 'லிஸ்'டின்படி எல்லாச் சாமான்களையும் மடமடவென்று வாங்கிப் பெட்டியில் குவித்து விட்டான் அவன். ஆனால் அவள் குறிப்பிட்டபடி அத்தனை நாட்கள் முன்னதாகப் புறப்படத்தான் அவனால் முடியவில்லை. ஏதோ அவசரக் கேஸ் ஒன்றைக் கவனிக்கும் விஷயமாகச் சென்னையிலேயே இருக்க வேண்டி நேர்ந்து விட்டது அவனுக்கு.

டாக்டர் கிருஷ்ணமூர்த்தி வெறும் புகழுக்காகவும், பணத்திற்காகவும் மட்டும் வைத்தியம் செய்யும் டாக்டராக இல்லாமல், என்னதான் தன்னுடைய முக்கியமான சொந்த விஷயம், அது நல்ல போகிற விஷயமாக இருப்பினும் கூட, தான் அது சமயம் கவனிக்க வேண்டிய கேஸ் எதுவாயினும் இருந்தால், அதைக் கவனித்துச் சரி செய்து ஒரு நிலைக்குக் கொண்டு வந்த பின்புதான் மேற்படி தன் காரியங்களில் பிரவேசிப்பான். காரணம் அவனுடைய இரக்க சிந்தையும், ஈகை மனப்பான்மையும், புன் முறுவலுடன் நாள் முழுவதும் ஓய்ச்சல் ஒழிவின்றி நோயாளிகளைக் கவனிப்பதிலேயே தன் நேரம் முழுவதையும் கூடச் செலவிடத் தயாராக இருக்கும் உயர்ந்த மனப்பான்மையும்தான். இவற்றை யெல்லாம் விட முக்கியமானது ஏழை எளியவர்களிடமும், திக்கற்ற அனாதை ஜனங்களிடமும் கூட அவன் மனிதனாக, சேவா உணர்ச்சியுடன் பழகியதுதான். அழகும், அறிவும் ஒருபுற மிருக்க, கிருஷ்ணமூர்த்தியின் இந்தப் போற்றத்தக்க குணத்திற்காகவேதான் அவனுக்குத் தன் அருமை மகள் சந்திராவைப் பெருமையுடன் விவாகம் செய்து கொடுக்க முன் வந்தார் அவள் தந்தை.

சந்திராவுக்குக் கிருஷ்ணமூர்த்தியின் சுபாவமும், மனப்போக்கும் நன்றாகத் தெரியும். ஐந்தாறு நாட்கள் முன்னதாக என்றாவது எழுதினால்தான் அவன் இரண்டு மூன்று நாட்கள் முன்பாவது பார்த்து ஒழுங்கு படுத்திவிட்டு வரவேண்டிய கேஸ்களை யெல்லாம் கவனித்து விட்டு வருவான் என்பது அவள் எதிர்பார்த்த விஷயம்தான்.

மணி அப்போது ஏழு. எல்லாச் சாமான்களையும் பெட்டியில் வைத்துப் பூட்டி விட்டு, வீட்டின் எல்லா அறைகளும் சரியாகப் பூட்டப்பட்டிருக்கின்றனவா என்று பார்த்து விட்டுப் புறப்படுவதற்காகக் கிளம்பிக் கொண்டிருந்த போதுதான் சட்டென்று அவனுக்கு அந்தச் சந்தேகம் வந்து விட்டது. சந்திரா எழுதியிருந்த எல்லா வஸ்துக்களையும் பெட்டியில் வைத்து விட்டோமா என்று கடைசியாக ஒருமுறை சரி பார்ப்பதற்காக அவள் எழுதிய கடிதத்தைத் தேடியபோதுதான் அது காணவில்லை. கிருஷ்ணமூர்த்தி மூலை முடுக்குகளிலெல்லாம், கோட்டு, ஷர்ட்டு பாக்கெட்டுகளிலெல்லாம் தேடிப் பார்த்தான்; பெட்டியிலேயே வைத்து விட்டோமா என்று பார்த்தான். அவன் தன்னுடைய கைக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே தனக்கு மனப்பாடம் ஆகியிருந்தபடி, நைலான் ஸில்க் புடவையிலிருந்து ஸாடின் ரிப்பன்வரை ஒரு முறை சொல்லிச் சரி பார்த்தான்.

பிறகு மணி ஏழரை என்று அறிந்தவுடன் பரபரப்புடன், 'எது எப்படிப் போனாலும் சரி' என்று அவன் பெட்டியைப் பூட்டிக் கையிலெடுத்துக்கொண்ட போதுதான், அவ்வளவு நேரமும் பெட்டியடியில் நசுங்கிக் கொண்டிருந்த அந்த 'லிஸ்ட்' அடங்கிய கடிதத்தைப் பார்த்தான், 'அப்பாடா' என்று நிம்மதியுடன் அதைப் பெட்டியின் உள்ளேயே வைத்துப் பூட்டிவிட்டு, வீட்டையும் பூட்டிக் கொண்டு கிளம்பினான்.

எழும்பூர் ஸ்டேஷனை அவன் வந்தடைந்தபோது மணி எட்டேகால். டிக்கட்டு வாங்கிக் கொண்டு, பெட்டி, தோல் பை சகிதம் வந்து புறப்படத் தயாராய் நின்று கொண்டிருந்த திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் ஏறி, சௌகரியமான ஒரு இடம் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தவுடன்தான் அவனால் ஒரு நிதானத்துக்கு வர முடிந்தது.

'கட்' 'கட்' 'கடகட்' என்ற ஓசையுடன் நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு வேகமாக ஓடிக் கொண்டிருந்தது திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ். இரவு வேளையாதலால் வெளியே எங்கும் காரிருள் படர்ந்திருந்தது. ரயிலில் படுத்துக் கொண்டும் உட்கார்ந்து கொண்டும் ஒன்றிரண்டு பிரயாணிகள் நிம்மதியாகக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தனர். சிலர் ரயிலின் அசைவுகளுக்கும், ஆட்டங்களுக்கும் தகுந்தாற் போல் உடம்பை இயங்கவிட்டு விட்டு, உட்கார்ந்தவாறே தூங்கி வழிந்து கொண்டிருந்தனர். ரயிலில் அதிகக் கூட்டம் இராதபடியால் கிருஷ்ணமூர்த்திக்குக் காலை நீட்டிக் கொண்டு படுக்கக் கூட இடம் இருந்தது. டிரங்கைத் தலைமாட்டில் நகர்த்தி வைத்து விட்டுத் தோல்பையைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு நிம்மதியாகப் படுத்துக் கொண்டான் அவன். அவனுடைய மனக்கண்முன் மனைவி சந்திராவின் அழகிய தோற்றம் வந்தது. ஆசையுடன் தான் அவளுக்காக வாங்கிச் செல்லும் வஸ்துக்களை யெல்லாம் பார்த்தவுடன் அவள் செந்தாமரை முகம் எப்படி மலரும்! எத்தகைய ஆசை வார்த்தைகளை அவளுடைய பவளவாய் உதிர்க்கும்! அதைப் பார்த்துத் தன் மனம் எத்தகைய பூரிப்பும், புளகாங்கிதமும் அடையும்! என்றெல்லாம் கற்பனை செய்து பார்த்து மகிழ்ந்து கொண்டே வந்தான் அவன்.

முதல் நாள் மாலை வரை உடம்பைச் சிரமப்படுத்திக் கொண்டு வேலை செய்த களைப்பினும், சந்திரா

வைப் பற்றிய இன்பக் கற்பனை லோகத்தில் தன் உள்ளத்தை உலாவவிட்டதனால் ஏற்பட்ட ஆழ்ந்த சிந்தனையின் அலுப்பிலும் தன்னையும் மீறி, 'எப்போது கண்ணயர்ந்தோம்' என்று தெரியாமலே சற்று நேரம் தூங்கிவிட்ட கிருஷ்ணமூர்த்தி திடுக்கிட்டுக் கண் விழித்துக் கொண்டான். கைக் கடிகாரத்தையும், உடையையும் சீர்ப்படுத்திக் கொண்டு எழுந்து உட்கார்ந்த அவன் அடுத்த ஸ்டேஷன்தான் திருச்சி, தான் இறங்கவேண்டிய இடம் என்பதை அறிந்து பரபரப்புடன் தோல் பையை எடுத்து வைத்துக் கொண்டு பெட்டியை எடுப்பதற்காகத்தான் தலை வைத்துப் படுத்திருந்த பக்கம் திரும்பினான். அங்கே அவனுடைய பெட்டியைக் காணவில்லை. கிருஷ்ணமூர்த்திக்கு வயிறு 'பகீர்' என்றது. மேலே ஸீட்டுகளின் அடியில் எல்லா இடங்களிலும் தேடினான். அவனுடன் பிரயாணம் செய்து கொண்டிருந்தவர்கள் வைத்திருந்த பெட்டிகள் எல்லாவற்றையும் தன்னுடைய பெட்டியோ என்ற சந்தேகத்தில் பார்த்தான். "இதென்ன அநியாயம்...! என்னோட டிரங்கைக் காணோமே ஸார்! இங்கேதானே வைத்திருந்தேன்" என்று திகிலால் நடுங்கும் குரலில் கேட்டான் கிருஷ்ணமூர்த்தி.

"ரயில் பிரயாணத்திலே, அதுவும் ராத்திரி வேளைப் பிரயாணம் என்றால் ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணுமே ஸார்!......என்னோட சித்தப்பா பிள்ளை ஒருத்தன்......" என்று எரிகிற நெருப்பிலே எண்ணெய் ஊற்றுகிறாப் போல் பேசிக் கொண்டு போனார் ஒருத்தர். "ஐயோ பாவமே! கிடைக்கும் என்பதற்கு நம்பிக்கையே இல்லாத முறையிலே வந்து போயிடுத்தே ஸார்! ரொம்ப விலையுயர்ந்த வஸ்து வெல்லாம் அந்தப் பெட்டியில் இருந்ததோ!" என்று சோகக் குரலில் துக்கம் விசாரித்தார் ஒருவர்.





"அடேய்! அந்தப் போட்டோ எங்க தாத்தா குழந்தையாக இருந்த போது எடுத்த படம்!"

"என்ன! உங்க தாத்தா குழந்தையாக இருக்கிறபோதே தாத்தா வாகி விட்டாரா? ஆச்சரியமாக இருக்கிறதே!"

'எவ்வளவோ ஜாக்கிரதையாகவும், சாமர்த்தியமாகவும் எல்லாம் செய்யும் நாம் ரயில் பிரயாணத்தில் – எடுத்து வந்தது பத்தா, பதினைந்தா! ஒரு பையும் ஒரு டிரங்கும் – அதில் ஒன்றைப் பறி கொடுத்துவிட்டு நிற்கிறோமே; எல்லாவற்றுக்கும் மேல், பார்த்துப் பார்த்துப் பொறுக்கி யெடுத்துச் சந்திராவுக்காக வாங்கியிருந்த விலையுயர்ந்த வஸ்துக்களெல்லாம் பறி போய் விட்டதே!' என்று எண்ணியவாறே ரயிலிலிருந்து தோல் பையுடன் இறங்கிய கிருஷ்ணமூர்த்திக்குத் துக்கம் அடைத்துக் கொண்டு வந்தது.

உணர்ச்சியற்ற யந்திரம் போல் பிளாட்பாரத்தைத் தாண்டி ஸ்டேஷனுக்கு வெளியே வந்த அவன், "சாமி!...வாங்க!...நீங்க இந்த வண்டியிலேதான் வருவீங்கன்னு எழுதியிருந்ததனாலே ஐயா என்னை வண்டி யெடுத்துக்குனு போன்னு அனுப்பிச்சாருங்க!...ஏறிக்குங்க!" என்ற குரல் கேட்டுத் திரும்பினான். அவனுடைய மாமனார் வீட்டில் நீண்ட நாட்களாக வேலை செய்யும் வேலையாள் முனுசாமி, தன் வண்டியுடன் வந்திருந்தவன், மலர்ந்த முகத்துடன் கிருஷ்ணமூர்த்தியை வரவேற்றான்.

வண்டியில் ஏறிக்கொண்ட டாக்டர் கிருஷ்ணமூர்த்தி கலங்கிய உள்ளத்துடன் வெளியே நோக்கிக் கொண்டே வந்தான். சுற்றிலும் பச்சைப் பசேலென்று பரவிக் கிடந்த வயல் வெளிகளோ, மற்றக் கிராமாந்திர இயற்கைக் காட்சிகளோ அவன் கண்ணுக்குப் புலப்படவே யில்லை. அவன் உள்ளம்தான் பெருத்த சங்கடத்தில் குழம்பித் தத்தளித்துக் கொண்டிருக்கிறதே!

'இப்போது ஊருக்குப் போய்ச் சந்திராவிடம் என்ன சொல்லுவது! ரயிலிலே பெட்டியைக் கோட்டை விட்டு விட்டேன் என்று சொன்னால் எத்தனை வெட்கக்கேடு! வேட்டகம் வந்திருக்கும் மாப்பிள்ளையை எந்தவிதமாக 'கோட்டா' செய்யலாம் என்று கழுகுக் கண்கொண்டு பார்த்துக் கொண்டிருக்கும் மைத்துனன், மைத்துனிகளுக்கு அதற்கு அனுசரணையாக ஒரு சந்தர்ப்பத்தை மாப்பிள்ளையே ஏற்படுத்திக் கொடுப்பது போலவல்லவா ஆகும் இது! அதுவும் அவனுடைய பெரிய மைத்துனன் ஸ்ரீதரன் இருக்கிறானே! அவனைப் போலப் பொறுக்கி யெடுத்த குறும்புக்கார ஆசாமி யாருமே இருக்க மாட்டான். அவனுக்கு விஷயம் தெரிந்தால் வேறே வம்பு வேண்டாம்! சே! சே! என்ன ஆனாலும் சரி! வீட்டுக்குப் போய் உண்மையைச் சொல்லவே கூடாது என்று தீர்மானித்தான். அப்போது பளிச் சென்று ஒரு நல்ல யோசனை உதயமாயது கிருஷ்ணமூர்த்தியின் மனத்தில். தோல் பையை ஒரு முறை தட்டிப் பார்த்துக் கொண்டான். பணத்திற் கென்னவோ அவனிடம் பஞ்சமிருக்க வில்லை. சந்திரா எழுதியிருந்த சாமான்களின் லிஸ்டும் அவனுக்குப் படித்துப் படித்து நெட்டுருவாகி யிருந்தது. பேசாமல் அவை எல்லாவற்றிலும் இன்னொரு ஸெட்டும், ஒரு டிரங்கும் வாங்கி ஆசைப்படாமல் அவனிடம் கொடுத்து விட்டால் போகிறது......அவன் என்ன கண்டான்! காசைய

தினம் திருச்சி ஸ்டேஷனுக்கு வந்து அவற்றை வாங்கிவிட வேண்டும்.

வீட்டுக்குப் போனவுடனேயே அவள் பெட்டி எங்கே என்று கேட்டால், அதற்குச் சொல்லவும் ஒரு சரியான காரணத்தை மனத்தில் தயார் செய்து கொண்டு விட்டான் கிருஷ்ணமூர்த்தி.

'டடக்' என்ற சத்தத்துடன் வண்டி அக்ரஹாரத்தினுள் நுழைந்து எல்லா வீடுகளையும் விடப் பெரியதாய், மாடி உடையதாக இருந்த ஒரு வீட்டின் முன் வந்து நின்றது. தெருவிலிருந்த பெண்கள் எல்லோரும் ஆவலுடன் ஓடிவந்து அவரவர் வீட்டு வாசலில் நின்று எட்டிப் பார்க்க வண்டியிலிருந்து இறங்கினான் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி. மாமியார் விசாலம் தயாராய்க் கரைத்து வைத்திருந்த ஹாரத்தியைச் சுற்ற, மாமனார் ஹரிஹரன், "வாங்கோ மாப்பிள்ளே!" என்று வரவேற்க, மைத்துனன் ஸ்ரீதரன் ஓடிவந்து ரொம்பவும் சுவாதீனமாக, "அத்திம்பேர்......" என்று' கைலாகு கொடுத்து அழைத்துக்கொண்டு போக, அதற்கெல்லாம் ஒரே புன்னகையால் பதிலளித்துவிட்டு, "சந்திரா எங்கே!" என்று துருவித் துருவி மலையும் கண்களுடன் மாமனாரின் இல்லத்தில் பிரவேசித்தான் மாப்பிள்ளை டாக்டர் கிருஷ்ணமூர்த்தி.

அடுத்த கணம் கையில் ஆவி பொங்கும் காப்பியுடன், அன்னம்போல் ஒயிலாக நடந்து வந்து கிருஷ்ணமூர்த்தியின் அருகில் நின்றாள் சந்திரா.

"என்ன! 'டிரங்கு' ஒன்றும் நீங்கள் கொண்டு வரவில்லையா என்ன!" என்று திகைப்புடன் கேட்டாள் அவள்.

"இல்லையே! ஏன்! டிரங்கு எதற்கு!" என்றான் கிருஷ்ணமூர்த்தி ஒன்றும் தெரியாதவன் போல.

"அப்படின்னா நான் கேட்ட வஸ்துவெல்லாம் வாங்கிண்டு வரலையா!" என்றாள் சந்திரா குழந்தை போல் சிணுங்கியவாறே.

"இல்லே சந்திரா! கையில் பணமே இல்லே... அதனால்..."

சந்திராவின் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் மெல்ல எட்டிப் பார்த்தன. அது அருவியாக மாறுவதற்குள், "அட! அசடே! அதற்குள் அழுகை வந்து விடுகிறதே! 'டிரங்கை' லக்கேஜில் போட்டிருக்கிறேன். நாளைக்குத்தான் வரும். ஸ்டேஷனுக்குப் போய் நான் வாங்கி வந்து விடுவேன்" என்றான் கிருஷ்ணமூர்த்தி அவள் அழகிய மாம் பழக் கன்னத்தில் செல்லமாக ஒரு தட்டுத் தட்டியவாறே.

"அந்த ஒரு பெட்டியையா உங்களால் தூக்கி வர முடியாமல் போய் விட்டது! அப்படி என்ன இரும்பு குண்டு மாதிரி கனக்கிற வஸ்து எனக்கு வாங்கி வந்திருக்கிறீர்கள் நீங்கள்!" என்று அகல விரிந்த கண்களுடன் பலமாகச் சிரித்தவாறே கேட்டாள் அவள்.

"இல்லே! என் நண்பன் ஒருவன் என்னோடு தான் திருச்சிவரை வந்தான். அவனுக்குத் திருச்சிக்கு மாற்றலாகி இருப்பதனாலே சாமான்கள் எல்லாவற்றையும் ஒழித்து மூட்டை கட்டி லக்கேஜிலே போட்டுவிட்டு என்னோடுதான் குடும்பத்தோடு வந்தான். 'அடா! உன் டிரங்கையும் தான் அதோட போட்டுடறேன். சும்மா வாப்பா! நாளைக்கு என்னோட சாமான்கள் வந்து சேரும் போது அதுவும் வந்துவிட்டுப் போகிறது. அது ஒரு சுமை எதற்கு!' என்று சொன்னான்! நான் ஸ்டேஷனுக்கு போய் நாளைக்கு வாங்கி வந்துவிடு மாட்டேனு!" என்றான் கிருஷ்ணமூர்த்தி.

"ஆமாம் விசித்திரமாகத்தான் இருக்கு நீங்க சொல்றது! கொண்டு வந்த ஒரே ஒரு பெட்டியையும் லக்கேஜிலே போட்டுவிட்டுவரும் ஆசாமியை நான் பார்த்ததே யில்லே. நான் வாங்கிவரச் சொன்ன வஸ்துக்களை எவ்வளவுக் கெவ்வளவு பார்க்க நான் ஆசைப்படுகிறேனோ, அவ்வளவுக் கவ்வளவு சோதனையாக இருக்கிறது!" என்றாள் சந்திரா அலுப்புடன்.

கிருஷ்ணமூர்த்தி அதற்கு மேல் வாய் திறந்து பேசவில்லை.

வெளியே உலாவப் போயிருந்த கிருஷ்ணமூர்த்தி இருட்டுவதற்குச் சற்று நேரம் முன்பு வீடு திரும்பி அவன் மாடியிலிருந்த தன்னறைக்குச் சென்றான். ஈஸிசேரில் சாய்ந்து லேசாகக் கண்ணை மூடிக் கொண்டான். "அத்திம்பேர்! நேற்று ரயிலிலே பிரயாணத்திலே தூக்கமே யில்லையாக்கும்! மத்தியானம், சாயங்காலம் என்று நினைச்ச போதெல்லாம் தூக்கம் கண்ணைச் சுழற்றுகிறது. அப்படித் தானே!" என்று கேட்டவாறு உள்ளே நுழைந்தான் அவனுடைய மைத்துனன் ஸ்ரீதரன்.

"ஆமாம்! பின்னே ரயிலிலே கண்ணயர முடியுமா என்ன!"

"முடியாது! முடியாது! ஆனால் இந்தத் தூக்கம் இருக்கே, அது நம்மையும் அறியாமல் நம்மை ஏமாற்றி விடும். இப்போ நீங்களாக இருக்கவே, யாரோ நண்பன் ஒருத்தன் புண்ணியத்திலே 'ப்ரீ' யாக இருக்கும்படி டிரங்கை லக்கேஜிலே போட்டு விட்டீர்கள். நீங்க அப்படி அசந்து மறந்து தூங்கியிருந்தாலும் பாதகமில்லே. எல்லாருக்குமே உங்க மாதிரி ஒரு நண்பன் கிடைப்பானு என்ன! போன வருஷம் என் சிநேகிதன் ஒருத்தன் பாவம்! தெரியாமல் ரயிலிலே தூங்கிவிட்டுப் பெட்டியைக் கோட்டை விட்டுட்டான். ரொம்ப விலையுயர்ந்த சாமானெல்லாம் வைத்திருந்தான்."

'இதென்ன!......அவன் பெட்டியை ரயிலிலே கோட்டை விட்டுட்டு வந்து விட்டதைத் தெரிந்து கொண்டவன் போல் ரொம்ப சாதுரியமாகப் பேசுகிறானே இந்தப் பிள்ளையாண்டான்! இவனுக்கு அது தெரிந்திருக்குமா என்ன' என்பதை எண்ணியபோது டாக்டர் கிருஷ்ணமூர்த்தியின் நெஞ்சு போட் மெயிலின் வேகத்தில் பலமாக அடித்துக் கொண்டது.

"சரி, அதெல்லாம் இருக்கட்டும்! நீ இப்போ இண்டர் இரண்டாவது வருஷம் படிக்கிறாய் இல்லையா! அப்புறம் மேலே என்ன செய்யப் போறே! பி. ஏ.யா, பி. எஸ். ஸி.யா!" என்று பேச்சை வேறு வழியில் திருப்பினான் அவன்.

"அதைப் பத்தி இப்போ என்ன கவலே! இந்தப் பரீட்சையிலே 'பல்டி' அடிக்காமல் பாஸ் பண்ணிய பிறகுதானே! பார்த்துக்கலாம்! இப்பொழுது இதற்குப் பதில் சொல்லுங்கோ அத்திம்பேர்! அப்படி ஒரு மாப்பிள்ளைக்கு நேர்ந்தானால் அவன் என்ன செய்வான்!" என்று மீண்டும் அதே சங்கடம் பிடித்த பேச்சைத் தொடர்ந்து ஆரம்பித்தான் ஸ்ரீதர்.

"அட, என்னடா! என்னவோ அவரைப் பெரும் சோதனை செய்து திண்டாட வைக்கிறாய், சீக்கிரம் விஷயத்தைச் சொல்லாமல்!" என்று அதட்டியவாறே அங்கு வந்தாள் சந்திரா.

கிருஷ்ணமூர்த்திக்கு வியப்பாலும், கலவரத்தாலும் அவமானத்தாலும் வாயடைத்துப் போய் விட்டது. 'இந்த ரகசியம் இவர்களுக் கெல்லாம் எப்படிப் புரிந்தது!' என்று தெரியாமல், பரிதாபமாக விழித்தான் அவன்.

"ஆ, மந்திரக்காளி! இதோ ஒரு நிமிஷத்திலே உங்கள் காணமற்போன பெட்டியை வரவழைக்கிறேன், பாருங்கோ!" என்று சொல்லி, 'விர்' என்று சிட்டாகப் பறந்து சென்ற ஸ்ரீதரன் கையில்—அவனுடைய அத்திம்பேர் பிரயாணத்தில் பறிகொடுத்து விட்ட பெட்டியுடன் திரும்பி வந்து சேர்ந்தான்.

"இது எப்படி இங்கே வந்தது!" என்று தூக்கி வாரிப் போட்டவனாய்ப் படபடக்கும் நெஞ்சுடன் கேட்டான் கிருஷ்ணமூர்த்தி.

"சொல்கிறேன், கேளுங்கோ! நேற்றைய தினம் நீங்கள் வயல் வெளிகளைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பவில்லையா! நீங்கள் போய் இரண்டு நிமிஷத்துக்கெல்லாம் ஒரு ஆள் வந்தான். அவனுக்குச் சுமார் இருபது இருபத்திரண்டு வயதுக்குக் கிட்டத்தட்ட இருக்கலாம். இந்த டிரங்கைக் கொண்டு வந்தான்.

"டாக்டர் கிருஷ்ணமூர்த்தி என்று ஒருவர் சென்னையிலேயிருந்து வந்திருக்கிறாரே! இந்த வீடுதானே என்று கேட்டான். அதற்குள் உள்ளிருந்து வந்த சந்திரா, 'அவர் எங்கோ வெளியே போயிருக்கிறார். என்ன வேணும்!' என்று கேட்டாள். 'இந்தப் பெட்டியையும் கடிதத்தையும் அவர் வந்தால் கொடுத்து விடுங்கள்!' என்று சொல்லி விட்டு விடுவிடு வென்று சென்று விட்டான்" என்று கூறி ஸ்ரீதரன் ஒரு கடிதத்தை அவனிடம் கொடுத்தான். கிருஷ்ணமூர்த்தி பரபரப்புடன் அந்தக் கடிதத்தைப் படித்தான்.

"கனம் பொருந்திய டாக்டர் கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு, வணக்கம்.

ஒவ்வொரு தினமும் ஆயிரக்கணக்கான ஜனங்களைச் சந்திக்கும் தங்களுக்கு என்றோ ஒரு சமயம் பார்த்துப் பேசிய இந்த ஏழையை நினைவிருக்க முடியாது; நினைவிருக்க நியாயமில்லை. என்னுடைய பெயர் கந்தன். எட்டாவது வகுப்புவரை எப்படியோ என் ஏழ்மை நிலையிலும் படித்து முடித்த நான் மேலே படிக்கச் சக்தியின்றி ஆலை ஒன்றில் வேலைக்கமர்ந்தேன். அதன் மூலம் கிடைத்த குறைந்த என் வருவாயில் என் தாயும் நானும் சிரமத்துடன் காலம் தள்ளி வந்தோம். திடீரென்று ஒருநாள் எங்கள் ஆலை மூடப்பட்டது. தெருத் தெருவாய் அலைந்தும் வேலை கிடைக்காமல் வேலையில்லாத் திண்டாட்டத்தில் அகப்பட்டு வறுமையில் தவித்த ஆலை வேலையாட்களில் நானும் ஒருவன். திடீரென்று இடி மேல் இடியாக இந்தச் சமயம் பார்த்துத்தான் என் தாயும் கடுமையான குளிர் ஜுரத்தில் படுத்து விட்டாள். எனக்கென்று ஆதரவாக இந்த உலகத்திலுள்ள அந்த ஒரு ஆத்மாவும் என்னைக் கைவிட்டு விட்டுப் போய்விடப் போகிறதே என்ற பயத்தில் வைத்தியம் செய்வதற்காக டாக்டர்கள் வீடெல்லாம் ஓடிக் கெஞ்சினேன். பலனில்லை.

கடைசியில், என்னிடம் யாரோ ஒருவர் தங்கள் பெயரைச் சொல்லி, தங்கள் இருப்பிடத்தையும் தெரிவித்து, உன் போன்ற ஏழை எளியவர்களுக்கும் இரங்கிப் பணமின்றி வைத்திய உதவியளித்து, அவர்களிடமும் பரிவு காட்டும் மனிதத்தன்மை பெற்ற டாக்டர் அவர் என்று கூறினார். உடனே நான் உங்களிடம் ஓடோடியும் வந்தேன். தாங்கள் இந்த ஏழையின் இல்லத்துக்கு வந்து, விலையுயர்ந்த மருந்துகளை என் தாய்க்குக் கொடுத்து இலவச வைத்தியம் செய்து உயிர் கொடுத்தீர்கள்! அந்த நன்றியை என் நெஞ்சம் மறக்கவே யில்லை.

வேலையில்லாமல், எவ்வளவு முயன்றும் கிடைக்காத காரணத்தால், என் வயிறு ஒன்று மட்டுமின்றி நோய் வந்து மெலிந்து கிடக்கும் என் தாயின் வயிற்றையும் சேர்த்து நிரப்புவதற்காக, என் தாய்க்குக் கூடத் தெரியாமல் திருட்டுத் தொழிலில் இறங்கி விட்டேன். பஸ்ஸில், ரயிலில், கூட்டம் கும்பல் நிறைந்த இடங்களில் திருடுவது ஒரு விதம். அன்று தாங்கள் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் சென்று கொண்டிருந்த போதும், இடையில் ஏதோ ஒரு ஸ்டேஷனில் உங்கள் பெட்டியில் வந்து ஏறிய நான், எல்லோரும் அசந்து மறந்து தூங்கிக் கொண்டிருந்த வேளையில் உங்கள் டிரங்கை எடுத்துக் கொண்டு ரகசியமாகத் திருச்சிக்கு நாலு ஸ்டேஷன் முந்தி இறங்கி விட்டேன். நீங்கள் முகத்தை வேறு புறம் திருப்பிக் கொண்டு படுத்திருந்தபடியால் உங்களை என்னால் அப்போது அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

மறுநாள் காலை பெட்டியை உடைத்துத் திறந்த போது, ஒரு அழகிய பிளாஸ்டிக் பர்ஸில் உங்கள் போட்டோவையும், அத்துடனேயே வைத்திருந்த உங்கள் மனைவியின் போட்டோவையும் பார்த்தேன். அப்போதுதான் எனக்குத் தங்கள் நினைவு வந்தது. பெட்டியின் மேலாக இருந்த உங்கள் மனைவியின் கடிதத்திலிருந்து உங்கள் வேட்டகத்து விலாசத்தை அறிந்து கொண்டேன். உடனே என் நெஞ்சில் ஏதோ ஒன்று நெருஞ்சி முள்போல் உறுத்தியது. என் தாய்க்கு உயிர் கொடுத்துக் காத்த மனித தெய்வமாகிய தங்களுக்கா நான் இத்தகைய தீங்கு செய்து விட்டேன்!

"எத்தகைய அபசாரம்" என்று பெட்டியை அப்படியே மூடி, பூட்டை உடைத்து விட்டபடியால் தாழ்ப்பாளை அப்படியே அழுத்தி விட்டு அத்துடன், பஸ் ஒன்றில் ஏறித் திருச்சிக்கு வந்து அங்கிருந்து உங்கள் கிராமத்தை யடைந்து உங்கள் மாமனார் வீட்டில் உங்கள் பெட்டியைச் சேர்த்து விட்டேன். நல்ல வேளையாக உங்கள் கண்ணில் நான் படவில்லை.

நான் திருடன்தான். ஆனாலும் ஆறறிவு படைத்த மனிதன்தானே! எனக்கும் இதயம், நன்றி யுணர்ச்சி, மனச் சாட்சி எல்லாம், இருக்குமல்லவா! தங்களிடம் நான் பட்டிருக்கும் நன்றிக் கடனை எந்த வகையிலாவது தீர்க்க வேண்டியது என் கடமை யல்லவா!

ஏழைக் கந்தன்."

கடிதத்தைப் படித்து முடித்த டாக்டர் கிருஷ்ணமூர்த்தி வியப்பாலும் மகிழ்ச்சியாலும், துயரத்தாலும் சிலையாய் வாயடைத்துப் போய் நின்று கொண்டிருந்தான்.

"அத்திம்பேர்! அக்கா கேட்டதை யெல்லாம் வாங்கி வந்திருக்கிறீர்கள். நான் கேட்ட கைக் கடிகாரத்தை மட்டும் காணோம். இப்போது அதற்குப் பதில் நீங்கள் ஒன்று செய்ய வேண்டும். நீங்கள் எப்படியாவது அந்தக் கந்தனைக் கண்டு பிடித்து அவனுக்கு உங்கள் 'டிஸ்பென்ஸரி'யில் கம்பௌண்டர் வேலை யளித்து ஆதரிக்க வேண்டும். வேலையில்லாக் கஷ்டத்தினால் வேறு வகையின்றி மனிதத் தன்மையி லின்றும் தவறித் திருட்டுத் தொழிலை மேற் கொண்டுள்ள அவனை நீங்கள்தான் இவ்விதமாகச் சீர்திருத்த வேண்டும்" என்று கூறினான் ஸ்ரீதரன்.

"நான் செய்ய நினைத்ததை நீ சொல்லி விட்டாய்" என்று மகிழ்ச்சி தொனிக்கக் கூறிய டாக்டர் கிருஷ்ணமூர்த்தி, விளையாட்டுச் சுபாவத்துடன், பரோபகார சிந்தையும் படைத்த மைத்துனன் ஸ்ரீதரனை அன்புடன் தழுவிக் கொண்டான்



# தோழியின் திட்டம்

சிவகாமு

கடிதத்தைப் பார்த்ததுமே யார் எழுதியிருக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டு விட்டேன். என் அருமைத் தோழி லலிதாவைத் தவிர வேறு எவர் அவ்வளவு லாகவமாய் எழுத முடியும்! எவர் அதே சுழிப்புடன் அதே சாயலுடன் என் பெயரை எழுத முடியும்!......

'விஜயம் டியர்!

உன்னை இதைவிட எப்படி அன்பாக அழைக்க முடியும்? மன்னி என்று?...எனக்கும் பிடிக்கவில்லை. காலம் மாறுகிறது; புதிய சம்பவங்கள், நிகழ்ச்சிகள் என்னும் வெள்ளம் வந்து பழைய திட்டுக்களையும் கரைகளையும் அடித்துக் கொண்டு போய் விடுகிறது. ஆனால் நம் பள்ளிக்கூட வாழ்க்கை......அம்மாதிரி மறைந்து போகுமா?

அது இருக்கட்டும்; அண்ணா எப்படி இருக்கிறார் என்று கேட்க மனம் ஆசைப்படுகிறது. ஆனால் எப்படி இருப்பார்? உன்னைச் சுற்றி வளைய வளைய வந்து கொண்டிருப்பார் என்று அதே மனம் சமாதானம் செய்து விடுகிறது.

விஷயத்துக்கு வருகிறேன்! சென்ற வருஷம் நம் ஒப்பந்தப்படி இந்தத் தீபாவளிக்கு எங்கள் வீட்டுக் குழாயில் 'கங்கை' வருகிறதாம்; நீயும் அண்ணாவும் இங்கே வந்து கங்கா ஸ்நானம் செய்ய வேணுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்தக் கடிதம் முன்னெச்சரிக்கை. அப்பா பிறகு அண்ணாவுக்கும் கடிதம் எழுதுவார்!

தீபாவளிக்கு இரண்டு நாள் முன்னதாகவே உன்னை எதிர்பார்க்கிறேன்.

உன் அன்புள்ள
லலிதா.'

என் தோழி லலிதா!...வருஷம் இரண்டாகியும் இன்று போல இருக்கிறது!

அன்றுதான் எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷையின் கடைசி நாள். பரீக்ஷை எழுதிவிட்டு வேகமாக வெளியே வந்தேன். வழக்கம் போல மகிழ மரத்தடியில் லலிதா உட்கார்ந்திருந்தாள். அவளுடைய விரல்கள் மண்ணில் ஏதோ கோலமிட்டுக் கொண்டிருந்தன. நான் அவளிடத்துக்கு ஓடினேன்.

"லலி, எப்படி 'பேப்பர்'?"

"ரொம்ப 'ஈஸி' விஜயம்!"

"என்ன, என்னமோ போல இருக்கிறாயே! உன் முகம் ஏன் ஒரேயடியாகச் சோர்ந்திருக்கிறது!"

"விஜயம்! இந்தப் பள்ளிக்கூட வாழ்க்கை எப்பொழுதும் இப்படியே இருக்கக் கூடாதா! இதை எப்படி விட்டுப் போவது!"

லலிதாவின் கண்களில் நீர் கசியத் தொடங்கிற்று. அவள் ரொம்ப உணர்ச்சி வசமாகி விட்டாள் என்பது எனக்குத் தெரிந்தது. எனக்கும் வருத்தமாகத்தான் இருந்தது.

"காலேஜுக்கோ நீ கோயம்புத்தூருக்குப் போய் விடுவாய்!" என்று பேச்சை மாற்றினேன்.

"ஆமாம்; எங்கள் அப்பா இரண்டு மாதங்களுக்கு முன்பே போய்விட்டார். என் பரீக்ஷைக்காகத்தான் இங்கே ஒரு குடும்பம் இருக்க வேண்டியிருந்தது. இதற்கப்புறம் நாம் எப்பொழுது சந்திப்போமோ!"—லலிதா விம்மி விம்மி அழுதாள்.

"பெண்களுடைய பள்ளிக்கூட சிநேகிதம் ரயில் சிநேகிதம் போலத்தான் லலி, நீ அழாதே."

"விஜயம், இந்த வாயாடியை மறந்து விடாதே! போய் வருகிறேன்...குட்பை."

"'குட்பை' லலி."

## 2

பரீக்ஷை முடிவுகள் வந்தன. நான் தேறியிருந்தேன். வீடு ஒரே அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது, என் விஷயமாக.

என் தாயார், "அவள் படித்தது போதும். மேற்கொண்டு கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்!" என்றாள்.

"போடி, பைத்தியம்! குழந்தைக்கு இன்னும் பதினாறு வயசு முடியவில்லை; அதற்குள் என்னடி கல்யாணம் வேண்டிக் கிடக்கிறது!" என்று பிடிவாதம் பிடித்தார் என் தகப்பனார்.

கடைசியில் அப்பாவின் பிடிவாதமே நிறைவேறிற்று. காலேஜில் சேர்ந்து படிக்க ஆரம்பித்தேன். முதலில் லலிதாவின் ஞாபகம் வரத்தான் செய்தது. பிறகு புதிய சிநேகிதிகள், புதிய முறைப் படிப்பு...இப்படி நாட்கள் ஓடின.

வழக்கம் போல அன்று மாலை ரிக்ஷாவிலிருந்து இறங்கிப் புத்தகங்களை எடுத்துக் கொண்டு வீட்டிற்குள் அடி எடுத்து வைத்ததும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது! கூடத்தில் பெரிய ரத்ன கம்பளம் விரிக்கப்பட்டு நாலைந்து புருஷர்கள் ஒரு பக்கமாகவும், இரண்டு மூன்று ஸ்திரீகள் இன்னொரு புறத்திலும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். என் தகப்பனார் தவிர, மற்ற எல்லோரும் புதிய முகங்கள். 'என்ன விசேஷம்!' என்று மனம் ஆராய்ந்து முடிவு கட்டுவதற்குள் என் கண்கள் திருட்டுத் தனமாக ஒரு காரியம் செய்தன. வீட்டுக் கூடத்தில் ஒரு பக்கத்தில் வெட்கம், சங்கோசம், லஜ்ஜை என்ற குணங்கள் எல்லாம் உருவெடுத்தவர் போல ஒருவர் கரவேதனைப் பட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அவரை ஒரு மின்னல் வெட்டுப் போலப் பார்த்து விட்டன. அட பகவானே! அதே க்ஷணத்தில் தானா அவரும் என்னை ஏறிட்டுப் பார்க்க வேண்டும்! ஒருக்ஷணம் தப்பினேன், கால் இடறிக் கீழே விழ

"என்னம்மா, இன்றைக்குக் காலேஜிலிருந்து வர இத்தனை நேரம்!"—அப்பா உட்கார்ந்த இடத்திலிருந்தே கேட்டார்! அவருக்கு என்ன தெரியப் போகிறது, என் மன நிலைமை! நான் பதில் ஒன்றுமே சொல்லாமல் ஓடிவிட்டேன்.

அம்மா என்னைப் பார்த்ததும், ஒரு விஷமச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே, "வா, சீக்கிரம்! எல்லோரும் உனக்காகக் காத்திருக்கிறார்கள்!" என்றாள்.

எனக்கு விஷயமே தெரியாதென்றால் அது பச்சைப் பொய்யாகும்! ஆனாலும் வாய் வெகு தைரியமாக "எதற்கு அம்மா!" என்று கேட்டது.

"எதற்கா, உன்னைப் பார்க்கத்தான்!" திரும்பவும் அதே விஷமச் சிரிப்பு தவழவிட்டுக் கொண்டு இருந்தது, என் தாயார் முகத்தில்.

"ஏன், அம்மா! அப்பாதான் இப்பொழுதே கலியாணப் பேச்சு வேண்டாம் என்றாரே!"

"பின்னே வீட்டுக்காரர்களே வந்து பார்த்தால் நாம் எப்படி அம்மா வேண்டாம் என்கிறது! அதுவும் நல்ல இடமாம்!"

"போம்மா! எனக்கு இப்ப ஒன்றும் வேண்டாம்!" என்றேன். அது விளையாட்டுக்கோ விளைக்கோ, என் அந்தராத்மாவுக்குத் தெரியும்!

"வாம்மா, சீக்கிரம்! ஒரு கை பின்னி விடுகிறேன்! போய் முகத்தை அலம்பிக் கொண்டு டிரஸ் பண்ணிக் கொள்!"

அம்மா தலை பின்ன உட்கார்ந்தாள்.

"பார், விஜி! அவர்களுக்கு முன்னால் பணிவாக, அடக்க ஒடுக்கமாக நடந்து கொள்ளணும்!"

"எப்படி அம்மா!"

"இது கூடவா சொல்லித் தரவேணும்! நீ என்ன படிப்பு படிக்கிறாய்! பூமி அதிர நடக்கக் கூடாது; அமரிக்கையா, நாகரிகமா..."

"எப்பம்மா, நான் நாகரிகமில்லாமல் நடந்து கொண்டிருக்கிறேன்!"

"அதற்கில்லையம்மா, தலை நிமிர்ந்து எவரையும் வெறிக்க வெறிக்கப் பார்க்கக் கூடாது; ஏதாவது கேட்டால் பளிச்சென்று உடனே பதில் சொல்லிவிடக் கூடாது. சிறிது நிதானமாக..."

இப்படி அம்மா என்ன என்னவோ சொல்லிக் கொண்டிருந்தாள். என் காதுகள் இரண்டும் திறந்துதான் இருந்தன. ஆயினும் மனம் தான் வேறு எங்கேயோ 'மேய'ப் போய் விட்டதே!



## 3

என்னைப் பார்க்க வந்திருப்பவர்......பெயர் என்னவோ! எப்படி இருப்பாரோ! அவருடன் என் வாழ்க்கை எப்படிச் செல்லுமோ! பெரிய அத்திம்பேர் போலவா!

பெரிய அக்கா அலமேலுவின் புருஷன்......அவர் பெயர் எத்தனை நீளம்! சீனிவாச நரசிம்ம தேசிகன்! பெயருக்கேற்றபடி பெரிய சரீரம்தான்! ஆனால் நல்ல உயரத்தினால் பருமனைக் காட்டாது. நான் பிறப்பதற்கு முன்பே அலமேலுவுக்குக் கலியாணமாம், அம்மா சொல்லியிருக்கிறாள். அக்காவுக்கு இவரை முதலில் பிடிக்கவேயில்லையாம். கலியாணப் பந்தலில் உட்கார மாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தாளாம்! அப்புறம் அவளுடைய மாமியார் தன் கழுத்தில் இருந்த காசுமாலையைக் கழற்றிப் போட்டதும் எல்லாம் சரியாகப் போய் விட்டதாம்!

கலியாணம் ஆகி அக்கா புக்ககம் போன பிறகு அவளுடைய பேச்சை அத்திம்பேர் தாண்டினதே கிடையாது. அக்கா அபிப்பிராயம்தான் அத்திம்பேர் அபிப்பிராயம். அவர் பேருக்கு இருக்கிறார். பணம் சம்பாதித்துக் கொண்டு வந்து அலமேலு அக்கா கையில் கொடுக்க; செலவு முழுக்க முழுக்க அவளதுதான்! அத்திம்பேருக்கு வேண்டியது 'நியூஸ் பேப்பர்'; நல்ல கும்பகோணம் தளிர் வெற்றிலை; சீவல்; வாசனைப் புகையிலை! அப்புறம் வீட்டைப் பற்றிக் கவலையே படமாட்டார். வெற்றிலையையும் புகையிலையையும் வாயில் குதப்பிக் கொண்டே இருப்பதால் எவருடனும் பேச மாட்டார்; பேப்பரை வைத்துக் கொண்டு படித்துக்கொண்டே இருப்பார்.

"குளிக்கப் போகவில்லையா!" என்று அக்கா தாக்கீது கொடுப்பாள்.

"உம்...!" வாயைத் திறக்காமலே பதில்.

ஐந்து நிமிஷம் கழித்து, "என்ன, வெந்நீர் ஆறிப் போகிறதே!" என்று திரும்பவும் அக்கா எச்சரிக்கை செய்வாள்.

"இதோ, இதோ, வந்துவிட்டேன்!" மேலே பார்த்துக் கொண்டு சொல்லுவார், வாய் நிறைய இருக்கும் எச்சில் தெறிக்காமல் இருக்க. ஆனால் எழுந்திருக்க மாட்டார். கால் மணி அரை மணி என்று நேரம் கழிந்து கொண்டேயிருக்கும். கடைசியில், "ஆபீசுக்கு மணி ஆயிடுத்து" என்று கடைசித் தாக்கீது அக்கா கொடுப்பாள். உடனே தடதடவென்று எழுந்திருப்பார்; பேப்பரை மடக்கி ஒரு மூலையில் எறிவார். 'இரண்டு செம்பு வெந்நீரை எடுத்துக் கொட்டிக் கொண்டு தலையைத் துவட்டியும் துவட்டாமலும் இலையில் உட்கார்ந்து விடுவார். நன்றாகத்தான் சாப்பிடுவார்; ஆனால் ருசி அறிந்து சாப்பிடுவாரா என்றால் அது தான் கிடையாது! சட்டையை மாட்டிக் கொண்டு வெற்றிலைப் பெட்டியுடன் ஆபீசுக்குக் கிளம்பி விடுவார். அவர் வாய் திறந்து பேசியோ, சிரித்தோ நான் பார்த்ததே கிடையாது! ஆபீஸிலும் அப்படித்தான் காலத்தைக் கழித்து வருகிறாரோ, என்னவோ! யார் கண்டார்கள்!

இதற்கு நேர் எதிரானவர் இரண்டாவது அத்திம்பேர், வனஜாவின் புருஷன்...! ஏ. என். கே. சாரி! கொஞ்சம் குட்டை; அதோடு கரங்கல். அதற்கு அழகு செய்வது போல் பெரிய தலை. இவ்வளவு ரூப லாவண்யத்தையும் தன் 'ஸ்டைலி'னாலும், 'பாஷ'னாகத் தைத்துக் கொண்டிருக்கும் உடுப்புக்களினாலும் மறைத்துக் கொண்டு விடுவார்! வாயைத் திறந்தாலோ அசல் வெள்ளைக்காரன் மாதிரியே பேசுவார்! ஏதோ, 'எகனாமிக்ஸ்' என்று சொல்கிறார்களே! அந்தப் பரீக்ஷையில் மாகாணத்துக்கே முதலாம். எதை வேண்டுமானாலும் எவரைப் பற்றி வேணுமானாலும் அவரைக் கேட்கலாம்! 'நடக்கும் அகராதி' போலப் பளிச் பளிச் என்று பதில் சொல்லி விடுவார்!

இதற்கு நேர்மாறாக வனஜா இருந்தாள். சின்ன வயதில் வனஜா சரியாகப் பள்ளிக்கூடம் போனதே கிடையாது. பதினேழு வயதில் மூன்றாவது பாரம் படித்துக் கொண்டிருந்தாள். நல்ல இரட்டை நாடி சரீரம்; குண்டு முகத்தில் சிரிக்கும்

போது அழகாகக் குழி விழும்! அந்த அழகுதான் அவளுக்கு அந்தப் பிள்ளையாண்டானைக் கொண்டு வந்து கொடுத்தது! வனஜாவுக்குத் தன் புருஷன் பெரிய படிப்பு படித்தவர் என்ற கர்வம் கொஞ்ச நஞ்சமல்ல; அதே காரணத்தால் அவர் விதிக்கிற கோட்டையும் தாண்ட மாட்டாள்.

வனஜாவின் புருஷர், ஒரு நிமிஷம் அவளுடன் சிரித்துக் கொண்டே பேசுவார்.

"இன்றைக்குப் பாயஸம் ரொம்ப ஜோர்! வனஜா! உன் கைக்கு ஒரு மெடல்தான் செய்து போட வேண்டும்!"

"மெடல் ஒன்றும் வேண்டாம்...... வந்து..."

"பின்னே என்ன வேண்டும்! கேள்; ஒரு வைர மூக்குத்தி! ஒரு வைர நெக்லஸ்...... !"

"அட ராமா! அதெல்லாம் இருக்கட்டும்; சாயந்தரம் வரும்போது......"

"ஒரு இரண்டு முழம் கதம்பம்! ஒரு பாக்கெட் பாதாம் ஹல்வா தானே...... !' சாங்க்ஷன்டு...... !"

"சரியாப் போச்சு! சாயந்தரம் காப்பிக்குச் சர்க்கரை இல்லே......" என்பாள் அவள்.

அவ்வளவுதான்; அவ்வளவு கொஞ்சலும் கோபமாக மாறிவிடும்! அவளை உற்று ஒரு தடவை பார்ப்பார். பிறகு "என்ன, சர்க்கரை ஆயிடுத்தா!" என்று கேட்பார்.

"ஆமாம்...... !"

"இப்பொழுதுதானே போன சனிக்கிழமை நாலு வீசை வாங்கிக்கொண்டு வந்தேன். இன்னும் ஒரு வாரம் கூட ஆகவில்லையே...... !"

"நான் என்ன சர்க்கரையை வெறும் வாயில் தின்னும் குழந்தையா! வீடு என்றால்......"

"மூன்று நாளைக்கு நாலு வீசை சர்க்கரையா! குடும்பம் உருப்பட்டால் போலத்தான்!" கோபத்துடன் மோர் சாதம் சாப்பிடாமலே போய் விடுவார்! இப்படி க்ஷணச் சித்தம் க்ஷணப் பித்தமான ஆசாமி! அவரைப் பாம்பு என்று தாண்டவும் முடியாது! பழுதை யென்று மிதிக்கவும் முடியாது! ஆனாலும் வனஜாவின் குடும்பத்தில் சந்தோஷத்துக்குக் குறைவு ஒன்றுமில்லை!......

இப்படி எண்ணிக் கொண்டே யிருக்கும்போது "எழுந்திரு, விஜயம்! என்னமோ பிரமை பிடித்தவள் போல உட்கார்ந்து விட்டாயே! போய் வா, சீக்கிரம்!" என்று அம்மா எழுப்பினாள்.

4

பிறகு இயந்திரம் போல எழுந்தேன். முகத்தை அலம்பிக் கொண்டேன். டிரஸ் செய்து கொண்டேன். வெள்ளி டம்ளர்களில் காப்பி எடுத்துக் கொண்டு போய் ஒவ்வொருவர் முன்னிலையிலே வைத்தேன். ஒரு நிமிஷம் நிறுத்தி வைக்க வேண்டுமென்று பையனின் தாயார் "எதுவரை படித்துக் கொண்டிருக்கிறாய்!" என்று மெதுவாகக் கேட்டாள்.

"இன்டர் மீடியட் முதல் வருஷம்!" என்றேன். அதற்குள் எனக்கு வெட்கமாய்ப் போய்விட்டது! எல்லாருடைய கண்ணம்புகளும் என்னை நோக்கித் தான் நின்றன!

கடைசியில் கல்யாணம் குதிர்ந்தது. அப்பாவே முழு மனத்துடன் கல்யாண ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்த பிறகு நான் என்ன செய்ய முடியும்!

ஜானவாசத்தன்று, நான் என் அறையில் இருந்தேன். "எங்கே இருக்கிறாய் விஜயம்!" என்று எவரோ அழைத்துக் கொண்டே வரும் சத்தம் கேட்டது! திரும்பினேன்! என்ன ஆச்சரியம்! என் தோழி லலிதாதான்!

"லலி...நீயேதானா! எங்கே வந்தாய்! அதுவும் இந்தச் சந்தர்ப்பத்திலே!"

"பைத்தியம்! நான் உங்க சம்பந்தியம்மா! தெரியுமா!" என்றாள் லலிதா.

நான் விழித்தேன், திக்குத் திசை யறியாமல். "என்ன லலி, விவரமாய்ச் சொல்லேன்!" என்றேன்.

"விவரம் என்ன வேண்டும்! உன் அகத்துக்காரர் என் அண்ணன்; சித்தப்பா பிள்ளை!"

அப்பொழுதுதான் விஷயம் புரிந்தது. என் உயிர்த் தோழி லலிதாதான் என் தொடர்பு வெறும் ரயில் ஸ்நேகமாகப் போகக் கூடாது என்று நினைத்து இந்தக் காரியத்தைத் துணிந்து செய்திருக்கிறாள் என்று!

கல்யாணம் ஆன காலம் நாள் லலிதா ஊருக்குப் புறப்படும் போது "விஜயம்! சீக்கிரம் எங்கள் வீட்டுக்கு வந்து சேர்! எனக்குப் பொழுதே போகவில்லை!" என்று சொன்னாள்.

"ஓஹோ, நீ இவ்வளவு சுயநலக்காரியா! அடுத்த தை மாதம் உனக்கும் இதே வரிசைதான்! அப்போது நான் உனக்குச் சம்பந்தி ஸ்தானமாக்கும்!"

"எப்படி அம்மா!"

"என் அண்ணா ரகுவுக்கும் உனக்கும்..."

"அதற்குள் என் மானத்தை வாங்கிவிடாதேடீ!" என்று என் வாயைப் பொத்தி விட்டாள் லலிதா.

அதே மாதிரி லலிதாவுக்கும் என் சித்தப்பா பிள்ளை ரகுவுக்கும் கல்யாணம் நடந்தது. சென்ற வருஷம் என் தலை தீபாவளியின்போது அவன் எங்கள் வீட்டுக்கு வந்திருந்தான். அன்று செய்து கொண்ட தீர்மானத்தின்படி இந்த வருஷம் அவளுக்குத் தலை தீபாவளி ஆனபடியால் என்னை அழைத்துக் கடிதம் எழுதி யிருக்கிறாள்!

எப்படி இருக்கிறது, என் தோழியின் திட்டம்

அட்டைப்பட விளக்கம்

# தமிழ்க் களஞ்சியம்

டி. கே. சி.

## 38. ராஜபதவி அல்லவா கிடைத்தது!

கவிப் பண்பு என்பதை அறிவது கஷ்டமான காரியந்தான். ஆங்கிலேயருக்குக் கூட அது கஷ்டமாகத்தான் இருந்திருக்கிறது.

1861-ம் வருஷம் வரையும் கவியோ சக்கையோ ஏதோ, எல்லாவற்றையும் கவி என்றே உட்கொண்டு வந்தார்கள். பால்கிரேவ் ஆசிரியர் என்று ஒருவ மிக்க சிரமப்பட்டு செய்யுள்களை அலசி புடைத்து உண்மையான கவிகளை ஒ கோவை செய்து புஸ்தகமாகப் போட் டார். புஸ்தகம் போட்ட வருஷம் 186

புஸ்தகத்தைப் பலரும் பார்த்து அனுபவித்தார்கள். கவி உணர்ச்சி தங்களுக்கு வந்ததாகவே கருதினார்கள் பலர். அந்தக் கோவையே இன்னும் ஒரு உரைகல்லாக வைத்து வருகிறார்கள் ஆசிரியர்கள் முதலானோர்.

ஆங்கிலக் கவிதைக் கதை அப்படி இருக்கிறது. இதைக் கவனிக்கும்போது தமிழ்க் கவிதையைத் தமிழர்கள் அனுபவித்த விஷயம் பெரிய வியப்புக்கு இடமாய் இருக்கிறது.

இரண்டாயிரம் வருஷத்துக்கு முன்னதாகவே தமிழர்கள் கவிப் பண்பை அபாரமாய்க் கண்டு அனுபவித்திருக்கிறார்கள். "முத்தொள்ளாயிரம்" அதற்கு ஒரு சான்று.

முத்தொள்ளாயிரத்தின் கலை வேகம் நெடுகிலும் கவிஞர்களை ஆண்டு வந்திருக்கிறது. இன்றைய கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையையும் ஆண்டு வருகிற காரியம் நமக்குத் தெரியும்.

கவிப்பண்பு தமிழர்களோடு நெடுகிலும் நெருங்கி உறவாடி வந்ததே; காரணம் என்ன? அரசர்கள் கவிஞர்களைப் பாராட்டி வந்ததுதான்.

இந்த ஆதரவைப் பலரும் பல வகையாய்ப் பாராட்டியிருக்கிறார்கள். பாண்டிய மன்னர் கம்பரைப் பாராட்டியது ஒரு நாடகமாய் உருவெடுக்கிறது. பார்க்கலாம் அதை:

கம்பர் மதுரைக்கு வந்து பாண்டியனது விருந்தாளியாய் இருக்கிறார்.

* * *

தினம் புதிது புதிதான பாடல்கள் வந்து எல்லாரையும் பரவசப் படுத்துகிறது. கேளாத முறையில் கவிகள் அமைந்து வருகின்றன. புலவர்கள் அனுபவிக்கிறார்கள். பாண்டிய மன்னனுக்கு வெறி பிடித்து விட்டது என்றே சொல்லலாம். பாண்டிய மன்னனது தேவியுமே அபாரமாய் அனுபவித்துத் திளைக்கிறாள் கவிகளில்.

இந்த விதமாக நாட்கள் செல்கின்றன. மாசங்கள் செல்கின்றன.

ஒரு நாள் கம்பருக்குத் தக்க முறையில் பாராட்டு நடத்த வேண்டும் என்று அரசன் எண்ணுகிறான். எண்ணியபடியே ஒரு நாளையும் குறிப்பிட்டான்.

கோலாகலமாய் எல்லோரும் பாராட்டில் கலந்து கொள்கிறார்கள். பாராட்டில் முக்கிய அம்சம் கவிஞரைப் பல்லக்கில் வைத்து மேளதாளங்களுடன் ஊர்வலம் வருவதுதான். ஊர்வலத்துக்காக எல்லாம் தயாராய் விட்டது.

கம்பரைப் பல்லக்கில் உட்கார்த்தினார்கள். புறப்பட்டது பல்லக்கு. நாலு வீதியையும் சுற்றி வந்து அரண்மனை வாசலில் இறங்கியது.

பாண்டியன், முன் பக்கத்தில் இருந்து வந்து படிமேல் ஏறித் திண்ணை மேல் நின்றான்.

பின் பக்கத்தில் இருந்து தோளைத் துடைத்துக் கொண்டு படிமேல் ஏறி அரசன் பக்கத்திலே நிற்கிறாள் பாண்டிமா தேவி. கம்பரும் பல்லக்கை விட்டு இறங்கி மெள்ளப் படிமேல் ஏறிப் பாண்டியனுக்கு முன்னால் நின்றார். பாண்டிமா தேவியைப் பார்த்துக் கம்பர் கேட்டார்: "ராணியம்மாளை இன்று நான் பார்க்கவில்லை. வேறு எங்கேயாவது போயிருந்தீர்களோ?"

பாண்டி மாதேவி: "எங்கும் போகவில்லை. ஊர்வலம் வரும்போது பல்லக்கின் பின்புறம் நின்று தோள் கொடுத்து வந்தேன்" என்றாள்.

கம்பரைத் தூக்கி வாரிப் போட்டுவிட்டது. ஒரே வியப்பில் அப்படியே மௌனமாய் நின்றார். அன்பும் நன்றியும் முகத்தில் சுழித்து ஓடிக் கொண்டிருந்தன. சிறிது நேரங் கழித்துப் பாட ஆரம்பித்தார் கம்பர், பாண்டிமாதேவியைப் பார்த்து.

உமையாளும் நீயும்
ஒருங்கொப்பே,—

பார்வதி தேவியும் நீயும் ஒன்றுதான். ஆனாலும் பார்வதி தேவியின் ஜாதகத்தில் ஒரு குறைபாடு.

உமையாளும் நீயும்
ஒருங்கொப்பே; ஒப்பில்
உமையாளுக்(கு) அங்குண்டோர்
ஊனம்—உமையாள்தன்
பாகம்தோய்ந்(து) எம்மான்
பலிக்குழன்றான்,: பாண்டியன் நின்
ஆகத்தோய்ந்(து) ஆண்டான்
அரசு!

[ஒப்பில்: ஒப்பில்லாத; ஊனம்: குறைபாடு; பாகந் தோய்ந்து: வலது பாகத்தைச் சேர்ந்த காரணமாக; எம்மான் பலிக்குழன்றான்: நம்முடைய இறைவன் சிவபெருமான் பிச்சை எடுத்துக் கஷ்டப் படும்படி நேர்ந்தது; ஆகம்: மார்பு]

ஹாஸ்யம், உணர்ச்சி, நன்றி எல்லாம் சேர்ந்து தமிழ்ப் பாஷையை ஒரு அற்புதமான நடமாடிப் போகச் செய்கின்றன. பாடப் பாட இனிமை தட்டும் நாவுக்கு.

# இருமலும் மூச்சுத் திணறலுமுடைய ஆஸ்த்மா, பிரோங்கைட்டிஸ் 3 நிமிஷங்களில் ஒழியும்

உங்களுக்கு ஆஸ்த்மா அல்லது பிரோங்கைட்டிஸ் மிகக் கடுமையாகி, மூச்சுத் திணறி, தூக்கமின்றி தவிக்கிறீர்களா? உங்கள் வியாதி எவ்வளவு நாள்பட்டதாயினும் சரி, மெண்டாகோ (Mendaco) புதிய நம்பிக்கை யளிக்கும். மயக்க மருந்து, புகை, இஞ்செக்ஷன், ஆடமைஸர் ஒன்றும் தேவையில்லை. ருசியற்ற இரண்டு மெண்டாகோ (Mendaco) வில்லைகளை போஜனத்துடன் உட்கொள்ளுங்கள் போதும். மெண்டாகோ (Mendaco) ரத்தத்துடன் பரவி மூன்று நிமிஷத்தில் திணறலுக்குக் காரணமான கபத்தைக் கரைத்து அகற்றி, சுவாசத்தை லகுவாக்கி, முதலிரவிலேயே சுக நித்திரை வரச் செய்யும். சீக்கிரத்தில் இளமையும், வலுவும் பெறுவீர்கள்!

## இரண்டு வருடங்களாக ஆஸ்த்மா இல்லை

ஸ்ரீ ஜே. ஆர். எடையில் 40 பவுண்டு குறைந்து, இருமலும் திணறலும் பிரதி இரவிலும் தூக்கத்தைக் கலைத்து, முடிவில் சாவையே எதிர் பார்த்திருந்தார். மெண்டாகோ (Mendaco) முதல் இரவிலேயே ஆஸ்த்மா இழுப்பை நிறுத்தியது—பின்னர் நோய் வரவே யில்லை.

## பணம் வாபஸ் உத்திரவாதம்

மெண்டாகோ (Mendaco) முதல் டோஸே ஆஸ்த்மாவின் விளைவுகளை ஒழிக்க இயற்கையுடன் உதவுகிறது. பயன் இல்லையேல், காலிப் பெட்டியைத் திருப்பி, முழு விலையையும் திரும்பப் பெறலாம். இந்த உத்திரவாதம் உங்களுக் கான பாதுகாப்பு.

**Mendaco**

**மெண்டாகோ**

★ ஆஸ்த்மா ★ பிரோங்கைட்டிஸ் ★ குளிர் ஜுரம் இவைகளை ஒழிக்கிறது

---

# கள்ளிக்கோட்டை பண்ட்ஸ் லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

ஹெட் ஆபீஸ் : 9, செம்புதாஸ் தெரு, மதறாஸ்-1

போன்: 55556 | தபால் பெட்டி நெ. 1395 | தந்தி: KALLIFUNDS

## எங்கள் நவம்பர் மாத சீட்டு வரிசை

பிற்காலத்திற்குச் சேராகச் சேமியுங்கள்

30 மாதங்கள் — 30 சந்தாதாரர்கள்

3 - வது ஜுபிலி ஏலங்கள்

சந்தா செலுத்த கடைசி தேதி 14-11-53
முதல் ஏலத் தேதி 15-11-53

உடனே விண்ணப்பியுங்கள்

1. நீங்கள் எங்கிருந்தும் சந்தாதாரர் ஆகலாம்.
2. தபால் அல்லது வேறு யார் மூலமோ ஏலம் கேட்கலாம்.
3. சேமிப்பாகக் கருதுகிறவர்களுக்கு குறைந்தபட்ச வட்டி உத்திரவாதம் செய்யப்படுகிறது.

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| C | 100 | 3000 |
| D | 50 | 1500 |
| E | 25 | 750 |
| F | 20 | 600 |
| G | 15 | 450 |
| H | 10 | 300 |

எமது விதிகளும் நிபந்தனைகளும் கோரிக்கையின் பேரில் தெளிவான விலாசங்களுக்கு அனுப்பப்படும்.

(போர்டார் உத்திரவுப்படி.) எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்.





**ரமண்லால் வஸந்தலால் தேசாய் :: மொழி பெயர்ப்பு : ரா. வி.**

## 20. யாருக்குக் காரியதரிசி?

ஜ்வாலாப் பிரஸாதின் தந்தைக்குத் தாம் அத்தனை தடித்த பணக்காரரா யிருந்தபொழுதிலும், தம்மைப் பணக்காரன் என்று சொல்லிக் கொள்வதில் ஒரு பெருமை இருப்பதாகத் தோன்றவில்லை. சாதாரணப் போலீஸ் அதிகாரிக்குள்ள செல்வாக்குக் கூடத் தமக்கு இல்லையே என்றுதான் ஏங்கினார்.

மிக மிகச் சாதாரணமான போலீஸ் அதிகாரி கூடத் தாம் இத்தனை மணிக்கு வரப் போவதாகவும், தம்மை அழைத்துப் போக வண்டி அனுப்புமாறும் அதிகாரம் தொனிக்க அவருக்குச் சொல்லி அனுப்பி விட்டால், வாய் திறக்காமல் அவர் ஆணைக்குக் கீழ்ப்படிய வேண்டி யிருந்தது. அவரை விட மேலதிகாரிகளா யுள்ள இன்ஸ்பெக்டரோ, கமிஷனரோ கார் அனுப்பும்படி கேட்டு விட்டால் மறுத்துச் சொல்லாமல் குறித்த நேரத்துக்குக் குறித்தபடி கார் அனுப்பி வைக்க வேண்டியிருந்தது. அதையெல்லாம் நினைத்துப் பார்க்கும்பொழுது, 'இதென்ன அவலப் பிழைப்பு? பணத்துக்குப் பெருமை என்பதையே காணோமே! இத்தனை பெரிய பணக்காரனாயிருப்பதைக் காட்டிலும், நாம் சாதாரணப் போலீஸ் கான்ஸ்டேபிளாக இருந்தால் கூட எத்தனையோ நன்றாக இருக்குமே! எத்தனையோ மதிப்பும் மரியாதையும் கிட்டுமே!' என்று எண்ணுவார்.

உங்களைப் போலீஸ் கமிஷனராகவோ, உயர் நீதி மன்றத்து நீதிபதியாகவோ ஆக்கி விடுகிறேன் என்று சொல்லி அவரிடம் யாராவது சொத்து முழுவதையும் தமக்குத் தந்து விடுமாறு கேட்டால் கூட அவர் கொடுக்கச் சித்தமா யிருந்தார். பணக்காரனாக இருந்து பெருமையின்றி வாழ்வதைக் காட்டிலும் அதிகாரம் செலுத்த வேண்டும் என்பதில் அவருக்கு அவ்வளவு ஆசை. ஆனால் பணக்காரனாகவோ, போலீஸ் கமிஷனராகவோ, நீதிபதியாகவோ ஆவதற்குள்ள யோக்கியதையும் தகுதியும் ஒரு மாதிரியான தல்ல என்பது அவருக்குத் தெரிந்த விஷயம்தான். ஆயினும் இக்கரைக்கு அக்கரை பச்சை என்ற கதையாக அவருடைய மனம் அந்த விஷயங்களில் சிந்தனையைச் செலவிட்டது.

அதையெல்லாம் அநுபவ வாயிலாகக் கண்ட அவருக்குத் தம் பிள்ளை ஜ்வாலாப் பிரஸாத் வெளிநாடு சென்று நல்ல நாகரிகம் கற்றுவரவேண்டும், ஸிவில் ஸர்விஸ் பரீக்ஷை கொடுத்துக் கலெக்டராக வர வேண்டும். இல்லாவிட்டால் பாரிஸ்டர் பரீக்ஷையாவது கொடுத்து நீதிபதியாக வரவேண்டும் என்று கொள்ளை ஆசை. இரண்டும் நடக்கக்கூடிய காரியமாக இல்லாவிட்டால் குறைந்த பட்சம் எம். ஏ. பரீட்சையாவது கொடுத்துக் கல்லூரி மாணவர்களை ஆட்டி வைக்கும் பிரின்ஸிபாலாகவாவது பதவி வகிக்க வேண்டும் என்ற எண்ணம். அவற்றில்தான் பணம் படைத்ததன் பயன் பரிபூரணமாக இருப்பதாக அவர் உத்தேசம்.

ஆனால் ஜ்வாலாப் பிரஸாதினால் தம் தந்தையின் ஆசையை நிறைவேற்றி வைக்க முடியவில்லை. இரண்டு மூன்று தலைமுறைகள் ஆனந்த போகத்திலே இன்பமாக காலத்தைக் கழித்து விட்ட குடும்பங்களின் சூழ்நிலை தலைகீழாக மாறி விடுவதுதான் அதற்குக் காரணம். அம்மாதிரிக் குடும்பங்களில் பிறந்தவர்களுக்குப் படிப்பில் பற்று உண்டாவதில்லை. உழைப்பில் உற்சாகமும் ஊக்கமும் ஏற்படுவதில்லை. சுகமாக எவ்விதச் சிரமமும் இன்றி வாழ்க்கையை ஓட்ட வேண்டும் என்ற மனப்பான்மைதான் உதித்து விடுகிறது. இது நாம் தினசரி வாழ்க்கையில் கண்கூடாகக் காணும் விஷயம். பணக்காரர்களுக்குத்தான் சாதாரண மக்களைக் காட்டிலும் கோடை கஷ்டத்தைத் தருகிறது. 'அப்பா! என்ன உஷ்ணம்! என்ன உஷ்ணம்' என்று கூறி மின்சார விசிறிக் கடியில் உட்கார்ந்துகொண்டு விளாமிச்சை வேர்த் தட்டியினால் வெய்யிலை மறைத்துக் குளுமை தரவாழ்கிறார்கள். அதே போலக் குளிரும் அவர்களைத்தான் அதிகம் பாதிக்கிறது. கட்டில், கட்டிலுக்கு மேல் கனமான மெத்தை, அதற்குமேல் கம்பளி, அந்தக் கம்பளிக்கு

மேல் இன்னொரு கம்பளி. இவ்வளவு போட்டும் குளிர் அவர்களைக் கொன்று விடுகிறது.

ஏழைகளைப் பாருங்கள்! பகல் வெய்யில் முழுவதும் அவர்களுடைய தலை மேல்தான். குளிரா? குளிரும் அவர்கள் உடம்பில் தான். பணக்காரர்களுக்கு உழைப்பு என்றாலே பயம். உழைப்பினால் ஏற்படும் களைப்பு என்றாலே நடுக்கம். எப்பொழுதும் கஷ்டம், சிரமம் ஏதுமின்றிச் சுகத்திலேயே தவழ்ந்து விளையாட வேண்டும் என்பது அவர்கள் ஆசை, நோக்கம், குறிக்கோள் எல்லாம். சுகத்துக்கும் சோம்பேறித் தனத்துக்கும் நெருங்கிய நட்பு. கல்வியறிவுக்கும், சோம்பேறித்தனத்துக்கும் தீராப் பகைமை. பகைமை என்றால் சாதாரணப் பகைமையா? குத்துப் பழி, வெட்டுப் பழி என்கிறார்களே, அப்படிப்பட்ட பகைமை அல்லவா? அப்படியிருக்கும் பொழுது சுகத்தையே குறிக்கோளாகக் கொண்ட, சோம்பேறித்தனத்தையே இலட்சியமாகக் கொண்ட செல்வவந்தர்களுக்குப் படிப்பு எப்படி மேல் மாடியில் ஏறும்?

ஆயினும் ஜ்வாலாப் பிரஸாதுக்கு கல்வி புகட்ட வேண்டும் என்பதற்காக எண்ணில் அடங்காத உபாத்தியாயர்கள் அமர்த்தப்பட்டனர். ஜ்வாலாப் பிரஸாதின் படிப்பை உத்தேசித்து உபாத்தியாயர்களுக்குக் கொடுத்த பணத்தைக் கொண்டு ஒரு நல்ல பாடசாலையே ஆரம்பித்து அழகான முறையில்



நடத்தி விடலாம். பல ஏழைப் பிள்ளைகளாவது பயன் பெறுவார்கள். ஆனால் அதையெல்லாம் பற்றிச் சிந்தனையையும் பணத்தையும் செலவிடப் பணம் படைத்தவர்களுக்குப் பொழுது எங்கே இருக்கிறது? வெளி நாட்டுக்கு அனுப்பி மிகுந்த திறமைசாலிகளும், யோக்கியதை வாய்ந்தவர்களுமான நபர்களாகப் பார்த்து ஜ்வாலாப் பிரஸாதுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்கும் படியான ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்வளவு முயற்சிகளுக்கும், உழைப்புகளுக்கும் பிறகுகூட எதிர்பார்த்த வெற்றி கிட்டவில்லை. ஜ்வாலாப் பிரஸாத் ஐ. ஸி. எஸ். ஆகவோ பாரிஸ்டர் அட்-லா வாகவோ ஆகவில்லை.

ஆனால் நாகரிகமாக இருக்கக் கற்றுக் கொண்டு வந்தார்; சிகரெட் குடிக்க, டீக்காக டிரஸ் செய்து கொள்ளக் கற்றுக் கொண்டு வந்தார். எந்தெந்தச் சமயத்தில் என்னென்ன விதமாக ஆடைகள் அணிந்து கொள்ள வேண்டும் என்பது பற்றி ஆங்கிலேயர்களுக்குக் கூட அவ்வளவாக ஞானம் பற்றாது, அப்படித் தேர்ந்திருந்தார். நாகரிகச் சங்கங்களில் எப்படிப் பேச வேண்டும், எப்படி நடந்து கொள்ள வேண்டும், எப்படி உட்கார வேண்டும் என்பது போன்ற நவ நாகரிகத்துக்கு அணிகலனாக விளங்கும் விஷயங்களையெல்லாம் அவர் நன்கு கற்றுக் கையாடவும் அறிந்திருந்தார். வெளி நாட்டிலிருந்து திரும்பி வந்த பின் எந்த இடத்தில் எவ்வளவு வாயைத் திறந்து சிரிக்க வேண்டும் என்பதை நன்கு நினைவுத் திரையில் வைத்துக் கொண்டு அதற்கேற்ற முறையில் நடந்து கொள்ளலானார். சிரிக்கும் பொழுது கீழ் உதடு திறக்கக் கூடாது என்பதை மூடி போட்டுக்கொண்டு நினைவு வைத்திருந்தார். விருந்திலோ வீட்டிலோ உணவருந்தும் பொழுது வாயின் வேகம் எத்தகையதாக இருக்கவேண்டும், முகத்தை எப்படி நாசூக்காக வைத்துக் கொள்ள வேண்டும், சுவைத்துச் சாப்பிடும் பொழுது வாயிலிருந்து எவ்விதமான சத்தமும் வராமல் எப்படிச் சாப்பிட வேண்டும்? இது போன்ற விஷயங்களைக் கற்றுத் தேர்வதுதான் கல்வியறிவின் கடைசிக் கட்டம் என்பது அவர் சித்தாந்தம். அந்தச் சித்தாந்தத்தை அவர் கரை கண்டு விட்டார் என்று சொன்னால் கூடச் சிறிதும் மிகையாகாது. அவர் ஒரு யோக்கியதையோ பட்டம் பதவியோ பெறவில்லை என்றாலும், உயர்ந்த உத்தியோகத்தில் அமரவில்லை என்றாலும் நாகரிகம் வாய்ந்த சமூகங்களில் எப்படிப் பழக வேண்டும், பேச வேண்டும், உட்கார வேண்டும் என்பது போன்ற நவநாகரிகச் சின்னங்கள் அவரைத் தாமாகவே வலிய வந்து ஏற்றுக் கொண்டு விட்டன. ஆங்கிலத்தில் பெரிய பெரிய அதிகாரிகளுடன் கூட அநாயாசமாகப் பேசப் பழகுதல், முரட்டு அடியாய் அடித்துப் பேசுதல் ஆகிய விஷயங்களில் அவர் எதேஷ்டமான நிபுணத்துவம் பெற்று விட்டார். கடைசியில்

தம மைந்தனின் இந்த யோக்கியதையைக் கண்டு மகிழ்ந்து மண்ணுலகத்தை விட்டு விண்ணுலகு எய்தி விட்டார் ஜ்வாலாப் பிரஸாதின் தகப்பனார்.

பணத்துக்கும் பருமனுக்கும் அப்படி என்ன நெருங்கிய தொடர்பு இருக்கிறதோ, தெரியவில்லை! சாதாரண மனிதன் காசு காசாக சம்பாதித்துச் சேர்த்து வைக்க ஆரம்பித்து விட்டால், ஜனங்கள் ''ஆசாமிக்குப் பணத் தொந்தி வைக்க ஆரம்பித்துவிட்டது!' 'சதை போட ஆரம்பித்து விட்டது!' என்று பரிகாசம் செய்யத் தொடங்கி விடுகிறார்கள். அவர்களுடைய அந்தப் பரிகாசம் பரிகாசமாயிருப்பதில்லை. நிஜமாகவே ஆள் பருத்து ஒரு அர்த்தம் பெற்று விடுகிறான். ஆகவே, பணத்துக்கும் பருமனுக்கும் பல காலங்களாகவே தொன்று தொட்ட ஒரு தொந்தம் இருக்கிறது என்றுதானே ஆகிறது?

ஜ்வாலாப் பிரஸாதின் தாயார் தந்தை இருவருமே ஸ்தூல தேகம் படைத்தவர்கள். குழந்தைப் பருவத்திலிருந்தே பருமனைப் பொறுத்தவரை தாயார் தந்தை இருவருடைய குண விசேஷங்களையும் பெற்று இரண்டு மடங்கு பருமனாகி விட்டார் ஜ்வாலாப் பிரஸாத். தகப்பனார் இறந்த பின் தகப்பனாரைக் காட்டிலும் கீர்த்தி வாய்ந்தவராகவும் பணக்காரராகவும் ஆகவேண்டும் என்ற ஆசை அவர் உள்ளத்திலே வளர்ந்தது. ஆசை வளர்ந்தது போலவே அவருடைய உடலும் பருத்து வளர்ந்தது. ஏன்? ஆசையைக் காட்டிலும் ஒருபடி அதிகமாகவே கூட அது வளர்ந்து விட்டது. அவர் பார்ப்பதற்குப் படு பயங்கரமாயிருந்தார். மாநிறமோ கறுப்பு நிறமோ படைத்த மனிதர்கள் கூடப் பார்ப்பதற்குக் குறு குறு என்று லட்சணமாயிருப்பது உண்டு. ஆனால் ஜ்வாலாப் பிரஸாதின் சஞ்சலம் வாய்ந்த கண்களைத்தவிர வேறு எந்த அவயவமும் சஞ்சலமாயில்லை; குறு குறு என்றில்லை. அவருக்குத் தமது சஞ்சலம் வாய்ந்த அந்தக் கண்களிடம் அலாதிப் பிரேமை.

அவருக்குக் கிட்டத் தட்ட நாற்பது வயதிருக்கும். இரண்டு மனைவிகள் வயது முப்பது ஆவதற்கு முன்னாலேயே மரித்து விட்டார்கள். ஆறு வருஷத்துக்கு முன்புதான் அவர் மூன்றாம் கலியாணம் செய்து கொண்டார். அவருடைய மூன்றாம் மனைவியான ராதா பேச்சு வாக்கில் சிரித்துக் கொண்டே, ''இனி உங்கள் பாக்கியத்தில் நான்காம் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்று எழுதவில்லைபோலிருக்கிறது!'' என்று கூடக் கேலியாகச் சொல்வதுண்டு. அதைக் கேட்டு அவர் சிரிப்பதா? அல்லது அழுவதா?

ராதா பணக்காரத் தந்தைக்குப் பிறந்த சஞ்சலமே உருவான பெண். ஒரு நிமிஷம் கூட அவளால் ஓய்ந்து உட்கார்ந்திருக்க முடியாது. பணத்தைப் பார்த்துத்தான் அவளுடைய தந்தை அவளை ஜ்வாலாப் பிரஸாதுக்கு மணம் செய்து வைத்தார். ராதாவுக்கு எழுத்து, படிப்பு என்றால் ஏக ஆர்வம். ஆங்கில நாவல்களைப் படித்துப் புரிந்து அநுபவிக்கக் கூடிய அளவுக்கு அவள் ஆங்கிலம் கற்றிருந்தாள். ஆங்கிலப் புத்தகங்கள், தாய் மொழிப் புத்தகங்கள், அன்றாடம் வரும் பத்திரிகைகள் ஆகியவற்றை அவள், நாள் தவறினாலும் தவறலாம், படிக்கத் தவறுவதில்லை. சபைகள் — சங்கங்கள் ஆகியவற்றுக்கும் அவள் போவதுண்டு. சிற்சில சமயம் பொதுநலக் காரியங்களிலும் பெரும் பங்கு எடுத்துக் கொள்வது உண்டு. யாராவது மிகவும் வற்புறுத்தினால் சிற்சில தீர்மானங்களை ஆதரித்து அவள் நான்கு வார்த்தைகள் பேசியதுகூட உண்டு.

அவள் வெகு சுறு சுறுப்பானவள். 'குறு குறு' என்றிருக்கும் அவளுடைய கண்களே அவளுடைய சுறு சுறுப்புக்கும் ஆர்வத்துக்கும் சாட்சி. ஒரு விஷயத்தில் அவள் ஆர்வம் காட்டத் தொடங்கி விட்டாளானால் அவளைப்போல் யாருமே ஆர்வம் காட்ட முடியாது, அவ்வளவு அவளுடைய ஆர்வம் கங்கு கரை கடந்து விடும். அவளுடைய ஆசைக்கும் ஒரு எல்லை கிடையாது, ஆர்வத்துக்கும் ஒரு எல்லை கிடையாது.

துணி மணிகள் பொறுக்கும் விஷயத்திலும் அவளுக்கு ஈடு அவள்தான். வர்ணச் சேலைகள் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் அவள் கண்கள் மிக மிகத் தேர்ச்சி பெற்றிருந்தன. நிற ஞானத்தில் பெண்கள் இயல்பாகவே கெட்



டிக் காரர்கள். அவர்களில் நல்ல சிறந்தவள் ராதா என்று சொன்னால் மிகையாகாது. எந்த வர்ணம் எப்பொழுது எப்படி உடுத்திக் கொண்டால் எடுப்பாயிருக்கும் என்பதை அவள் அறிந்திருந்தாற்போல் பெரிய பெரிய சித்திரக் கலைஞர்கள் அறிந்திருப்பது கூட அபூர்வமே.

அவள் ஆடை அணிந்து கொள்ளும் விஷயத்திலும் அடிக்கடி புதுமையைக் கையாள முயல்வாள். கிமிஷத்துக்கு ஒரு தரம் விதம் விதமாகப் பின்னல்கள் பின்னிக் கொள்ளுவாள். ரவிக்கையின் கைகளுக்குப் பற்பல விதமான வேலைப்பாடுகள் செய்தல், விசித்திர வர்ணங்களில் பூ வகைகள் பின்னுதல், ரகம் ரகமான கருக்கங்கள் வைத்தல் ஆகிய வற்றில் அவள் மனத்தைச் செலவிடுவது போல் வேறு யாருமே செலவிட மாட்டார்கள். ஜரிகைக் கரை விஷயத்தில் அவளுக்கு இருந்த ஞானம் சொல்லத் தரமன்று. அவள் உபயோகிக்கும் கரைகளைப் பார்த்துத்தான் சினிமாக்காரர்கள் உபயோகிக்கத் தொடங்கியிருக்க வேண்டும். ஆனல் அந்தச் சினிமாக்களின் அதிர்ஷ்டம், அந்தக் கரைகளுக்கு அந்தச் சினிமாக்களின் பெயர் வந்திருக்க வேண்டும். ஏனெனில் விதம் விதமான அவ்வளவு கரைகளுக்கும் அவள்தான் ஜன்ம தாதா.

தன்னைப் பார்க்கும் யாரும் பிரமித்து நிற்க வேண்டும் என்பது அவள் ஆசை. எனவே, ஆபரணங்கள் விஷயத்திலும் அவளுக்கு ஆர்வம் அதிகமாகத்தான் இருந்தது. ஆனல் பத்தாம் பசலி ஆபரணங்களை அவள் சுமந்ததில்லை; நடமாடும் நகைப் பெட்டியாகத் திகழ்ந்ததில்லை. காசுக்கான நகைகள்; விலையுயர்ந்த நகைகள்; காண்போரின் கண்களைக் கவரும் நகைகள்; எண்ணிக்கையில் ஏராளமாக இல்லாமல் கணக்காக இருக்கும் நகைகள்! அத்தகைய நகைகளைத்தான் அவள் அணிந்து கொள்வது வழக்கம். தன் அழகில், தானே பெருமை கொள்ளும் பெண்களிடம் இருக்கவேண்டிய எல்லா வித லட்சணங்களும் அவளிடம் பொருந்தி யிருந்தன. பார்ப்பவர்களைப் பரவசப்படுத்தி மதிமயங்கச் செய்யும் சாமர்த்தியம் தன் எழில் உடம்புக்கு இருப்பதாகவே அவள் எண்ணினள். அவள் எண்ணியது தவறில்லை என்பதை நிரூபிக்கும் தோரணையில் எத்தனையோ ஆண் பெண்கள் நடந்து கொண்டனர். எனவே. அவளுக்குத் தன் உடலழகின் மீதுள்ள நம்பிக்கை உறுதிப்பட்டது.

பேசுவதிலும் அவள் வெகு கெட்டிக்காரி. அவள் அதிகமாகச் சங்கோசப் படுவதில்லை. அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு ஆகிய பெண்மைக்குரிய இயல்புகள் அவளிடம் வெகு குறைவாகவே காணப்பட்டன. அவள் நினைத்திருந்தால் கொஞ்சம் நஞ்சமிருந்த அவற்றையும் களைந்து எறிந்திருக்க முடியும். ஆனல் அவள் அப்படி நினைக்காததற்கு முக்கிய காரணம் ஒன்று இருந்தது. இந்த இயல்புகள் அவளுடைய அழகுக்கு அழகு செய்வன வாகவும், காண்போரைக் கவர்ந்து ஈர்ப்பன வாகவும் இருந்தன. அதனல்தான் அவற்றைத் துடைத்தெறிய அவளுக்கு மனம் வரவில்லை. அவள் நல்ல வம்புக்காரி. சிரிக்கச் சிரிக்கப் பேசுவாள். தானும் சிரிப்பாள்; பிறரையும் சிரிக்க வைப்பாள்.

அவள் மோட்டாரில் அடிக்கடி உலாவி வரப் போவது உண்டு. அவள் பார்க்காத நாடகங்கள் இடையாது; சினிமாக்கள் இடையாது; சர்க்கஸ்கள் இடையாது. எந்தக் கலையிலும் அவளுக்கு ஈடுபாடு உண்டு. நல்ல பாட்டு என்றால் அவளுக்கு ரொம்பப் பிடிக்கும். அவள் ஒரு சங்கீதக் கச்சேரிகூட விட மாட்டாள். அவளுக்கு நன்ருகப் பாட வராது. இருந்தாலும் நல்ல பாட்டை நன்ருக ரசிக்க வரும். அது மட்டும் அல்ல; அவளுக்கு ஏதாவது ஒரு பாட்டுப் பிடித்து விட்டதென்ருல், 'போதும், போதும்' என்று அலுக்கும் வரை அதைப் பாடியோ கேட்டோ தீர்த்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பாள்.

ஜ்வாலாப் பிரஸாத் பெரிய லட்சாதிபதி; மாபெரும் மில்லுக்குச் சொந்தக்காரர்; தீர்ந்த வியாபாரி. வியாபாரத் தோது அவருக்குத் தெரிந்ததுபோல் பலருக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. எனவே, அவருக்கு அவகாசம் கிடைப்பதே வெகு துர்லபம். அதனல் ராதா நாள் முழுவதும் 'குருட்டு, குருட்டு' என்று வீட்டில் தனியாகவே உட்கார்ந்து அடைந்து கிடக்க வேண்டி யிருந்தது. ஜ்வாலாப் பிரஸாத் வீட்டில் இருக்கும் நேரங்களில் கூடப் பார்க்க வருபவர்கள். உத்தியோகம் வேண்டி வாசலில் வந்து தவங் கிடப்பவர்கள், அதிகாரிகள், வேலைக்காரர்கள் என்று யாராவது அவரைச் சூழ்ந்த வண்ணம் இருப்பார்கள். இரவு வேளைகளில் தம் அறைக்கு வரும்பொழுது அவர் அலுத்துச் சலித்துக் களைத்துப் போய்த் தான் வருவார். அதனல் அவருடன் ஆசையாக அன்பாக நாலு வார்த்தைகள் பேசக் கூட ராதாவுக்கு அவகாசம் கிட்டுவதில்லை.

ஜ்வாலாப் பிரஸாதின் அழகிலும் குணத்திலும் மயங்கிப் போவது என்பது ராதாவைப் போன்ற எழிலரசியைப் பொறுத்த வரை நடக்க இயலாத காரியம். கல்யாணம் செய்து கொள்வதற்காகத் தன்னைப் பார்க்க வந்த அவரைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாது என்றுகூட அவள் மறுத்து விட்டாள். ஆயினும், அவரையேதான் அவள் கல்யாணம் செய்து கொள்ளும்படி யாயிற்று. அவருக்கும் அவளுக்கும் முடி போட்டிருக்கும் பொழுது அவள் வேண்டாம் என்ருல், விதி விட்டு விடுமா? எனவே, அவரை மணந்து கொண்டு அவருடனேயே அவள் குடித்தனமும் நடத்தும்படி யாயிற்று.

மிருகமா யிருந்தால் கூடக் கூடவே யிருந்து பழகி விட்டால் ஒருவிதமான அநுதாபம் உண்டாவதுதானே இயற்கை? அதுவும்,

தனக்கு ஏற்பட்ட அந்தச் சம்பந்தம் அறுபட முடியாதது என்று தெரிந்த பிறகு, வாழ்நாள் முழுவதும் கட்டாயம் கூடியே வாழ வேண்டும் என்ற நிர்ப்பந்தமான நிலைமை ஏற்பட்ட பிறகு, மனிதன் மனத்தைத் தேற்றிச் சமாதானப் படுத்திக் கொள்ளத்தான் முயற்சிக்கிறான். வேலைக்காரர்கள், அயலார்கள் மட்டும் என்ன? கிளி, மைனா போன்ற பறவைகள், ஆடு, மாடு போன்ற மிருகங்கள் ஆகியவற்றுடன் கூடக் கூட இருந்து இருந்து பழகி விட்டால் மனிதனுக்கு அவற்றிடம் அன்பும் ஆசையும், மோகமும் மாயையும், அநுராகமும் அநுதாபமும் தாமாகவே உண்டாகி விடுகின்றன. அப்படி யிருக்கும் பொழுது வாழ்நாள் முழுவதும் இன்னொருடன்தான் வாழ வேண்டும் என்று விதி வகுத்துக் கைக் கட்டையும் கால் கட்டையும் போட்டு விட்டால், அவன் அதைக் கடைசிவரை நிர்வகித்துத் தானே ஆக வேண்டும்? அவனுடைய குற்றங்களை மறந்து குணங்களை மட்டும் கொள்ளத் தானே பயில வேண்டும்? தனக்குத் துணைவன் ஆகிவிட்டவன் காணச் சகிக்காத அவலட்சணமாகவே இருந்தாலும், அவனுடைய அந்த அவலட்சணத்தில் அழகை மட்டும் தேடிப் பிடித்து மகிழ வேண்டும் என்னும் இந்தப் பழக்கத்தை—தொன்று தொட்ட காலந் தொட்டு வழக்கில் இருந்து வரும் இந்தப் பழக்கத்தை ஒரு ஹிந்துப் பெண்மணி உள்ளத்தில் வளர்த்துக் கொண்டு விட்டாள் என்றால், இதில் வியப்புறுவதற்கோ திகைப்புறுவதற்கோ என்ன இருக்கிறது? ஹிந்துப் பெண்களின் பெருமையே இதில் தானே அடங்கி யிருக்கிறது?

இம் முறையில்தான் ராதா தன் கணவரை விரும்பினாள். பிள்ளைப் பிராயத்தைத் தாண்டி யௌவனப் பிராயத்தை அடைந்து கொண்டிருந்த காலத்தில், தனக்கு வரப்போகிற கணவன் எத்தகையவனாக இருக்க வேண்டும் என்பதைப் பற்றி யெல்லாம் கோட்டை கோட்டையாக அவள் கற்பனை கட்டியதுண்டு. ஆனால் அவள் கண்ட அந்தக் கற்பனைக் கணவனுக்கும் ஜ்வாலாப் பிரஸாதுக்கும் இடையே அஜகஜாந்தரமான வித்தியாசம் இருந்தது. தன் கணவனிடத்தில் எந்த மாதிரியான பெருந் தகைமையையும் உயர்ந்த பண்பாடுகளையும் மேலான நோக்கங்களையும் அவள் காண விரும்பிக் கொண்டிருந்தாளோ, அவற்றில் லவலேசத்தைக் கூட அவள் தன் கணவர் ஜ்வாலாப் பிரஸாதினிடத்தில் காணவில்லை. எத்தகைய ஆர்வத்தையும் அபிமானத்தையும் அன்பையும் ஆனந்தத்தையும் தன் கணவனிடத்தில் ஒருங்கே கண்டு ஒரு மனைவி தன் வாழ்க்கையையே அவன் காலடிகளில் அர்ப்பணிக்கத் தயாராவாளோ, அத்தகைய குணாதிசயங்கள் ஒன்றும் ஜ்வாலாப் பிரஸாதினிடத்தில் இல்லை. ஜ்வாலாப் பிரஸாத் இருதய பீடத்தில் வீற்று ஆட்சி செலுத்தும் அரசராக ஆகவில்லை; தோளோடு தோள் நிற்கும் தோழராக ஆகவில்லை; உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கள்வராகவோ காதலராகவோ ஆகவில்லை. கணவர்களுக்கு வேண்டிய அத்தகைய குணங்களில் ஏதாவது ஒன்றாவது அவரிடம் இருந்தால்தானே?



புது டில்லி கர்நாடக சங்கீத சபையின் உபதலைவரும் வட நாட்டில் பிரசித்தி பெற்ற சங்கீத வித்வானுமாகிய ஸ்ரீ கே. ஏ. பத்மநாபன் அவர்களுக்கு, ரிஷிகேசம் முனிவர் ஸ்வாமி சிவானந்த சரஸ்வதி அவர்கள் [illegible] என்னும் பட்டத்தை வழங்கி ஆசீர்வதித்தார்கள்.

அப்படி யிருக்கும் ராதாவுக்கு, 'நாம் ஜ்வாலாப் பிரஸாதின் மனைவி' என்ற கர்வம் இருக்கத்தான் செய்தது; அகம்பாவம் ஏற்படத்தான் செய்தது. எத்தனையோ தடவை அவள் கவலையில் உழலும் ஜ்வாலாப் பிரஸாதின் மனத்தைக் களிப்புறச் செய்ய முயன்றிருக்கிறாள். எத்தனையோ தடவை இன்று மில்லுக்குப் போகவேண்டாம், வீட்டிலேயே இருங்கள் என்று வற்புறுத்தி யிருக்கிறாள். எத்தனையோ தடவை, மில்லுக்கே சென்று மில்லில் உள்ள ஊழியர்களை ஆச்சரியத்தில் மூழ்கித் திளைக்க வைத்து, அவரை ஆபீஸ் அறையிலிருந்து வலுக் கட்டாயமாக உலாவுவதற்கும் அழைத்துச் சென்றிருக்கிறாள்.

சுதாகர் வந்தபொழுது ஜ்வாலாப் பிரஸாதின் மோட்டார் வாசலில் தயாராக நின்று கொண்டிருந்தது. அவர் ஏதோ அவசர ஜோலியாக வெளியே புறப்பட்டுக் கொண்டிருந்தார். சுதாகரைப் போன்ற கல்வி கேள்வியிற் சிறந்த பட்டதாரி தம்மிடத்தில் வேலையை நாடி வந்திருக்கிறான் என்பதைப் பரமானந்தரின் கடிதத்தைப் படித்துத் தெரிந்துகொண்ட ஜ்வாலாப் பிரஸாதுக்கு ஏற்பட்ட சந்தோஷத்தையும் கர்வத்தையும் சொல்லி முடியாது. அந்தக் கர்வத்தில் தம் உடலைத் தாமே ஒரு தடவை அகம்பாவமாகப் பார்த்துக் கொண்டார்.

அதே சமயம் உள்ளிருந்து, "இப்பொழுது நீங்கள் வெளியில் போய்த்தான் ஆக வேண்டுமோ? எத்தனை தலைபோகிற காரியமா யிருந்தால்தான் என்ன? வேலை நமக்கு

அடிமையா? நாம் வேலைக்கு அடிமையா? சொல்லுங்கள்!" என்று கேட்டுக் கொண்டே ராதா அங்கே வந்தாள்.

அவளுக்கு இன்னொருவருடன் ஜ்வாலாப் பிரஸாத் பேசிக் கொண்டிருக்கிறார் என்னும் விஷயம் தெரியாது. சுதாகரைப் பார்த்ததும் அவள் வெட்கி விட்டாள். அப்படி வெட்கப் படும்பொழுதும் அவள் ஒன்றை மட்டும் மறக்கவில்லை. தான் வெட்கப்படும் முறை அற்புதமாய் இருக்க வேண்டும், அதைப் பார்ப்பவர்கள் மயங்க வேண்டும் என்பதே அவள் அந்தரங்க ஆசை அல்லவா? அப்பொழுது, தான் வெட்கித் தலை குனிந்த விதம் தன் ஆசையை நிறைவேற்றி விடும் என்ற நம்பிக்கை அவளுக்குப் பரிபூரணமாக இருந்தது. அந்த மகிழ்ச்சியிலேயே அவள் அழகான ஒய்யார நடை நடந்து அருகில் இருந்த சோத்தியான மெத்தை போட்ட நாற்காலியில் போய் உட்கார்ந்தாள்.

"இவர் பரமானந்தரிட மிருந்து கடிதம் கொண்டு வந்திருக்கிறார். இவர் நன்றாகப் படித்தவர்; நல்ல அறிவாளி. நாகரிகம் தெரிந்தவர்!" என்றார் ஜ்வாலாப் பிரஸாத்.

"ஊம்!" என்று ஒரே சொல்லில் முடித்துக் கொண்டு ராதா தன் கடைக் கண்ணால் சுதாகரை ஒரு முறை பார்த்தாள். சுதாகர் வெகு நாசுக்காக அவளுக்கு வணக்கம் தெரிவித்தான். அவள் வெகு அலட்சிய மாக அவனுக்கு மறு வணக்கம் தெரிவித்தாள்.

"நான் இப்பொழுது அவசியம் போய்த் தான் ஆகவேண்டும். போகாமல் காரியம் நடக்காது. கவர்னரிடமிருந்து பிரத்தியேக மாக அவசர அழைப்பு வந்திருக்கிறது. போகாமல் வைத்தால் நன்றாயிராது. மரி யாதைக் குறைச்சலாகும். நான் வருகிறேன். நீயே இவரிடம் பேசிக் கொள்!" என்றார் ஜ்வாலாப் பிரஸாத். பிறகு சுதாகர் பக்கம் திரும்பி, "மிஸ்டர் சுதாகர்! காரியதரிசி எனக்குத் தேவையில்லை. என் மனைவிக்குத் தான் தேவை. அவளுக்குத் தங்களைப் பிடிக் கும் பட்சத்தில் கட்டாயம் உங்களை எடுத்துக் கொள்கிறேன். பரமானந்தர் சிபாரிசு செய் திருக்கிறார். அதனால் எங்களுக்கு எந்த விதமான கவலையும் இல்லை!" என்றார்.

அதைச் சொல்லி முடித்ததும் ஜ்வாலாப் பிரஸாத் புறப்படுவதற்காக எழுந்திருந்தார். அதைக் கண்ட ராதா மறுபடியும், "போகா மல் காரியம் நடக்காதா?" என்று கேட்டாள்.

"நன்றாகச் சொன்னாய்! கவர்னர் அழைத் திருக்கிறார். போகாமல் இருக்கலாமா?" என்று கேட்டார் ஜ்வாலாப் பிரஸாத்.

"கவர்னர் என்ன கொக்கா? கவர்னர் அழைத்தால் யாருமே 'முடியாது' என்று மறுக்கக் கூடாதோ?" என்று வெகு துடுக் காகக் கேட்டாள் ராதா. (தொடரும்)

# எவரஸ்ட் சிகரத்தில் எடுத்த வர்ண போட்டோக்கள்

லண்டன்மா நகரிலுள்ள "ராயல் பெஸ்டிவல் ஹால்" (*Royal Festival Hall*) எனப்படும் அரசகுடும்பத்து விழா மண்டபத்தில் சமீபத்தில் பல ருசிகரமான பிரசங்கங்கள் நடைபெற்றன. அச்சமயம் எவரஸ்ட் சிகரத்தை வெற்றி கொண்ட வரலாற்றை '**கோடாக்ரோம்**'மின் வர்ணச் ஸ்லைடுகளின் மூலம் விளக்கிக் கூறப்பட்டது. இந்தப் படங்கள் யாவும், எவரஸ்ட் சிகரத்தில் ஸர் எட்மண்டு ஹிலேரியினால் '**கோடாக்ரோம்**' பிலிமில் எடுக்கப்பட்டவை என்றால் இன்று கலர் போட்டோக்கள் எடுப்பது எவ்வளவு எளிதாகி விட்டது என்பது யாருக்கும் நன்கு விளங்கும்.

ஸர் எட்மண்டு ஹிலேரி உபயோகித்த காமிரா 'கோடாக் ஸ்டாண்டர்டு '**ரேடினு**' மாடல் ஆகும். இதை அவர் சென்ற வருஷம் ஏடனில் இருந்தபோது வாங்கினார். இது தவிர, மலை அடிவாரத்திலிருந்து எவரஸ்ட் சிகரம்வரை அவர்கள் செய்துள்ள தீரப் பிரயா ணத்தை அற்புத வர்ணப்படமாக எடுத்திருப்பது நல்ல கலர் தஸ்தாவேஜாகவே ஆகிவிட்டது!

பல பத்திரிகைகள் எவரஸ்ட் சிகரத்தில் எடுக்கப்பட்ட (கருப்பு-வெள்ளை நிறம்) படங்களைப் பிரசுரித்திருக்கின்றன. இவை யாவும், கலர் போட்டோக்களிலிருந்து பிரதி எடுக்கப் பட்டவையாகும். சின்னஞ் சிறு கலர்ப் படங்களிலிருந்து பெரிய பெரிய கருப்பு-வெள்ளை நிறப் படங்கள் எடுக்கலாம்.

அரச குடும்பத்து விழா மண்டபத்தில் எவரஸ்ட் உச்சியில் நிற்கும் ஸ்ரீ டென்சிங் நோர்க்கி ஷெர்ப்பாவின் 5 அடி உயரமுள்ள படம் இருக்கிறது. இது ஒரு அங்குல அகலமும் ஒன்றரை அங்குல நீளமுமுள்ள கலர் போட்டோவிலிருந்து விரிவு படுத்தி எடுக்கப்பட்டது. இவை தவிர பல வர்ணப் படங்கள் பல அளவுகளில் அந்த மண்டபத்தில் வைக்கப்பட் டுள்ளன. இவை யாவும் டென்ஸிங்கும், ஹிலேரியும் எவரஸ்ட் சிகரத்தை வெற்றிகொண்ட தைப் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன. அதைப்போலவே, கலர் போட்டோ எடுப்பதில் போட்டோக் கலையில் '**கோடாக்ரோம்**' கலர் பிலிமும் எவரஸ்ட் சிகரத்தை நிகர்த்த வெற்றி பெற்று விட்டது என்பதை உலகத்துக்கு அறிவித்துக் கொண்டிருக்கிறது.

# தூத்துக்குடியில் ரசாயனத் தொழிற்சாலை

பாரத தேசம் பல துறைகளில் முன்னேறி வரும் இந்நாளில் தமிழ் நாட்டின் தென் கோடியில், தூத்துக்குடியில் ஐம்பது லக்ஷ ரூபாய் முதலீட்டு ரசாயனப் பொருள்கள் உற்பத்தி செய்யும் மாபெரும் தொழிற்சாலைக்கு அஸ்திவாரம் போடப்பட்ட மங்களச் செய்தி கேட்டு மனம் பூரிக்காத தமிழன் இருக்க முடியாது.

சென்ற செப்டம்பர் மாதம் 16-ல் தொழில் துறையில் பெரிதும் முன்னேறியுள்ள மைசூரின் ராஜப் பிரமுகர் ஸ்ரீ ஜெயசாமராஜ உடையார் பகதூர் மேற்படி 'ஹெவி கெமிகல்ஸ்' என்ற ரசாயனத் தொழிற்சாலைக்கு அஸ்திவாரக் கல் இட்டார்.

இந்த விழாவுக்கு, சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா, ஸ்ரீ ராஜாஜி, ஸ்ரீ யு. கிருஷ்ண ராவ், சென்னை ஆர்ச்பிஷப் முதலியவர்களிடமிருந்தெல்லாம் வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன. ராஜாஜியின் வாழ்த்துரையில் "இன்றையச் சூழ் நிலையில் பெரியதோர் தொழில் ஸ்தாபனம் ஆரம்பிப்பதற்கு அளவற்ற நம்பிக்கையும், அபரிமிதமான தைரியமும் வேண்டும்......தங்கள் முயற்சி வெற்றியுறுவதாக!" என்று தம் மனமார்ந்த ஆசியைக் கூறியிருக்கிறார்.

* * *

தூத்துக்குடி தொழில் துறையிலும் வியாபாரத் துறையிலும் தமிழ் நாட்டில் சரித்திர காலத்திலிருந்து புகழ் பெற்ற ஊர் ஆகும். அப்படிப்பட்ட நகரத்துக் கருகில் இந்த ரசாயனத் தொழிற்சாலைக்கு அஸ்திவாரம் இடப்பட்டிருப்பது, ரொம்பவும் பொருத்தமாகும்.

இந்தத் தொழிற்சாலையில் காஸ்டிக் சோடா எனப்படும் எரிசாரம் முக்கியமாகத் தயாரிக்கப் போகும் ரசாயனப் பொருளாகும். நம் நாட்டில் இன்று ஓரளவு வளர்ந்துள்ள பெரிய தொழில்கள் நெசவுத் தொழிலும், சோப்புத் தொழிலும் ஆகும். இவ்விரண்டுக்கும் காஸ்டிக் சோடா அத்தியாவசியமான பொருள்.

இந்தக் காஸ்டிக் சோடா கடல் தரும் உப்பிலிருந்தும், கடல் தரும் 'இளிஞ்சல்

அஸ்திவார விழாவில் ஸ்ரீ டி. எஸ். ராஜம் பேசுகிறார். இடது கோடியில் உட்கார்ந்திருப்பவர்தான் ஸ்ரீ ரோச் விக்டோரியா. மேலே மைசூர் ராஜப் பிரமுகர் அஸ்திவாரம் இடுகிறார்.



## மதில் சுவர்களுக்கு அபாயம்!

ஸ்ரீரங்கம் ரங்கநாதர் கோவிலைச் சுற்றி ஏழு மதில் சுவர்கள் உள்ளன. மதில் சுவர்களுக்குள்ளேதான் வரிசை வரிசையாகத் தேரோடும் வீதிகள் அமைந்திருக்கின்றன.

ஸ்ரீரங்கத்துக்கே பிரத்தியேகமான தொரு அழகையும், அமைதி நிறைந்த தோற்றத்தையும் தருவன இம் மதில் சுவர்கள் தான். நகரைச் சுற்றி வளைந்துக் கம்பீரமாக நிற்கும் இம்மதில் சுவர்கள் நம் முன்னோர்களது "நகர அமைப்புத் திறமை"க்கே ஓர் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகின்றன.

மேனாட்டாரும் கண்டு வியக்கும் இம்மதில் சுவர்கள், சம்பந்தப் பட்ட அதிகாரிகளின் கவனக் குறைவினுல் பாழடைந்து வருகின்றன.

செடிகளும், கொடிகளும், சிறு மரங்களும் பாறை இடுக்குகள் வழியே வேர்விட்டு, முளைத்து நிற்கின்றன. இதன் விளைவாகப் பெரும் கற்கள் கூட வெளியே தள்ளப் பட்டுக் கீழே விழச் சமயம் பார்த்துக் கொண்டிருக்கின்றன.

சுமார் ஒரு மாதத்துக்கு முன்பு அடித்த பலத்த மழையில், ஒரு மதில் சுவரின் கற்கள் சில விழுந்து விட்டன.

மற்ற மதில்களிலும், சில பகுதிகளில் கருங் கற்கள் அபாயகரமான நிலையில் 'தளுக்காக' நின்று கொண்டிருக்கின்றன.

சம்பந்தப் பட்ட அதிகாரிகள் உடனே இது பற்றிக் கவனிப்பது அவசியம். மதில் சுவர்கள் மீது வேர் விட்டு முளைத்து நிற்கும் செடி, கொடி, மரங்களை வெட்டி விடுவதுடன், அப் போதைக் கப்போது இவை வளர விடாமல் தடுக்க முயற்சி எடுக்க வேண்டும். அவசியமான இடங்களில் சிறு ரிப்பேர் வேலைகளையும் மேற் கொள்ள வேண்டும்.

இவ்வாறு செய்தால், குறைந்தது இன்னும் 300 அல்லது 400 வருஷங்களுக்காவது இம்மதில் சுவர்கள் நீடித்து நிற்கும்.

இதுபற்றி ஸ்ரீரங்கம் நகரசபை கமிஷனருக்கும், நகரசபைத் தலைவருக்கும் கடிதம் எழுதியாகி விட்டது. ஒரு மாத மாகியும் எவ்வித நட வடிக்கையும் எடுப்பதாகத் தெரியவில்லை.

ஸ்ரீரங்கம்
22-10-53

டி. ஆர். வேங்கடரமணன்

---

சுண்ணும்பிலிருந்தும் செய்யப்படும் பொருளாகும். ஆகவே, இந்தத் தொழில் ஸ்தாபனம் கடற்கரை நகரமாகிய தூத்துக்குடியில் அமைந்திருப்பதே ரொம்பவும் பொருத்தமானதல்லவா?

காஸ்டிக் சோடா தயாரிக்கும்போது, இன்னும் சில உபரசாயனப் பொருள்களும் கிடைக்கின்றன. அவற்றில் மிக முக்கியமானது 'க்ளோரின்' என்ற வாயுப் பொருள். இதிலிருந்து வேறெங்கும் கிடைக்காத 72 சத வீதம் க்ளோரின் உள்ள ஹை-டெஸ்ட்—ஹைப்போ க்ளோரைட் செய்யப் படுமாம். இது காகிதம் செய்யும் தொழில், நூல் நூற்கும் தொழில், சலவைத் தொழில் முதலிய பல தொழில்களுக்கும் வீட்டு உபயோகத்துக்கும் பெரிதும் பயன்படும்.

தூத்துக்குடி கடல் மணலில் சில அற்புதமான தாதுப் பொருள்கள் இருக்கின்றன. இத்தகைய கடல் மணல் உலகில் இரண்டொரு இடங்களில்தான் கிடைக்கின்றதாம். இந்த மணலுக்கு இல்மினேட் மணல் என்று பெயர். இதில் இரும்பும், டிடானியம் என்ற உலோகமும் கலந்திருக்கிறது. இதிலிருந்து க்ளோரின் வாயுவின் உதவியினுல் பல ரசாயனப் பொருள்கள் செய்யலாம்! ஆனுல் இந்தத் தொழிற்சாலையில் இரண்டு பொருள்கள் தயார் செய்யப் போகிறுர்கள். ஒன்றின் பெயர் டைடானியம்-டை-ஆக்ஸைடு என்பது. இது முக்கியமாகப் 'பெயின்டு'த் தொழிலுக்கும், எஃகுத் தொழிலுக்கும் பயன்படும்.

நாம் பெயின்டுக் கடைக்குப் போனுல் "இந்தப் பெயின்டு என்ன, வெய்யில் பட்டால் வெளுத்து விடுமா? மழை அடித்தால் கரைந்து போகுமா?" என்று கேட்போம்.

இப்படியெல்லாம் நம்மைக் கேட்க விடாமல், கெட்டி வர்ணம் கொண்டிருக்கச் செய்வது இந்த டை டானியம் டை ஆக்ஸைடு.

மற்றொரு பொருள் பெர்ரிக் க்ளோரைடு என்பது. இது ஒரு மருந்து.

இப்படி நெசவுத் தொழில் செயற்கைப் பட்டுத் தொழில், சோப்புத் தொழில், காகிதத் தொழில், சாயத் தொழில், வர்ணத் தொழில் எனப் பல தொழில்களுக்குப் பல பொருள் வழங்கும் இந்த ரசாயனத் தொழிலை நமது பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு "தொழில்களுக் கெல்லாம் தாய் இந்த ரசாயனத் தொழில்" என்று கூறுகிறுர்.

இத்தகைய தாய்த் தொழிலை ஆரம்பிக்க, சென்னை சர்க்கார் முன்னுள் மந்திரி ஸ்ரீ ரோச் விக்டோரியா, டி. வி. சுந்தரமய்யங்கார் அண்டு ஸன்ஸ் லிமிடெட்டின் மானேஜிங் டைரக்டரான ஸ்ரீ டி. எஸ். ராஜம் முதலிய வர்த்தக-தொழில் துறைப் பிரமுகர்கள் முன் வந்திருக்கிறுர்கள். இந்தத் தொழிற்சாலையை 70 ஏக்கர் நிலப் பரப்புள்ள இடத்தில் 20 ஏக்கர் விஸ்திரணத்தில் அமைக்கப் போகிறுர்கள். இந்த ரசாயனத் தொழிற்சாலைக்குத் தேவையான யந்திரங்களும், அதை அமைக்க ஆகும் செலவுகளும் 35 லக்ஷ ரூபாய் என்று திட்ட மிட்டிருக்கிறுர்கள் என்றுல், பார்த்துக் கொள்ளுங்கள், எவ்வளவு பெரிய தொழிற்சாலையாக இருக்க வேண்டும் என்பதை!

இந்தக் கம்பெனியின் டைரக்டர்களும் அவர்களுடைய நண்பர்களும் பதினைந்து லக்ஷ ரூபாய் போட்டிருக்கிறுர்கள். சென்னை சர்க்கார் வேறு பத்து லக்ஷ ரூபாய் முதலீடு செய்ய வாக்களித்திருக்கிறது. பதினைந்து லக்ஷ ரூபாய் வரை, பணம் படைத்த பொது மக்கள் முதல் போட ஒதுக்கி வைத்திருக்கிறுர்கள்.

இந்தத் தொழிற்சாலை கூடிய விரைவில் பூர்த்தியாகி, வேலை செய்யத் தொடங்கும் நன்னுளை எதிர் பார்ப்போமாக!

இந்தியாவின் தலைசிறந்த

சைக்கிள் டயர்கள்



சூப்பர் இந்தியா

IT.6692

# வம்புக்கார வள்ளி

எம். ஜி.

சாலையோரம் அடர்ந்து, பரந்து, விரிந்து, ஓங்கி, உயர்ந்து நின்ற ஆலமரத்தின் குளிர்ந்த நிழலில் உட்கார்ந்திருந்தான் வேலன். அவன் வாய், வெகு சுயேச்சையாகவே "சாலையிலே ரெண்டு மரம், சர்க்காரு வைத்த மரம், ஓங்கி வளர்ந்த மரம்........." என்ற தெம்மாங்குப் பாட்டை முணு முணுத்துக் கொண்டிருந்தது.

அப்பொழுது, தூரத்திலே ஒரு பெண், பசு மாட்டைக் கட்டி இழுத்துக் கொண்டு, அவன் இருந்த பக்கம் வந்து கொண்டிருந்தாள். அவள் கிட்ட நெருங்கி வந்ததும், கடைந்தெடுத்த தங்கச் சிலையென அவளுடைய அழகிய ஒய்யாரத் தோற்றம் வேலன் கண்களைப் பறித்தது. அவன் ஒரு நிமிஷம் தன்னையே மறந்தான். ஆனால் அதற்குள் அவள் பிடித்துக் கொண்டு வந்திருந்த மாடு, அவனை அதிசயத்தில் கொண்டு போய் ஆழ்த்தி விட்டது. அது அவன் பசுமாடு. அவன் அவள் அழகை மறந்து விட்டான். அவன் மயக்கமும் தெளிந்தது. அதே சமயம் அவனுக்கு அவள் மீது ஆத்திரம்தான் பற்றிக் கொண்டு வந்தது.

"ஏ, குட்டி! உனக்கென்ன பைத்தியமா! ஏன் இப்படி மாட்டை இழுத்துக் கொண்டு போறே!"

"எனக்குப் பைத்தியமில்லை! அதோ மரத்தடியில் உட்கார்ந்திருக்கிறது, பாரு, குரங்குக் குட்டி, அதுக்குத்தான் பைத்தியம்! ஆளைப்பாரு ஆளை."

"வாயை அடக்கிப் பேசு, அம்மா, தாயே! என்னைப் பார்த்தா குரங்குக் குட்டி என்கிறாய்! வம்புக்காரி உன்னோடு பேச்சுக் கொடுத்ததே பிசகு. நீ என்பதினால் உன்னைச் சும்மா விடுகிறேன். தெரிந்து கொள்."

"இல்லாவிட்டால், என்ன செய்து விடுவாய்! நீ என்கிறதினால் நானும் போனால், போகிறதென்று விடுகிறேன், இதையும் தெரிந்து கொள்."

"இருக்கட்டும் போ, நீ சாமர்த்தியசாலிதான். மாட்டை ஏன் இழுத்துப் போகிறாய்! அதைச் சொல்லு முதலில்."

"நீ ஏன் ஐயா அதைக் கேட்கிறாய்! அது வாயிலே கொள்ளி வைக்க, அது சும்மா இருந்தால்தானே."

"நீ சொல்லாவிட்டால், உன்னை நான் சும்மா விடப் போவதில்லை. விஷயத்தை விவரமாய்ச் சொல்லம்மா, தாயே!"

"எங்கள் தாத்தா வீட்டு நிலத்தில் பயிரை மேய்ந்தால், சும்மா யாராகிலும் பார்த்துக் கொண்டு இருப்பார்களா! மாட்டுப் பட்டியில் கொண்டு போய் அடைக்கத்தான் கொண்டு போகிறேன். விஷயம் புரிந்ததா!"

"அட, சவ இரக்கமற்ற பெண்ணே! இதென்ன மாட்டை இப்படிப் போட்டு, அடித்திருக்கிறாய்! உடலெல்லாம் தடித்துப்போய் விட்டதே. நீ என்ன, பெண்ணா, பிசாசா!"

"பிசாசுதான்! நீ யாரையா இதெல்லாம் கேட்க! வழி விடுங்கள்; நாழியாகிறது. இதைக் கொண்டுபோய் அடைத்து விட்டு வந்தால்தான் மனசு நிம்மதிப்படும்."

"வேணும், அம்மா, தாயே! உனக்குப் புண்ணிய முண்டு. இந்த வாயில்லா ஜீவனுக்குக் கொஞ்சம் இரக்கம் காட்டம்மா!"

"நீ ஒரு பைத்தியம்தான்! சந்தேகமே யில்லை. ஆளைப்பாரு! இதுக்கு வாயில்லையாமாமே. இவ்வளவு பயிரைத் தின்று வயலைப் பாழடித்திருக்கு."

"நீ ஒரு புத்தி கெட்ட பெண்! நான் ஒன்று சொன்னால், நீ ஒன்று சொல்லுகிறாய். அதுக்குப் பேச வராதம்மா, பேச வராது. அதனால்தான் விட்டுவிடச் சொல்லுகிறேன்."

"ஏன் இதை வளர்க்கிறவர்களுக்குப் பேச வாயிருக்கிறது, இல்லையா! இது கொடுக்கும் பாலை நிரப்பிக் கொள்ள, சால்போல வயிறுமிருக்கிறதே. அவர்களுக்காவது புத்தியிருக்க வேணுமா! பிறத்தியார் வீட்டுப் பயிரைத் தின்னாமல் பார்த்துக் கொள்ள வேணுமா! பட்டியில் கொண்டு போய் விட்டால்தான் அவர்களுக்குப் புத்தி வரும். எனக்கு வழி விடுங்கள்!"

"புத்தி வந்துவிட்டது. தாயே, புத்தி வந்து விட்டது. இது என் மாடு. விட்டு விடு. உங்கள் கஷ்டத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன்."

"முடியாது, உன்மாடு என்றால். அவசியம் கொண்டுபோய் விட்டு விட்டுத்தான் மறு வேலை பார்க்க வேணும்."

"அந்தத் தண்டப் பணம், ஒன்னரை ரூபாய் உன்னிடமே கொடுத்து விடுகிறேன், மகாராஜி! மாட்டை விட்டுவிடு. இனிமேல் நானும் சரி, என் மாடும் சரி, உங்கள் வீட்டு நிலத்துப் பக்கம் தலை வைத்துப் படுக்க மாட்டோம்."

"போனால் போகிறது, பிழைத்துப் போ! இந்தக் கெடுவு விட்டு விடுகிறேன். இன்னொரு தடவை இந்த மாதிரி நடந்தது, உன் மாட்டின் தோலைக்கூட நீ கண்ணாலே பார்க்க மாட்டாய்."

"சரி, சரி, நீ போ, புத்திசாலிதான்!"

அந்தப் பெண் வள்ளி, பசுமாட்டின் கழுத்திலிருந்த கயிற்றை உருவிக் கொண்டு, அங்கிருந்து விடுவிடென்று, அவனைத் திரும்பிப் பாராமலே ஊரை நோக்கி நடையைக் கட்டினாள்.

வேலன் சிறிது நேரம், அவள் போவதைப் பார்த்துக் கொண்டே, மதுவுண்ட வண்டென மயங்கி நின்றான். அவள் மறுமுறை, அவனைத் திரும்பிப் பார்க்க மாட்டாளா என்றுகூட அவனுக்குத் தோன்றியது. அந்தத் துணிச்சல்காரி அவனைச் சட்டை செய்யாமலே போய் விட்டாள்.

வேலன் பசுவின் உடலைத் தடவிக் கொடுத்தான். பாவம், நல்ல அடி வாங்கி யிருந்தது அது. அவன் கொஞ்சம் கவனப் பிசகாக மரத்தடி நிழலில் உட்காரப் போக, அது பயிரை மேய்ந்து இவ்வளவு தூரம் வேதனைப்பட்டு விட்டது. அவன் தன்னையே நொந்து கொண்டான்.

மீண்டும் அவன் மரத்தடியில் வந்து உட்கார்ந்தான். மாடும் நிழலில் படுத்துக் கொண்டு, அசை போடத் தொடங்கி விட்டது.

"அந்த வம்புக்காரக் குட்டி யாரா யிருக்கும்!" வேலன் யோசித்துப் பார்த்தான். அந்த ஊரிலிருந்த அவள் வயசுப் பெண்களை யெல்லாம் பராபரியாக அவன் அறிந்து வைத்திருந்தான். அவர்களில் ஒருத்தியாக அவளில்லை.

"ஊர் நாட்டாண்மைக்காரக் கிழவன் பேத்தி, வெளியூரிலிருந்து வரப்போவதாகப் பேசிக் கொண்டார்களே. ஒருகால் அவளாக இருக்குமோ! ஆமாம், ஆமாம்; அவளேதான். அந்த வள்ளியா இவள்! அடேயப்பா, குட்டி, அதற்குள்ளாக எவ்வளவு பெரியவளாக வளர்ந்துவிட்டாள்! சின்னஞ் சிறு வயசில் அவிழ்ந்த தலையும், குழி விழுந்த கண்களும், சளி மூக்குமாய், பார்க்க விகாரமா யிருந்த

வள்ளியா இப்படி அழகு மேனியாக மாறிப்போய் விட்டாள்!" வேலனுக்கு வள்ளியைப் பற்றி நினைக்க, நினைக்கத் தன் கண்களையே நம்ப முடிய வில்லை. வள்ளி இத்தனை அழகியாக விளங்குவாள் என்று அவன் எதிர்பார்க்கவே யில்லை. இதுவே அவனுக்கு வியப்பாக யிருந்தது. அறியாப் பருவத்தில் அவனோடு கூடி, மணல் வீடு கட்டி விளையாடிய அந்த நாட்கள் அவன் முன்னே காட்சி யளித்துக் கொண்டு வந்தன. அந்த நாளிலேயே வள்ளி, அவனிடத்தில் வம்பு வளர்த்து, சண்டை போட்டு, வெற்றி யடைந்து விடுவாள். தோல்வி என்னவோ எப்பொழுதும் வேலனுக்குத்தான்.

என்று மில்லாத ஒருவித உணர்ச்சி வேலன் உடல் பூராவும் பரவி வேலை செய்தது. வள்ளி ஏதோ ஒன்றை அவனிடமிருந்து பறித்துக் கொண்டு போய்விட்டதை அவன் உணர்ந்தான்.

உள்ளத்தில் இனம் தெரியாத உற்சாகம் இருக்க, வேலன் மாட்டை ஓட்டிக் கொண்டு வீட்டை நோக்கி நடந்தான்.

[redacted]

கொண்டு, தன் மனத்தை அவனிடம் பறிகொடுத்திருந்தாள். அவனை ஆளழகனும் அன்றுதான் அவன் முதல் முதலாகப் பார்த்தாள். பயிரை மேய்ந்த பசுமாடு அவனுடையதுதான் என்பதை அவள் அறிய மாட்டாள். அறிந்தபோதுகூட பழைய குறும்புத்தனம் அவளை விடவில்லை. விளையாட்டுப் புத்தியில், வேடிக்கையாக ஏதேதோ பேசி விட்டாள். "விளையாட்டே வினையாக முடிந்து விட்டால், என்ன செய்வது!" என்ற நினைப்பு அவளுக்குள்ளே எழுந்தபோதுதான் அவள் பயந்தே போய் விட்டாள்.

பொழுது சாய்ந்தது; மைருட் இருளில் மூழ்கியது. வள்ளி மாரியம்மன் கோயிலுக்குப் போகும் சாக்காக வெளியில் கிளம்பினாள். கோயிலுக்குப் போனதாகவுமிருக்கும், கோயிலுக்கு அருகாமையில் குடியிருக்கும் வேலனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டதாகவு மிருக்கும்.

வள்ளி அம்மனைத் தரிசித்து, வணங்கினாள்.

[redacted]



பார்வையாளர் :—ஆள் பார்க்க நன்றாய் இருக்கிறாயே ! உன்னை எப்படிப் பிடித்து உள்ளே போட்டார்கள் ?

கைதி :—என் கால்கள் குட்டையா யிருப்பதனால் வேகமாக ஓட முடியவில்லை. பிடிச்சுக்கிட்டாங்க!

பார்வையாளர் :—ஏன் உன்னைப் பிடிக்க வந்தாங்க ?

கைதி :—என்னுடைய கை மற்றவர்கள் கையைவிட நீளமாக இருந்ததனாலே !

" அத்தான், என் மீது இந்தக் கோபம் வேணும். அத்தை எங்கே போயிருக்கிறார்கள் ! "

" அத்தைக்கு வேறு என்ன வேலை ! கோயிலுக்குப் போகப் போகிறதாகச் சொல்லிக் கொண்டு இருந்தார்கள். எங்காவது போய் வம்படித்துக் கொண்டு நிற்பார்கள். இதை யெல்லாம் தெரிந்து வைத்துக் கொள்வது என்னுடைய வேலையில்லை... நீ மறுபடியும் வம்பு வளர்க்க வந்து விட்டாயா !"

" நான் செய்ததெல்லாம், தப்பிதம், தப்பிதம். காலடியிலே போட்டுக் கொள்கிறேன். என்னை மன்னித்து விடுங்கள். அத்தான் தெரியாமல் உங்களைப் பேசி விட்டேன் ; திட்டி விட்டேன் ; எனக்குப் புத்தி வந்து விட்டது."

" வள்ளி ! ஏன் நிற்கிறாய் ! இப்படி வந்து உட்காரு. உன்னை அப்போதே மன்னித்து விட்டேன். ஆமாம், நீ எப்போது ஊரிலிருந்து வந்தாய் ! அதற்குள்ளே ரதிமாதிரி ஆகி விட்டாயே ! உனக்கு மன்மதனை நாட்டாண்மைக் காரத் தாத்தா எங்கு பார்த்திருக்கிறாரோ !"

வள்ளி களுக்கென்று வாய்விட்டுச் சிரித்தாள். " அந்த மன்மதன் வேறு யாருமில்லை. நீங்கள் தான் !" என்று சொல்லலாமா என்று பார்த்தாள். ஆனாலும் அப்படிச் சொல்ல அவளுக்குத் தைரியம் ஏற்படவில்லை. நாணம் அவள் தொண்டையை வந்து அடைத்துக் கொண்டது. அவனைத் தள்ளி, கொஞ்ச தூரத்தில் போய் அவள் உட்கார்ந்து கொண்டாள். அவனே மீண்டும் பேச்சைத் தொடர ஆரம்பித்தான்.

" நேற்று இராத்திரிதான் வந்தேன், அத்தான் ! அதிருக்கட்டும், உங்களுக்குக் கல்யாணம் பண்ண அத்தை யோசனை செய்துகொண்டு இருக்கிறார்கள் என்று கேள்விப் பட்டேன். எங்கே பெண் பார்த்திருக்கிறது ! எப்போது கல்யாணம் !" என்று வள்ளி கேட்டு வைத்தாள். கூடவே அவள் சிரித்தாள். வேலனும் சிரித்தான்.

" அடுத்த மாசம். ஆறும் தேதி ! கிளி மாதிரி பெண் பார்த்து வைத்திருக்கிறேன். சமீபத்தில் தானிருக்கிறாள் அந்த என் ராஜாத்தி."

" அப்படியா !...அத்தானுக்கு நல்ல காலம் பிறந்திருக்கிறது, என்று சொல்லுங்கள்...சரி நாழியாகிறது. அத்தையைக் காணோம். நான் வருகிறேன்" என்று வள்ளி சிட்டுக் குருவியைப் போல் அங்கிருந்து கிளம்பி விட்டாள்.

அவளுக்கு அதற்குமேல் அங்கிருக்கப் பிடிக்க வில்லை. வரும்போது அவளுக்கிருந்த நம்பிக்கையும், உற்சாகமும் இப்பொழுதில்லை. தன்னைத் தான் வேலன் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகச் சொல்லுவான் என்பதை எதிர் பார்த்துத்தான் அவள் வந்திருந்தாள். அதை விட்டு விட்டு, அவன் வேறு பெண்ணைப் பற்றிப் பேசியது, அவளுக்குப் பொறாமையாக விருந்தது. ஏமாற்றத்தோடு அவள் திரும்பினாள்.

வள்ளி போனதும், வேலன் தனக்குள்ளே சிரித்துக் கொண்டான். " நல்ல வாயாடி இந்த வள்ளி ! போயும் போயும் இவளைப் பார்த்தா கல்யாணம் செய்து கொள்வது ! ஆயுசு பூராவும் இவளோடு கஷ்டப்பட வேண்டியது தான்" என்று அவன் வாய் முணுமுணுத்தது.

*    *    *

மறு நாளைக்கு மறுநாள் ; மத்தியான உச்சி வேளை. வள்ளி திண்ணையில் ஏதோ யோசனையில் ஆழ்ந்த வண்ணம் உட்கார்ந் திருந்தாள்.

என்ன ஆச்சரியம் ! எவனைப் பற்றி அவள் மனம் நினைத்துக் குழம்பிக் கொண்டிருந்ததோ, அவன் அல்லவோ அவள் வீட்டை நோக்கி வந்து கொண் டிருந்தான். ஆமாம், வேலன் தான் அங்கு வந்தான். கூட ஒரு ஆட்டை வேறு கட்டி இழுத்துக் கொண்டு வந்திருந்தான். வள்ளி அன்று காலையில் வயற்காட்டில், மேயக் கொண்டு போய் விட்டு வந்த ஆடுகளில் ஒன்றுதான் அது.

வள்ளியின் வியப்பும், திகைப்பும் அடங்கவில்லை. " என்ன நடந்திருக்கும் ! வேலன் ஏன் இவ்வளவு கோபமாக வந்திருக்கிறார் !" என்ற கேள்விக் குறி அவள் அழகிய முகத்தில் பிரதி பலித்தது.

அதற்குள் வேலனே தெருவில் நின்று கொண்டு குரல் கொடுத்தான்.

" நாட்டாண்மைக்காரத் தாத்தா இருக்காரா ! இது என்ன அநியாயம் ! வேலியே பயிரை மேய்வது போல், நாட்டாண்மைக்காரர் வீட்டு ஆடு இப்படி என் பயிரை மேய்ந்து பாழாக்குமா ! அம்மா, தாயே, வள்ளி ! உனக்குப் புண்ணிய முண்டு. அவரைக் கொஞ்சம் கூப்பிடம்மா" என்று வேலன் கத்தினான். அவன் வார்த்தைகளில் ஆத்திரமும் படபடப்பும் கலந்திருந்தன.

" ஏன் ஐயா ! இப்படிப் பொய் சொல்கிறாய் ! ஆடு பயிரை மேய்ந்திருக்காது. அதை இப்படி விட்டு விட்டு, வந்த வழியே பார்த்துப் போய் விடு. உமக்குப் புண்ணியமுண்டு. இந்த நாட்டாண்மைக்காரர் வீடு என்றால் ஊரிலே எல்லாருக்கும் இளப்பமாயிருக்கிறது." வள்ளியின் உள்ளத்தில் குமுறிக் கிடந்த ஏமாற்றம் வேதனையாக மாறி, கோபமாகப் பீறிட்டு வெளியில் வந்தது.

"ஆமாம், ஆமாம். நீதான் அந்த அரிச்சந்திரன் மகள். என் மாடு மேய்ந்து விட்டது என்று நீ சொன்னது நிஜம். நான் சொல்கிறது தானே பொய் ! அப்படித்தானே !"

" ஐயா, ஏன் இந்த வம்பு எல்லாம் ! ஆடு மேய்ந்தது மெய் என்றால், பேசாமல் பட்டியில்கொண்டு போய் விட்டு விட்டுப் போகிறதுதானே. வீண் பேச்சும் ஏச்சும் எதற்கு !"

" அப்படி தயை, தாட்சண்யம் பார்க்காதவர்கள் வீடு உங்கள் வீடுதான். புத்தி கெட்ட பெண். உன்னோடு பேசி என்ன பிரயோசனம் !... தாத்தா எங்கே ! ... தாத்தா ! ... தாத்தா !......"

நாட்டாண்மைக்காரக் கிழவன் இந்தச் சந்தடியைக் கேட்டு எழுந்து வெளியே வந்து பார்த்தான். அவனுக்கு விஷயம் விளங்கிற்று.

"ஏண்டாடபா, வேலா! உனக்கு இந்தக் கோபம் வேணாம்! அந்த வம்புக்கார வள்ளியோடு உனக்கென்ன பேச்சு!"

"இந்த நியாயத்தை நீங்கள்தான் கேளுங்கள், தாத்தா! என் மாடு உங்கள் பயிரை மேய்ந்தால் அதைப் போட்டு அடிக்கலாம்; பட்டியில் கொண்டு விடலாம். உங்கள் ஆடு என் பயிரை மேய்ந்தால் நான் பார்த்துக் கொண்டு இருக்க வேணும். இதைக் கேட்டுப் போகத்தான் வந்தேன். வள்ளிக்கு நான் சொல்கிறது பொய்யாம்! அவள் சொல்கிறதுதான் மெய்யாம்! நீங்களே சொல்லுங்கள், தாத்தா!"

"வேலா! இப்படி வந்து உட்காரு. பேசுவோம்......உனக்கு கஷ்டம் என்றால் எங்களுக்கும் கஷ்டம். எங்களுக்கு கஷ்டம் என்றால் உனக்கும் தான் கஷ்டம். நமக்குள்ளே இலாப நஷ்டக் கணக்குப் பார்த்தால் சரிப்பட்டு வராது."

"அதெப்படி தாத்தா! நீங்கள் சொல்கிறது வேடிக்கையாகயிருக்கிறது."

"அடே, பேசாமல் கேள், சொல்கிறேன். உன் அம்மாவிடம் எல்லாம் பேசி முடிவு செய்துவிட்டேன். அவளும் 'சரி' என்று சொல்லிவிட்டாள். இந்த வள்ளி உனக்குப் பெண்டாட்டி என்று தீர்மானமாகி விட்டது."

"ஐயோ, இந்த வம்புக்காரப் பெண் எனக்கு வேணாம், தாத்தா! நீங்களாகப் பார்த்து எனக்கு வேறு பெண்ணைக் கட்டி வையுங்கள், சம்மதம்!"

"போடா, போ! சண்டை, சச்சரவு என்று இருந்தால்தான். புருசன், பெண்சாதிக்கு அழகு."

"வேறு பெண்ணோடு சண்டை போட்டாலும் போடலாம். இந்த வள்ளியோடு என்றால் முடியாது, தாத்தா!"

"வேலா, உனக்குத் தெரியாது, என் மனசு. நான் ஆதியிலிருந்தே வள்ளி உனக்குத்தான் என்று தீர்மானித்து விட்டேன். என் நிலபுலன்கள் எல்லாம் வள்ளியோடு உனக்குத்தான். வள்ளியின் மனசும் உனக்குத் தெரியாது. அவள் உன்மீது எவ்வளவு பிரியம் வைத்திருக்கிறாள் தெரியுமா!"

"என்னமோ, தாத்தா! உங்கள் இஷ்டம், அம்மா இஷ்டம். அதற்கு மேல் நான் சொல்ல என்ன இருக்கிறது!"

"சரி. வந்ததுதான் வந்தாய், இன்றைக்கு நான் நன்றாயிருக்கிறது, சாப்பிட்டு விட்டுப் போ...... ஏ, வள்ளி! இங்கே வா!......அத்தானுக்குச் சாதம் போடு. உன்னுடைய துடுக்குத்தனத்தையும் விட்டு விடு, போ!"

காட்டாண்மைக்காரக் கிழவன் தெருவில் இறங்கி எங்கோ வெளியில் போனான்.

வள்ளி வேலனுக்குச் சாதம் பரிமாறினாள். வேலன் திருப்தியோடு சாப்பிட்டு எழுந்தான்.



வந்த மாமி:—குழந்தையின் முகம் அவன் அப்பா மாதிரியே இருக்கிறதே!

தாயார்:—குழந்தைக்கு உடம்பு சரியாயில்லை. இல்லாவிட்டால் எப்பொழுதும் சிரித்துக் கொண்டு ஜோராக இருப்பான்!

அப்பொழுதும் வள்ளி களுக்கென்று சிரித்தாள். வேலன் அவளைத் திரும்பிப் பார்த்தான்.

"தாத்தா, சொன்னதை யெல்லாம் கேட்டுக் கொண்டுதானிருக்கிறேன். நீங்கள் இனி மாதிரி பார்த்து வைத்திருந்த பெண்ணை ஏமாற்றி விட்டீங்களே! ஐயோ, பாவம், அவள் உங்களை நம்பி யிருந்ததுதானே மிச்சம். அப்படித்தானே! சொல்லுங்க அத்தான், உண்மையைச் சொல்லுங்க" என்று வள்ளி வேலனைக் கேலி செய்தாள்.

"அட, வம்புக்கார வள்ளி, அந்தப் பெண் நீ தான். இப்போது தெரிந்து கொள். அதோடு உன் வாயையும் ஊசி நூல் போட்டுத் தைத்துக் கொள். கூடக் கூடப் பேசினால், எனக்குக் கெட்ட கோபம் வரும்."

"அதை அப்புறம் பார்த்துக் கொள்வோம். திருப்தியாகப் போய் விட்டு, வாங்க அத்தான்."

களி துள்ளும் உள்ளத்தோடு, வேலன் அங்கிருந்து கிளம்பினான்.

* * *

ஒரு மாதத்துக்குப் பிறகு, காட்டாண்மைக்காரன் வீட்டில் கல்யாண ஏற்பாடு, தடபுடல் பட்டது. நல்ல நாளில், நல்ல வேளையில், கொட்டு மேளம் முழங்க, வேலன் வள்ளியின் கழுத்தில் மஞ்சள் கயிற்றைக் கட்டி முடிச்சுப் போட்டான். அவளைப் பார்த்துக் குறும்போடு புன்னகை செய்தான். "உங்களுக்கு நான் என்ன மட்டமோ!" என்பது போல், வம்புக்கார வள்ளியும் வேலனைப் பார்த்து முறுவலித்தாள். கிழவன் தன் பொக்கைப் பல்லைக் காட்டிச் சிரித்தான்.

## லக்ஷார்ச்சனை

சென்னை - பெரம்பூர் பழனியாண்டவர் தேவஸ்தானத்தில் 7-11-53 அன்று ஆரம்பித்து 12-11-53 மகா கந்த சஷ்டி தினம் வரையில் லக்ஷார்ச்சனை தொடர்ந்து நடைபெறும். சஷ்டி யன்று நவகலச ஸ்நாபன ஏகாதச ருத்ர மகாபிஷேகமும் லக்ஷார்ச்சனைப் பூர்த்தியும், மறுநாள் முருகப் பெருமானுக்கும் தெய்வானை அம்மைக்கும் திருக்கல்யாண உற்சவமும் நடைபெறும். ஆஸ்திக அன்பர்கள் இந்தப் புனித நிகழ்ச்சிகளுக்கு விஜயம் செய்து ஆண்டவனின் அருட் செல்வத்துக்குப் பாத்திரர்களாகும் அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

# யோகாசன சிகிச்சை

வி. என். குமாரஸ்வாமி

## 6. மருந்துதான் பிரதானமா?

யோகாசன சிகிச்சையும் மற்ற சிகிச்சைகளும் நோய், வியாதி அல்லது சிறிது உடலில் அசௌகரியம் என்றதும் அதற்கு அடுத்தபடி மருந்தையே நாடுகிறோம். அது நன்றாக ஊறி விட்ட பழக்கமுமாகி விட்டது. அதற்குத் தகுந்தாற்போல எல்லா வைத்திய முறைகளும் வியாதி நீங்க முக்கியமாய் மருந்தைத்தான் பிரதானமாகக் கொண்டுள்ளன. அதன்பின்தான் ஆகாரம் மற்றவை யெல்லாம்.

ஆனால் ஒரு சில வியாதிகளுக்குத் தவிர மற்றவைகளுக் கெல்லாம் மருந்தே அவசியமில்லை. நோயின் தன்மையை உணர்ந்துதான் அவசியமிருந்தால் மட்டும் மருந்தை உபயோகிக்கவேண்டும். நூற்றுக்கு முக்கால் வாசி நோய்கள் மருந்தில்லாமலேயே குணப்படுத்த முடியும். மற்றும் கால் பங்கிலும் பாதி சிறிது மருந்தை உபயோகிக்க வேண்டியதாய் இருக்கும். மீதி அரைக்கால் பங்கிற்குத்தான் பூராவும் மருந்து தேவைப்படும். இதில் ஏதாவது ஒரு கேசுக்கு அபூர்வமாய் ஆப்பரேஷனும் செய்ய வேண்டியதாய் இருக்கும்.

இப்படியிருக்க, பூராவுக்கும் மருந்துகளையே உபயோகிக்கிறார்களே, இது சரியான மார்க்கமா! இத்தனை வருடம் உடற் கூறுகளைப் படித்து நோயின் தன்மைகளையும், மருந்துகளின் குணங்களையும் அறிந்த பட்டம் பெற்ற வைத்தியர்களுக்கு இதுகூடவா தெரியாமல் போய்விடும்! என்று சில சமயம் சந்தேகம் எழும்புகிறது. அறுத்து ஆப்பரேஷன் செய்யும் சர்ஜன்களைப் பற்றி என்ன சொல்ல! அவசியமானால் தவிர ஆப்பரேஷன் செய்து உடலைச் சிதைப்பானேன்! எல்லாருமே கசாப்புக் கடை மார்க்கமாகவல்லவா போய்விட்டது! ஆனால் நம் நாட்டிலுள்ள வைத்தியர்கள்தான் அம்மாதிரி எல்லாவற்றிற்கும் மருந்துகளையும் ஆப்பரேஷன்களையும் உபயோகிக்கிறார்களே தவிர, மேல் நாடுகளில் இருக்கும் பெரிய பெரிய வைத்திய மேதாவிகள் மருந்துகளைக் கடைசிப் பக்ஷமாகத்தான் உபயோகிக்க வேண்டுமென்பதை ஒப்புக் கொள்ளுகிறார்கள். அவர்கள் நாட்டிலும் மானச சிகிச்சை, பிராண சிகிச்சை முதலியவை இப்பொழுது பரவி வருகின்றன. யோகாசன சிகிச்சையும் மிகத் தீவிரமாய்க் கையாளப்படுகின்றது. மகாத்மா காந்தியடிகளும் "நோயினால் மடிபவர்களைவிட மருந்துகளினால் மடிபவர்கள்தான் அதிகம்" என்றார்கள்.



"அடுத்த ஞாயிற்றுக் கிழமையும் கடற்கரைக்கு, இதே இடத்துக்கு, கட்டாயம் வருகிறீர்களா?"

"ஏன்? வருவேன். என்ன விசேஷம்?"

"விசேஷம் ஒன்றுமில்லை. வரும்போது அடுத்த வாரப் பத்திரிகையைத் தயவு செய்து எடுத்துக் கொண்டு வாருங்கள். அதில் வரும் தொடர் கதையைப் படிக்க வேண்டும்!"

நோய் கொள்வது என்பது என்ன! உடல் சாதாரண நிலைமையில் இல்லாமல் ஏதோ சிறிது மாறுதல் அடைந்து இருக்கிறது என்று அர்த்தம். அது பல காரணங்களால் மாறுதல் அடைந்திருக்கலாம். அந்தக் காரணங்களை அறிந்து பரிகாரம் செய்வதுதான் உத்தமமான வழி.

சாதாரணமாய் வயிற்றுவலி, தலைவலி முதலியவைகள் வந்தது என்றால், நமது உணவில் ஏதோ தவறு நடந்திருக்க வேண்டும். சில வேண்டாதவைகளைச் சாப்பிட்டிருக்கலாம்; அதிகமாகச் சாப்பிட்டிருக்கலாம். அதிக தடவைகள் சாப்பிட்டிருக்கலாம். அதற்கு ஒருவேளை கஞ்சி அருந்தியோ, வெறும் மோர் மட்டும் சாப்பிட்டு வேறு ஒன்றும் சாப்பிடாமலோ இருந்து விடலாம். அல்லது ஒன்றுமே சாப்பிடாமல் பட்டினி போடலாம். அப்படியும் போகவில்லை என்றால் சிறிது கை மருந்து கஷாயம் வைத்துச் சாப்பிடலாம். தலைவலிக்கும் பல காரணங்கள் உண்டு. வெய்யிலில் போய்த் தலைவலித்தால் எலுமிச்சை பானகம், பனங் கற்கண்டு பானகம், நீர்மோர், இளநீர் சாப்பிட்டுச் சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டால் போய்விடும். தூக்கக் குறைவால் வந்தால் ஒரு மணி நேரம் நன்கு தூங்கி எழுந்தால் போய் விடும். இம்மாதிரி காரணங்கள் அறிந்து அதற்குப் பரிகாரம் செய்து கொள்ளும் சுய ஞானம் வேண்டும். சுய தேக ஞானம் வேண்டும். வெறும் அரசியல் சுதந்திரம் மட்டும் பெற்று விட்டால் போதாது. எல்லோரும் சுய புத்தியை உபயோகித்து வாழும் வகையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

ஆனால் இத்தனை நாள் நமக்கு அந்நியர் புகட்டின கல்வி அத்தகையதல்ல. ஏதாவது சிறிது உடலில் மாறுதல் ஏற்பட்டாலும் 'உடனே டாக்டரை நாடுங்கள். அப்படியில்லையென்றால் அது பெரிய அபாயமான வியாதியில் கொண்டுபோய் வைத்துவிடும்' என்று கண்ணு, மூக்கு வைத்துப் பிரசாரம் செய்து மக்களைப் பெரும் பீதிக்கு ஆளாக்கி விட்டனர். அதற்குத் தகுந்தாற்போல் சிறிது படித்தவர்கள்கூட ஒரு சிறு அசௌகரிய மானாலும் உடனே டாக்டரை நாடும் பழக்கமாய் விட்டது. வீட்டுக் கை மருந்துகள் எல்லாம் பாட்டிமார்களோடு சரி. இப்பொழுது அவர்கள் சொன்னால்கூடக் கேட்பவர்களில்லை. இம்மாதிரி ஆனதில் மக்கள் ஒரு சிறிய அசௌகரியம் வந்தாலும் தவிக்கிறார்கள். சுய ஞானம், சுய தேக ஞானமில்லாமையால் அடிமைப் புத்தியை வளர்த்த கல்வியினால் செய்வதறியாது துவேஷ

மென்றாலும், பசியெடுக்க வில்லை யென்றாலும் வைத்தியர்களை நாடும் நிலைமை ஏற்பட்டு விட்டது.

ஆனால் எல்லாவற்றிற்கும் அப்படி யிருந்துவிட முடியாது. காலரா, பிளேக் இம்மாதிரி தொத்து நோய்களாய் இருந்தால் உடனே வைத்திய உதவி நாடவேண்டியது அவசியம். அம்மை வந்தால் தனித்துச் சுத்தமாய் வைத்து மற்றவர்களுக்குப் பரவாமல் மருந்தை உபயோகிக்காமலேயே, குளிர்ந்த ஆகாரமாய்க் கொடுத்து வந்தால் போதும். இதற்கு வைத்திய உதவி அவசியமே இல்லை. எல்லாவற்றிற்கும் சுயஞானம் தேவை.

மற்றும் க்ஷயம், ஆஸ்துமா, டயாபெடீஸ், குஷ்டம். அபெண்டிசிடிஸ், அல்சர், டான்ஸில், அடினாயிட்ஸ் நீராத் தலைவலி, மூலம், நீல் வாதம், பாரிசவாயு முதலிய மற்றும் பல கொடிய வியாதிகளெல்லாம் உடல் அவயவங்கள் கெடுவதாலும், சில அவயவங்கள் வேலைசெய்ய முடியாமல் போய் விடுவதாலும் நேரிடுகின்றன. இவைகளில் கிருமி தொற்றுதலினால் வரும் வியாதிகள்தான் அநேகம்.

ஆனால் வைத்திய சாஸ்திரம் என்ன சொல்லுகிறது! அக்கிருமிகளைக் கொல்லக் கூடிய மருந்துகளை உபயோகித்து அதைக் கொல்ல மார்க்கம் தேடுகிறது. சிறிதாவது விஷக் கலப்பில்லாவிட்டால் அது அந்தக் கிருமிகளைக் கொல்லாது. எனவே உடலுக்கு அந்த விஷத்தினால் கேடு வராத மிகச் சிறிய அளவை எடுத்து மருந்துகள் தயாரித்து உபயோகிக்கிறார்கள். அப்படி மிகச் சிறிய அளவு உபயோகிப்பதால் பல தடவை, பல நாள் சில கேஸ்களில் பல மாதங்கள்கூட உபயோகிக்க வேண்டியதாய் இருக்கிறது. அத்துடன்கூட மருந்தினால் அவயவங்கள் பலவீனம் கொள்ளுமென்று பலவித சத்து மருந்துகளையும் உபயோகித்து வருகிறார்கள்.

இந்த முறை ஒருவிதத்தில் போற்றத் தக்கது தான். ஆனால் சிறிது மூளையைத் தெளிவுபடுத்திக் கொண்டு ஆராய்ந்தால் இம்மாதிரி சிகிச்சை எந்த சமயத்தில் எம்மட்டும் உபயோகிக்க வேண்டும் என்பதை அவர்களே நிர்மாணிப்பார்கள்.

எல்லோருக்கும் இயற்கை ஒரு சக்தி கொடுத்திருக்கின்றது. எல்லா நோய்களும் எல்லோருக்கும் வந்து விடுவதில்லை. நாம் சமூகத்துடன் சேர்ந்து பழகும்போது நாம் எல்லாவித நோய்களுடன், நோய்க் கிருமிகளுடன் போர் நடத்திக் கொண்டு தான் வாழ்கிறோம். நம்மை அறியாமல், காற்று மூலமாகவும், உணவு மூலமாகவும், நீர்மூலமாகவும் மற்றவர்களோடு பழகுவதாலும் பல நோய்க் கிருமிகள் நம் உள்ளே சதா சென்று கொண்டு தான் இருக்கின்றன. அப்படி உட்சென்ற கிருமிகள் நுரை ஈரல்களிலும், குடல் மூலமாகவும் சருமத்தின் மூலமாகவும் ரத்தத்துடன் கலக்கின்றன. நமது ரத்த அணுக்கள் நல்ல பலம் பொருந்தியதாய் இருப்பதால் வரும்கிருமிகளை அது கபளீகரித்து வியாதிகள் வராமல் தடுக்கிறது. நல்ல தேகப் பயிற்சி செய்வதால் பிராண வாயுவால் நுரை ஈரல் நன்றாகச் சுத்தமாக்கப்படுகிறது.

ஆனால் சிலருக்கு நோய்கள் வருகின்றன. சிலருக்கு வருவதில்லை. காரணம் அந்தச் சிலருக்கு இரத்த அணுக்கள் போதிய பலமில்லாமையால் உட்சென்ற கிருமிகள் விருத்தியாகி அதன் குணங்களுக்குத் தக பலவித வியாதிகள் வருகின்றன. எனவே உடலிலுள்ள ரத்த அணுக்கள் நோய்க் கிருமிகளை வெல்ல முடியாதபடிக்குப் பலவீனமாய் இருந்ததே காரணம் என்று நமக்குத் தெரிகிறது.




"ஏழு கோடியே எழுபது லட்சத்து, அறுபத்து மூவாயிரத்து எழுநூற்றைம்பது 'டன்' தங்கம் இந்தியாவிலிருந்து வெளி நாட்டுக்கு ஏற்றுமதியாகி யிருக்கிறதாம். இன்னும் எவ்வளவு போகப் போகிறதோ, யார் கண்டது!"

"இனிமேல் ஏதுங்க தங்கம்? தங்கம், ஸ்வர்ணம் என்று பேர் வச்சுக்கிட்டிருக்காங்களே, அவங்களைத்தான் கப்பலிலே அனுப்பி வைக்கணும்!"

ஆனால் நாம் செய்வதென்ன! கிருமிகளைக் கொல்ல விஷ மருந்துகளை உபயோகிக்கின்றோம்.

ஆனால் அம்மருந்து அந்தக் குறிப்பிட்ட விஷக் கிருமிகளை மட்டும் கொல்லுவதில்லை. அந்த மருந்துக்கென்ன பகுத்தறிவு இருக்கிறதா! அல்லது யாராவது அதற்கு நோய்க் கிருமிகளை மட்டும் தான் கொல்ல வேண்டும் என்று புத்தி புகட்டி அனுப்ப முடியுமா! அது நோய்க் கிருமிகளைக் கொல்லுவதுடன் நிற்காமல் ஜீவியத்திற்கே அதி முக்கியமான ரத்தத்திலுள்ள சில ஜீவ அணுக்களையும் மாய்த்து விடுகிறது என்பதை டாக்டர்களே ஒப்புக் கொள்கின்றனர்.

இதைத் தவிர மற்றொரு கைங்கரியமும் இந்த மருந்துகள் செய்து விடுகின்றன. மருந்து வாயினால் உட்கொண்டாலும் சரி, ஊசியின் மூலமாக உட் செலுத்தினாலும் சரி, அது ரத்தத்தில் கலந்து தான் தன் வேலை செய்ய வேண்டும். இரத்தம் சதா சரீரம் பூராவுக்கும் ஓடிக்கொண்டிருக்கிறது. அப்படி ஓடுவது இரத்தாசயம். இந்த மருந்து கலந்த இரத்தமும் இரத்தத்துக்கு வந்து தான் ஆகவேண்டும். ஒரு சுற்று அல்ல, பல கணக்கற்ற சுற்றுகள் சுற்றிச் சுற்றி வருகின்றன. அப்படி வரும்போது இருதயம் என்ன இரும்பாலானதா! அதுவும் சதையாலானதுதானே! அப்படிப் பாய்ந்து வரும் ரத்தம் இரத்தாசயத்துக்கு வந்து போகும்போது இரத்தத்திலுள்ள சதைகள் நரம்புகள் தாக்கப்படுகின்றன. அதனால் அவைகள் நாளடைவில் பலவீனமாகிறன. அதனால் பலவித இருதயக் கோளாறுகள் வருகின்றன.

மற்றும் இந்த இரத்தமானது குண்டிக் காய்களின் வழியாகச் சென்று அங்கு வடிகட்டப் பட்டுத்தான் கெட்ட ரத்தமானது இருதயத்துக்குச் செல்லுகின்றது. குண்டிக்காய்களின் வேலை இரத்தத்திலுள்ள வேண்டாத வஸ்துக்களை வடிகட்டுவது. இதற்கு வழக்கமாய்ச் செய்து வரும் அசுத்தங்களை அகற்றும் வேலைகளுடன் இரத்தத்திலுள்ள இந்த வேண்டாத விஷ மருந்துகளையும் வடிகட்டும் வேலை சுமத்தப்படுகிறது. இவைகள் முன்னைவிடத் தீவிரமாய் வேலை செய்கின்றன. அப்படி வேலை செய்வதால் களைப்படைவதுடன் குண்டிக்காய்களையும் இந்த விஷ மருந்து தாக்கு

கின்றது. அதனால் குப்பைகளை அகற்றும் குண்டிக்காய்களே பலவீனமாகின்றன.

இம்மட்டோ இது நடக்கிறது! அதி அற்புதப் பொறியாகிய மூளையில் இந்த ரத்தம் செல்லும்போது என்ன நடக்கும்! ஜீவனை அளிக்கும் நுரைசரல் என்ன ஆவது! ஆகவே நோய்க் கிருமிகள் என்னமோ கொல்லப்பட்டு நோய் குறைந்தாலும் இருதயம், நுரை சரல், குண்டிக்காய், மூளை மற்ற நுண்ணிய அவயவங்கள் எல்லாம் பாதிக்கத்தான் படுகின்றன. இந்த நிலைமையில் இவைகளைத் தேற்ற மருந்துகள் வேறு கொடுக்கப்பட வேண்டும். இந்த பலவீன நிலைமையில் வேறு வியாதிகள் தோற்றாது என்பது என்ன நிச்சயம்! கல்சீரல், மண்ணீரல் என்ன பாடுபடுகிறதோ! இந்த மார்க்கத்தைத்தான் இன்றுள்ள வைத்திய முறைகள் கையாளுகின்றன.

ஆனால் இந்த முறைகளுக்கெல்லாம் அடங்காமல் எந்த விஷ மருந்துகளையும் சட்டை செய்யாமல் தன் பாட்டுக்கு வம்சத்தை விருத்தியாக்கிக் கொண்டு மானிட உடலில் குடியாய்க் காலம் கழிக்கும் சில கொடிய நோய்கள் இருக்கின்றன. அம்மாதிரியான நோய்களில் க்ஷயம், குஷ்டம் போன்றவைகளைச் சொல்லலாம்.

ஆனால் யோகாசன சிகிச்சையானது அதிக ரணமாகிய இரத்த அணுக்களின் பலவீனத்தைப் போக்கும் மார்க்கத்தை நாடுகின்றது. இரத்த அணுக்களுக்குப் போஷணை அளிப்பது தைராய்ட் என்னும் கோளத்தின் ரசமேயாகும். அத்தைராய்ட் பல வீனமடைந்ததினால்தான் இரத்த அணுக்கள் நோய்க்கிருமிகளைக் கொல்லப் போதிய பலமில்லாமல் போய்விட்டது. எனவே தைராய்டைப் பலப்படுத்த ஆசன சிகிச்சை அளிக்கப்படுகிறது. அத்துடன் கூடப் பிராணசக்தி ஏற்படப் பிராணாயாம சிகிச்சை அளிக்கப்படுகிறது. உணவும் இழந்த சக்தியை மீட்க உதவுகிறது. இத்தனைக்கும் மேலாக மானசீகமாகத் துதி சிகிச்சை நடக்கிறது. அவசியமானால் சில சமயம் சில கேசுகளில் மருந்துகளையும் உபயோகிக்கலாம். பின் நோய் நீரக் கேட்க வேண்டுமா! இம்மாதிரியே ஒவ்வொரு வியாதிக்கும் அதன் மூலகாரணமறிந்து அதற்கு ஆசன பரிகாரம் ஒரு பக்கமும், பிராண சக்தி, மானச சிகிச்சை, உணவு திட்டம் இவைகளால் யோக சிகிச்சை அளிக்கப்படுகிறது.

பிராண சக்தி, மானச சிகிச்சை என்பது சாதாரணமானது அல்ல. அவைகளின் மகிமைகளை அறியப் பலகாலமாகும். இதனால் முடியாத காரியமே இல்லையெனலாம். நோய்களை மட்டும் போக்குவதோடு நில்லாமல் மனிதனை மிக உன்னத நிலைக்கு உயர்த்தக் கூடியது; மனிதனை மனிதனாக்கக் கூடியது. மூனைத்தால் மனிதனைத் தெய்வமாக்கவும் கூடியது. பின் பிணி ஏது! நோய் ஏது! துன்பமேது! துக்கமேது! எல்லாம் சுகமயம்! ஆனந்த மயம்! இன்ப மயம்! மற்ற சிகிச்சைகளில் இவைகள் கிடையாது. (தொடரும்)

# திரு. வி. க. மணி மண்டபம்

## நன்கொடை வேண்டுகோள்

தமிழ்ப் பெரியார் திரு. வி. க.வின் சிறந்த பண்புகளும் அரும் பெருந் தொண்டுகளும் தமிமுகத்துக்கு நன்கு தெரிந்தவை. அவர் பிரிவை ஆற்ருது, பற்பல இடங்களில் அன்பர்கள் திரண்டு அனுதாபக் கூட்டங்கள் நடத்தியுள்ளனர்.

அப் பெருமகனாரின் ஆவி பிரிவதற்குச் சில நாள் முன்பே, அவர் மாண்பிற்கோர் சின்னமாக, அவர் பெயரால் மணிமண்டபம் ஒன்றை, அவர் தோற்றுவித்த சென்னை ராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் சிறந்த வெளி நிலத்தில் எழுப்ப வேண்டும் என்று பல அன்பர்கள் ஒன்று கூடி ஆலோசித்துத் தீர்மானித்தனர். அம் மண்டபத்தை, சிறந்த பொருள்கள் பற்றிய சொற்பொழிவுகள் நிகழ்த்தல், நூல் நிலையம் அமைத்தல், திரு. வி. க. வின் நூல்களை ஆராய்தல், அவரது கையெழுத்துப் பிரதிகள், அவர் வெளியிட்ட பத்திரிகைகள், படித்த நூல்கள், உபயோகித்த பொருள்களில் கண்காட்சியில் வைத்துக் காப்பாற்றுவதற் குரியவற்றைச் சேகரித்துப் பாதுகாத்தல் போன்ற காரியங்களுக்குப் பயன் படுத்திக் கொள்ளலாகும்.

இந்தத் திருப்பணி விரைவில் நிறைவேறுவதற்காகத் தாங்கள் தாராளமாக நன்கொடை அளித்துதவும்படி கோருகிறோம்.

சென்னை } திரு. வி. க. மண்டப
1—10—53 } அமைப்புக் குழுவினர்.

திரு. வி. க. மணி மண்டப நிதிக்குப் பின்வரும் நன்கொடைகள் அறிவிக்கப் பட்டிருக்கின்றன :—

ஸ்ரீமான்கள் சி.எஸ். ரத்தினசபாபதி முதலியார், கோவை, ரூ. 1000; சி. ஆர். ஸ்ரீனிவாசன், "சுதேச மித்திரன்", ரூ. 500; கமலக்கண்ண முதலியார், சென்னை நகரசபை உறுப்பினர், ராயப்பேட்டை, ரூ. 500; "கல்கி" காரியாலயம் சென்னை, ரூ. 500; வே. தியாகராய முதலியார், ராயப்பேட்டை, சென்னை, ரூ. 333; கே. பாலசுப்பிரமணிய ஐயர், எம். எல். சி., ரூ. 250; ஓ. பி. ராமசாமி ரெட்டியார், (முன்னாள் முதலமைச்சர்) ரூ. 100; ச. சச்சிதானந்தம் பிள்ளை, சென்னை, ரூ. 100; ச. சிவகுமாரன், சென்னை, ரூ. 100; டி. வி. ரத்தின முதலியார், ராயப்பேட்டை, ரூ. 100; ஏ. சக்கரவர்த்தி நாயனர், புதுப்பேட்டை, சென்னை, ரூ. 100; ட்ரோஜன் அண்ணாமலைச் செட்டியார், தியாகராய நகர், ரூ. 100; சி. அமிர்த கணேசன், சென்னை, ரூ. 50; கே. ஆர். வேலாயுத முதலியார், ராயப்பேட்டை, சென்னை, ரூ. 50; சி. என். சிவபூஷணம் மரகதவல்லி, குடீ, சென்னை, ரூ. 50; மு. லோகநாத முதலியார், ராயப்பேட்டை, சென்னை, ரூ. 50; வே. துரைசாமி முதலியார், ராயப்பேட்டை சென்னை, ரூ. 50; ஆர். ராமையர், "தேவி விலாஸ்", ராயப்பேட்டை, சென்னை, ரூ. 50; க. பாலசுந்தர முதலியார், சென்னை, ரூ. 50; வி.சி. சுப்பைய கவுண்டர், கோயமுத்தூர், ரூ. 25; ஆக்கூர் அனந்தாச்சாரியார், பாரதி சங்கக் காரியதரிசி, சென்னை, ரூ. 25; டி. ஆர். சுந்தரம் பிள்ளை, கோயமுத்தூர், ரூ. 10; மணி புக் டெப்போ, விருதுநகர், ரூ. 6; எல். லெமான்ஸ், கோவிலாணூர், ரூ. 5; வி. காசிநாதன், திருவல்லம், ரூ. 1.

---

குறிப்பு :—திரு. வி. க. மணி மண்டப நிதிக்கு நன்கொடைகள் அனுப்ப வேண்டிய விலாசம் : ஸ்ரீ எஸ். சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ. எல். டி., திரு. வி. க. மண்டப அமைப்புக் குழு, 175/A. லாயிட்ஸ் ரோட், ராயப்பேட்டை, சென்னை.




புதுமை பெறுங்கள்! முதலில் ஸ்நானம் செய்ததும் சார்மிஸ் டால்கம் பவுடரை உடல் முழுவதும் தூவுங்கள். எத்தகைய புதுமை உணர்ச்சி அது அளிக்கும் தெரியுமா?

மிருதுத்தன்மை பெறுங்கள்! உடலில் உராய்வுள்ள இடங்களிலும் பவுடரை நன்றாக தடவிவிடுங்கள். அது பட்டைப்போல படர்ந்து எரிச்சல் வராமல் பாதுகாக்கிறது.

நீடித்த இனிமையுடன் இருங்கள்! சார்மிஸ் டால்கம் பவுடரை தாராளமாக அடிக்கடி உபயோகியுங்கள். அது செலவில்லாமல் பெருவாழ்வு அளிக்கும் சாதனம். அழகிற்கும் காதல் கவர்ச்சிக்கும் இதுவே சிறந்த ரகசியம்.



# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

பரவசப்படுத்தும் மனோஹரமான நறுமண முள்ளது.

# அநுமகரத்வஜா

**ஷட்குண மகரத்வஜா சக்தி வாய்ந்தது**



சுத்தமான ஷட்குணத் தங்கத்தினால் மிகவும் சிறிய அளவில் ஆனால் பிரமாத சக்தி வாய்ந்ததாக உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டுப் பிறகு மாத்திரை வடிவம் ஆக்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பதற்கு மிகவும் சுலபம். மற்ற மகரத்வஜங்களை விடச் சக்தி வாய்ந்தது.

○●○

4 மாத்திரைகள் ஒரு புட்டியில் இருக்கின்றன. (7 முழு அளவுகள்)

# பெங்கால் கெமிகல்

**கல்கத்தா - பம்பாய் - கான்பூர்**

ஏஜண்டுகள்:

என். தேசாய் கௌண்டர் & கோ.
41. பந்தர் தெரு - சென்னை

## அதிக வெண்மையான பற்கள் சுத்தமான வாய்




DCC/31

கோல்கேட் ரங்கராங்கை ரேடியோசிலானில் 41 மீட்டர் பாண்டில் பிரதிவெள்ளிக்கிழமையும் இரவு 8 மணிக்கு கேளுங்கள்.

---

FZY-18-TAM

# தசை நோய்கள், வலிகள் விரைவில் குணமாகும்



ஜாம்-பெக் மூலிகை களிம்பு உங்கள் தசையின் மீது தேய்த்து விடுங்கள். அதிலுள்ள மருந்துக்கலப்புள்ள எண்ணெய்கள் உங்களது நோய்கள், வலிகள், பிடிப்பு ஆகியவற்றிற்கு இதம் அளிக்கும்போது உண்டாகும் குணத்தை நீங்கள் உணரலாம். ஜாம்-பெக்கிலுள்ள இவ்வற்புத தைலங்கள் ஊடுருவிப்பாய்ந்து உங்கள் தசைகளை மிருதுவாகவும் வலிமையுள்ளதாகவும் செய்யும். இன்றே ஒரு டப்பி ஜாம்-பெக் வாங்குங்கள். சருமம், மண்டை நோய்களுக்கும், வெட்டுக்காயம், நெருப்புப்புண், கஞ்சிக்கோப்பனம், விஷப்புண், ரணம், சேற்றுப்புண், பூச்சிக்கடி, மூல உபத்திரவம் ஆகியவற்றிற்கும் ஜாம்-பெக் உலகப்பிரசித்தி பெற்ற நிவாரணியாகும்.

## Zam-Buk

ஜாம்-பெக் உலகத்தின் தலைசிறந்த சரும ஆயின்ட்மெண்ட்

மிருகக் கொழுப்பற்றது என்பதற்கு உத்திரவாதம்.




மதராஸிற்கு ஸோல் ஏஜன்டுகள்: மெஸர்ஸ். தாதா & கம்பெனி, பார்க் டவுன்




விமலா வீட்டின் உள்ளே நுழைந்தாள். வாசல் வராந்தாவில் உட்கார்ந்திருந்த அவள் மூத்த சகோதரி லீலா, "ஏன் விமலா இத்தனை நேரம்! அம்மா உனக்காகக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறாள்" என்றாள்.

"ஆமாம்! இந்த அம்மாவுக்குக் கவலைப்படுவதைத் தவிர ஏதாவது தெரியுமோ! நான் என்ன பச்சைக் குழந்தையா! பூச்சாண்டி பிடித்துக் கொண்டு விடுமா! இன்று கல்லூரியில் ஒரு முக்கியமான கூட்டம் இருந்தது. அதுதான் நாழிகையாகி விட்டது" என்று மிகவும் அசட்டையாகப் பதிலளித்தாள் விமலா.

லீலா, "வாஸ்தவம்தான். ஒன்று அம்மா வேலை செய்து கொண்டிருப்பாள். இல்லா விட்டால் கவலைப்படுவாள். இந்த இரண்டில் ஒன்று இல்லாத நேரம் கிடையாது. ஆனால் இரண்டும் சேர்ந்து கொள்ளும் நேரம் மாத்திரம் உண்டு" என்று சொல்லிச் சிரித்தாள்.

இதைக் கேட்டுக் கொண்டே வந்த மீனாட்சி அம்மாள் "பெண்கள் சீக்கிரம் வீட்டுக்கு வரா விட்டால் தாயார் கவலைப்பட மாட்டாளா! இரண்டு பேரும் சேர்ந்து கூத்தடிக்கிறீர்களே. இதைப் பாரு விமலா! இனிமேல் நாழியாகும் என்றால் முதலிலேயே சொல்லிவிட்டுத் தான் போக வேண்டும். நீ என்ன சொன்னாலும் உன்னைப்பற்றிக் கவலையைவிட என்னால் முடியாது" என்று சற்று அதட்டலாகச் சொன்னாள். பிறகு, "உன்னை ஒருவனிடம் ஒப்படைத்து விட்டால் அப்புறம் கவலைப்பட மாட்டேன்" என்றாள். ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

விமலா சிரித்துக் கொண்டே, "அப்போதான் அம்மா நிஜமாகக் கவலை அதிகமாக இருக்கும். இப்போது லீலா, சரஸ்வதி, சரோஜா மூன்று பேரும் மாற்றி, மாற்றிப் பிரசவத்துக்கு உன்னிடம் வரும்போது நீ எவ்வளவு கவலைப்படுகிறாய்! நானும் அந்த கோஷ்டியில் சேரவில்லையே என்று நீ எதற்காக வருத்தப்படுகிறாய்!" என்றாள்.

இந்தச் சமயத்தில் லீலாவின் மூன்று வயதுப் புதல்வன் கண்ணன் அங்கே சிரித்துக் கொண்டே ஓடி வந்தான். விமலாவைப் பார்த்து, "விமலா சித்தி! பாட்டி எனக்கு முறுக்கு பண்ணிக் கொடுத்தா. இந்தா நீ சாப்பிடு" என்றான்.

அவன் பாட்டி மகிழ்ச்சி பொங்க அவனைத் தூக்கி அணைத்துக் கொண்டு, "இந்த மாதிரி குழந்தைகள் பிறப்பதற்கு எத்தனை வேண்டுமானாலும் கவலைப்படலாமே!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே போனாள். அவளுக்கு வீட்டில் ஏகப்பட்ட காரியம்.

குழந்தைகள் யாராவது, "பட்சணம் பண்ணித் தா" என்று கேட்டுக் கொண்டே இருப்பார்கள். அல்லது மசக்கைப் பெண் ஏதாவது கேட்பாள். லீலா தனக்கு வெல்லத் தேன்குழல் வேண்டுமென்று சொன்னாள். அதற்காக மாவைப் பிசைக்தான் மீனாட்சி அம்மாள்.

வயது ஐம்பத்திரண்டு ஆகியும் வீட்டுக் காரியம் செய்வதில் அவளுக்கு மிகவும் ஆசை. கிராமாந்திரத்தில் பிறந்து வளர்ந்தவள். பக்கத்து வீட்டுக் கமலாவுக்கு அப்பளம் இடவேண்டுமா! இதோ மீனாட்சி மாமி போயாகி விட்டது. எதிர் வீட்டுச் சுந்தரிக்கு முறுக்குச் சுற்றத் தெரியவில்லையா! மாமி அங்கே இருப்பாள். கோடி வீட்டுக் கோமளத்தின் பிள்ளைக்கு ஜுரமா! மீனாட்சி மாமியின் முதல் சிகிச்சைகள் நடந்து விடும். மாமிக்கு நாலு பெண்களும், மூன்று பிள்ளைகளும் இருந்தனர். ஏழு உடம்பு அவளுக்கு இருந்தால் ஏழு பேரிடமும் இருந்து அவர்களுக்காக உழைப்பாள். லீலா இப்பொழுது இரண்டாவது பிரசவத்துக்காக அம்மாவிடம் வந்திருந்தாள்.

ஒரு சிறுவன் பத்திரிகையைக் கொண்டு வந்து எறிந்து விட்டுப் போனான். விமலா ஓடிவந்து அதைக் கையில் எடுத்தாள். "மாலென் கோவ் அறைகூவல். ரஷ்யாவிடம் ஹைட்ரஜன் குண்டு இருக்கிறது" என்று தலைப்புப் போட்டிருந்தது. மேலும் கியூபாச் நகரத்தின் படத்தைப்போட்டு, "ஹைட்ரஜன் குண்டு விழுந்தால், புதிதாக நிர்மாணிக்கப்பட்ட நகரம் முழுதும் காற்றில் தூசியாகப் பறந்துவிடும்" என்று வேறு போட்டிருந்தது. அதை லீலாவிடம் காட்டினாள் விமலா.

சிறிது நேரம் இருவரும் பேசாமல் இருந்தனர். விமலா கூறினாள். "ஏன் லீலா! உண்மையில் உலகத்தில் அன்பு என்று ஒன்று இருக்கிறதா! ஏதோ நான் சிறிது நேரம் கழித்து வந்தேன் என்பதற்காக அம்மா கவலைப்படுகிறாளே, இது தான் அன்பா! எத்தனையோ சின்னஞ் சிறு குழந்தைகள் குடிக்க ஒரு வாய் கஞ்சி இல்லாமல் தவிக்கின்றனவே! அவர்களிடம் அன்பு காட்டுவது யார்! இந்த ஹைட்ரஜன் குண்டு போன்ற பயங்கர ஆயுதங்கள் உயிர் வர்க்கங்களையே நாசம் செய்ய உற்பத்தியாக்குகிறார்களே! இந்த உலகத்தில் அன்பு என்ற சொல்லை உண்மையாக எல்லோரும் உணர்ந்திருந்தால் இப்படிப்பட்ட பயங்கரங்கள் நடக்குமா!" என்றாள்.

"விமலா! நீ இந்தச் செய்தியைப் படித்த உணர்ச்சி வேகத்தில் பேசுகிறாய். அன்பில்லாமல் இந்த உலகம் எப்படி வளர்ந்திருக்க முடியும்! தாய்க்குத் தன் குழந்தையிடம் உண்டாகும் அபரிமிதமான அன்பு பொய்யாகுமா! நம் நாட்டில் பிறந்த அஹிம்ஸா மூர்த்திகளான புத்தரும், காந்தியும் அன்பு உபதேசம் செய்யவில்லையா! அவர்களுடைய வார்த்தைகள் எல்லாம் வெறும் வார்த்தைகள் அல்லவே" என்றாள் லீலா.

அதற்கு விமலா, "உண்மைதான் லீலா. ஆனால் அந்த மகான்களின் அன்பு உபதேசங்கள் உலகத்துக்குப் போதவில்லையே! ஏன்! இன்றைய உல

கத்தைப் பயங்கரமான யுத்தத்தினால் பயமுறுத்தும் அமெரிக்கரும், ஆங்கிலேயரும் கிறிஸ்தவர்கள் தானே! ஏசுநாதரைப் போல் அன்பை உபதேசித்தவர்கள் உண்டா! 'ஒரு கன்னத்தில் அடித்தவனுக்கு இன்னொரு கன்னத்தையும் காட்டு' என்று அவர் கூறினாரே. சிலுவையில் அறையப்பட்ட பொழுது கூட, 'அறியாமையால் பாதகம் செய்யும் இவர்களை மன்னித்தருளுங்கள்' என்று அவர் இறைவனைப் பிரார்த்தனை செய்தாரே! கிறிஸ்தவர்கள் என்று தங்களை அழைத்துக் கொள்ளும் அனைவரும் இப்படி இருக்கிறார்களா! எத்தனையோ மகான்கள், இப்படியெல்லாம் 'அன்பே தெய்வம்' என்று உபதேசித்த பிறகும், ஏன் இந்த உலகம் பிறரைத் துன்புறுத்துவதையே நோக்கமாகக் கொண்டிருக்கிறது! இதுதான் என் மனதுக்குப் புரியாத புதிராக இருக்கிறது" என்றாள்.



இந்தச் சமயத்தில், "சாமி! சாமி! அடிக்காதீங்க! இனிமே செய்யல்லே!" என்று ஒரு சிறுவன் அலறியது அவர்களுக்குக் கேட்டது. விமலா வாசலுக்கு ஓடிப் போய்ப் பார்த்தாள். கமார் பன்னிரண்டு வயதுடைய சிறுவன் ஓடிவந்து கொண்டிருந்தான். அவன் களங்கமற்ற முகத்தில் விவரிக்க இயலாத சோகம் தேங்கிக் கிடந்தது.

விமலா அந்தச் சிறுவனைக் கையைத் தட்டிக் கூப்பிட்டாள். கண்ணீர் பொங்கி வழிந்து கொண்டிருந்த அவன் முகத்தைப் பார்த்த விமலா மிகவும் பரிதாபத்துடன், "ஏனப்பா, அழுகிறாய்! யாராவது அடித்தார்களா! ஏன் அடித்தார்கள்!" என்று கவலையுடன் கேட்டாள்.

சிறுவன் ஒரு கணம் அவள் முகத்தைப் பார்த்தான். பிறகு தலையைத் தாழ்த்திக் கொண்டு விசித்து விசித்து அழத் தொடங்கினான். அவனை வாசல் வராந்தாவுக்கு அழைத்துக் கொண்டு வந்தாள் விமலா. லீலா அவனைப் பார்த்துக் கலவரத்துடன் "விமலா, இவன் நெற்றியிலிருந்து ரத்தம் வருகிறதே! ஐயோ பாவம்! விழுந்து விட்டாயா அப்பா!" என்று கேட்டாள்.

விமலா கூடத்திலிருந்து வந்த விளக்கு வெளிச்சத்தில் அவன் நெற்றியில் நீளமாகக் காயம் பட்டிருப்பதையும், ரத்தம் வருவதையும் பார்த்தாள். அவள் மனம் மிகுந்த வேதனையை அடைந்தது.

அவனைப் படியில் உட்கார வைத்து விட்டு உள்ளே ஓடி ஒரு செம்பில் தண்ணீர் கொண்டு வந்தாள். வரும்போது அம்மாவின் புடவைத் தலைப்பைப் பிடித்து இழுத்துக் கொண்டே வந்தாள். "இங்கே பாரு, அம்மா! இந்தச் சிறுவனுக்கு ஏதாவது மருந்து கொடு. பாவம்! நன்றாக அடிபட்டிருக்கிறது" என்றாள்.

மீனாட்சி அம்மாளும் மனம் இரங்கியவளாக ஏதோ மருந்து போட்டு ஒரு துணியால் அந்தக் காயத்தைக் கட்டினாள். அதற்குள் லீலா ஒரு இலையைப் போட்டு அவனுக்குச் சாதம் போட்டாள். ஆனால் அந்தச் சிறுவனால் சாப்பிடவே முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்தது அவனுக்கு. விசித்துக்கொண்டே இருந்தான்.

விமலா தன் கண்களில் ததும்பிய நீரைத் துடைத்துக் கொண்டு, "உன் பெயரென்ன அப்பா!" என்று கேட்டாள். "கண்ணன்" என்றான் சிறுவன். அதற்குள் லீலா, "போகட்டும்; நீ நல்ல பையன்தானே! காயம் சரியாகிவிடும். இனி வலிக்காது, அழாமல் சாப்பிடு" என்றாள்.

மெதுவாக அவன் சாப்பிட்டு முடித்தான். உடனே விமலா அவனைச் சரமாரியாகக் கேள்விகள் கேட்டாள். அவன் கூறியது இதுதான்.

அவன் பெயர் கண்ணன். அவன் அப்பா இறந்து விட்டார். அவனுடைய அம்மா பல வருஷங்களாகப் பணக்கார வீடுகளில் வேலை செய்து பிழைத்தாள். அவனுக்குப் பள்ளிக்கூடம் போக ஆசை. ஆனால், 'வயிற்றுக்குச் சோறு இன்றி பசியுடன் பள்ளிக்கூடம் என்ன கேடு!' என்று அவன் தாயார் தடுத்து விட்டாள். இரண்டு வருஷங்களாகத் தனவந்தரான ஆறுமுக முதலியார் வீட்டில் அவன் வேலை செய்து வருகிறான்.

இன்று காலையில் அவன் தாயாருக்கு ஜுரம். சமைக்கவில்லை. ரொம்பப் பசியாக இருந்தது. முதலியாரின் பிள்ளை சங்கரனிடம் பசிக்கிறது என்று சொன்னான். அவன் ரொம்ப இளகிய மனமுள்ள சிறுவன். முதலியாருக்காக அவன் தாயார் செய்து வைத்திருந்த இட்லி, கொழுக்கட்டை எல்லாவற்றையும் எடுத்துக் கண்ணனிடம் கொடுத்திருக்கிறான். அதை அவன் சாப்பிடுவதைப் பார்த்துக் கொண்டே வந்து விட்ட எஜமானி அம்மாள் பெரிதாகக் கூச்சல் போட்டு முதலியாரிடம் சொல்லியிருக்கிறாள். கைப் பிரம்பினால் இரண்டு அடி வைத்திருக்கிறார் அவர். சங்கரனும் அடி வாங்கினான். இவன் வலிதாங்காமல் ஓடி வரும் போது மல்லிகைப் பந்தலில் நீட்டிக் கொண்டிருந்த மூங்கில் நெற்றியில் கிழித்து விட்டது.

இந்தக் கதையைக் கேட்ட விமலாவுக்கு நெஞ்சம் கொதித்தது. "சே, இவர்களெல்லாம் மனிதர்களா! நீயே பார் அம்மா! பசித்த குழந்தையை அடிக்கலாமா! அவர்கள் வீட்டுப் பையன் கொடுத்துத்தானே சாப்பிட்டான். பாவம்! கிடைத்தும் முழுக்கக் கிடைக்காமல் போய் விட்டதே இவனுக்கு. இதையெல்லாம் பார்த்தால் கம்யூனிஸமே தேவை என்று தோன்றுகிறது" என்றாள்.

"விமலா! கல்லூரியில் நீ படிக்கிற லக்ஷணம் நன்றாகத் தெரிகிறது. அவர்கள் வீட்டில் வேலை செய்கிறான். சம்பளம் கொடுக்கிறார்கள்.. அடிப்பதும் அணைப்பதும் அவர்கள் இஷ்டம். இவன் எதற்காகச் சங்கரனிடம் சொன்னான்! எஜமானி அம்மாளிடம் பசிக்கிறது என்று சொல்லியிருக்கலாம் அல்லவா! ஸ்திரீகளுக்குப் புருஷன்தான் முதல் தெய்வம், தர்மம். எல்லாம். உன் அப்பாவுக்கு நான் வைத்திருப்பதை நீ எடுத்து யாருக்காவது கொடுத்து விட்டால் எனக்குந்தான் கோபம் வரும். அதனால் உடனே கம்யூனிஸம் வந்துவிட வேண்டுமா! இதெல்லாம் படிக்கிறதாலே வருகிற வினை" என்றாள் மீனாட்சி அம்மாள்.

கண்ணன் போன பிறகும் அவர்களுடைய பேச்சு ஓயவில்லை. விமலா தான் அவன் வீட்டுக்குப் போய் அவன் தாயாரைக் கவனிக்கப் போவதாகச் சொன்னாள். மீனாட்சி அம்மாளுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. என்னடி லீலா! நீ ஏன் இப்படிப் பேசாமல் உட்கார்ந்திருக்கிறாய்! இந்தப் பெண் சொல்வது கொஞ்சமாவது சரியாக இருக்கிறதா! கண்ணனுக்குக் காயம். அவன் அம்மாவுக்கு ஜுரம். இவைகளை இவள் கவனித்து விட்டால் உலகம் திருந்தி விடுமா! நம்மால் முடிந்த அளவு செய்யத்தான் வேண்டும். ஏதோ பாவ புண்ணியம் பார்க்க வேண்டியதுதான். இப்போது அவனுக்குச் சாதம் போட்டது நியாயம். இதற்கு மேல் போவது அதிகப்பிரசங்கித்தனம். நம்மால் உலகத்தையே மாற்ற முடியுமா! எத்தனையோ மகான்களால் முடியாத காரியத்தை உன் தங்கை சாதித்துவிடப் போகிறாளாக்கும்!" என்றாள் மீனாட்சி அம்மாள்.

விமலா சிரித்துக்கொண்டு பதில் சொன்னாள். "மகான்களும் மனிதர்கள்தான் அம்மா! அவர்கள் பிறக்கும்போதே மகான்களாகப் பிறந்துவிடவில்லை. தங்களுடைய சாதனைகளால்தான் மகத்துவத்தை அடைந்தார்கள். ஒன்றும் செய்யாதவர்கள் மகான்களாக முடியாது!" என்றாள். பிறகு செருப்பைப் போட்டுக்கொண்டு கண்ணன் வீட்டை நோக்கிப் போனாள்.

லீலா அம்மாவைப் பார்த்து, "அம்மா நீ பேசாமல் இரு. அவள் சொல்வதில் நியாயம் இருக்கிறது. நீ கூறுவதிலும் உண்மை இருக்கிறது. அவள் தானாகவே இதைத் தெரிந்து கொள்வாள். நீ தடுப்பதினால் அவளுக்கு ஆத்திரம்தான் வரும்" என்றாள்.

"சரி! நீ சாப்பிட வா, அம்மா! நீ பட்டினி கிடக்கக் கூடாது. இந்தச் சமயத்திலே மனத்தை ஒன்றும் அலட்டிக் கொள்ளாதே!" என்று லீலாவை உள்ளே அழைத்துக் கொண்டு போனான்.

குழந்தைகள் சாப்பிட உட்கார்ந்திருந்தார்கள். மீனாட்சி அம்மாளின் பிள்ளை வயிற்றுப் பேரர்கள் மூன்று பேரும், பேத்தியும் அங்கு இருந்து வந்தனர்.

"அத்தை! பாட்டியைச் சாதம் பிசைந்து போடச் சொல்லு!" என்றாள் பேத்தி நிர்மலா.

"உன் அத்தையின் ஸிபாரிசு வேண்டுமோ, அதற்கு!" என்று சொல்லிச் சாதத்தைப் பிசைந்தாள் மீனாட்சி அம்மாள்.

லீலா குழந்தைகளைப் பார்த்துக் கண்ணனைப் பற்றிக் கூறினாள். "சின்னப் பையன்தான்! படிக்க முடியாமல் கஷ்டப்பட்டு வேலை செய்கிறான். நீங்கள் படித்தாலும், சும்மா விளையாடுவதுடன் நிற்கக் கூடாது. நன்றாக வேலை செய்யக் கற்றுக் கொள்ளவேண்டும். வேலை செய்வது உடம்புக்கும் நல்லது; நிறையவும் சம்பாதிக்கலாம். திருப்தியாகச் சாப்பிடலாம்" என்றாள்.

மீனாட்சி அம்மாள், "ஆமாம், லீலா! நீ சொல்வது சரிதான். என் அப்பா செத்துப்போகும் வரை கிராமத்தில் இருந்தார். அவரே குடியானவர்களுடன் வயலில் இறங்கி உழுவார். ஏற்றம் இறைத்து நீர் பாய்ச்சுவார். எவ்வளவு தூரமானாலும் நடந்துதான் போவார். கடைசிவரையில் திடமாக இருந்தார்!" என்று குழந்தைகளிடம் சொன்னாள்.

சாப்பிட்டதும் வாசலுக்கு வந்தார்கள். லீலா அம்மாவிடம் "ஏன், அம்மா! விமலா சொல்வதிலும் கொஞ்சம் நியாயம் இருக்கத்தானே செய்கிறது! கண்ணனை அடித்ததுபோல் நம் குழந்தைகளை யாராவது அடித்தால் மனம் பொறுக்கிறதா! ஒரு வேளை கண்ணனுக்குச் சாதம் போட்டதில் உன் மனசுக்குத் திருப்தியாகி விட்டது. ஏதோ இன்றைப் பொழுதுக்கு ஒரு புண்ணியம் பண்ணி விட்டதாகவும், சொர்க்கத்தில் உனக்கு ஒரு இடம் ஒதுக்கி யிருப்பார்கள் என்றும் எண்ணுகிறாய். ஆனால் சற்று ஆழ்ந்து சிந்தித்துப் பார். உலகத்தில் துன்பத்துக்கு என்ன காரணம்! எத்தனையோ பேர் பட்டினியாலும், பிணியாலும் உலகத்தில் வாடி மடிகிறார்களே! அப்படி இருக்கும் போது நாம் ஒன்றுமே செய்யாமல் இருக்கலாமா!" என்று கேட்டாள்.

மீனாட்சி அம்மாளுக்கு இதற்குப் பதில் சொல்வது சிரமமாக இருந்தது. "நீயும் விமலா மாதிரி கேட்கிறாயே லீலா. குழந்தைகள் பெற்றும் உனக்கு இது தெரியவில்லையே. நம்மால் முடிந்த அளவுதானே செய்யலாம்! 'தனக்கு மிஞ்சின தர்மம் இல்லை' என்று கேட்டதில்லையா! நம்மைப் பற்றிக் கவலைப்படவே நமக்கு நேரமில்லை. உலகத்தைப் பற்றிக் கவலைப்பட்டு என்ன செய்வது! நல்ல பெண்கள்! எல்லாம் அப்பா மாதிரியே வந்து பிறந்திருக்கிறதுகள்" என்றாள்.

லீலாவுக்குத் தன் தங்கையின் நினைவு வந்தது. விமலா திரும்பி வந்தாள் லீலாவிடம். "பாவம்!



கண்ணனின் தாயாருக்கு நல்ல ஜுரம். மலேரியா போலிருக்கிறது. மருந்து வாங்கிக் கொடுத்து விட்டு வந்தேன், குளிரில் நடுங்குகிறாள். போர்த்திக் கொள்ள ஒன்றுமே இல்லை," என்று சொன்னான். பிறகு தன் அறைக்குப் போய்த் தன் படுக்கையிலிருந்த ஜமுக்காளத்தை எடுத்துக் கொண்டு வந்து கூட வந்திருந்த கண்ணனிடம் கொடுத்தனுப்பினான். மீனாட்சி அம்மாள், ஏதோ சொல்ல வந்தாள். அதற்குள் லீலா 'பேசாமலிரு' என்று ஜாடை காட்டவே உள்ளே போய் விட்டாள்.

லீலா தங்கையைப் பார்த்து "விமலா நம் அப்பாவைப் பற்றி அம்மா சொன்னாள்" என்றாள். விமலாவுக்குத் தந்தை பேரில் மிகவும் அன்பும், மரியாதையும் உண்டு. அவர் பட்ட கஷ்டங்களையெல்லாம் நினைத்ததும் கண்கள் கலங்கி விட்டன.

விமலா சிறு குழந்தை. லீலாவுக்கு ஒன்பது வயது. அப்போது அவர்கள் கிராமத்தில் இருந்தார்கள். நெரிஞ்சிக் காட்டுப் பண்ணையாரிடம் ஏராளமான சொத்து இருந்தது. லீலாவின் தந்தைக்கும் கொஞ்சம் நிலபுலன் இருந்தது.

லீலாவின் தந்தை ஏழைகளிடம் அன்பாக இருப்பார். தன் வயலில் வேலை செய்யும் உழவர்களிடம் பரிவாகப் பேசுவார். பண்ணையார் மனத்தில் இரக்கமே கிடையாது. சாதாரணமான விஷயங்களைக் கேட்பதுகூட மிகவும் கடுமையாக இருக்கும். பண்ணையாரின் மனைவி காமாட்சி அம்மாள் நல்ல மனசுடையவள். கணவனுக்கு நேர் விரோதம். பயந்த சுபாவம். மகா உத்தமி.

ஒருநாள் பண்ணையார் வீட்டுச் சமையல்காரனுடைய வேஷ்டிகள் இரண்டு காணாமல் போய் விட்டன. பண்ணையாருக்குத் தெரிந்ததும், அவரிடம் வேலை செய்யும் ஹரிஜனங்கள் ஆறு பேரையும் கட்டி வைத்துப் பிரம்பால் அடித்து, "யார் எடுத்தது" என்று கேட்டார். "யாராவது ஒப்புக் கொள்ளும் வரையில் அடியை நிறுத்தப் போவதில்லை" என்று கத்தினார். சமையல்காரன் போடு போடென்று போட்டான்.

லீலாவின் தந்தை இதைக் கேள்விப்பட்டதும் துடித்துப் போனார். "எவனோ ஒருவன் எடுத்ததற்கு ஆறு பேரை அடிப்பதா? என்ன அக்கிரமம்!" என்று பொருமினார்.

பக்கத்து வீட்டு ராமசாமியை அழைத்துக் கொண்டு ஓடினார். மீனாட்சி அம்மாள், "பெரிய இடத்தில் துவேஷம் பண்ணிக் கொள்ளாதீர்கள். எப்படியாவது போகட்டும். அவர் பாவம் அவரோடே" என்று தடுத்துப் பார்த்தாள். அவர் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை.

பண்ணையாரிடம் அடிப்பதை நிறுத்தச் சொல்லி மன்றாடினார். அவர் லட்சியம் செய்யாமல் போகவே, பண்ணையாரின் பேரில் கேஸ் போடுவதாகப் பயமுறுத்தினார். அது பெரிய சண்டையாக முடிந்தது. லீலாவின் தந்தையின் பக்கம் நியாயம் இருக்கவே பலர் இவரோடு சேர்ந்து அந்த ஹரிஜனங்களின் கட்டுக்களை அறுத்து விடுவித்தனர். பெரிய பண்ணையார் சும்மா விடுவாரா! திருடர்களுக்கு உதவி செய்ததாக வழக்கு தொடர்ந்தார். கடைசியில் லீலாவின் தகப்பனார் ஜெயித்த போதிலும், செல்வத்தில் புரண்ட பண்ணையாருக்கு நிகராகச் செலவு செய்யும்படி நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டதால், தாங்க முடியாத கஷ்ட நஷ்டங்களை அடைந்தார்.

அதை நினைத்துக் கொண்டுதான் மீனாட்சி அம்மாள், "அப்பாவுக்குப் பெண்கள் தப்பாமல் பிறந்திருக்கிறீர்களே!" என்றாள்.

விமலா, "அந்தக் காலத்தில் அப்பா ஒரு கிராமத்திலிருந்து கொண்டு ஏழை மக்களுக்காகக் கஷ்டப்பட்டார். நாமெல்லாரும் இப்போது பட்டினத்தில் சுகமாக வாழ்கிறோம். இப்போது ஏதேனும் பரோபகாரம் செய்யாமல் வாழ்வது மகா கேவலம் லீலா. அம்மாவின் குறுகின மனப்பான்மையை எப்படி மாற்றுவது! அப்பாவோடு எத்தனையோ வருஷங்கள் பழகியும் இப்படி இருப்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது" என்று சொல்லிவிட்டுப் படுத்துக் கொள்ளப் போனாள்.

மறுநாளும் விமலா கண்ணனின் அம்மாவைப் பார்க்கப் போனாள். திரும்பி வந்ததும் லீலா விசாரித்ததற்கு, "இன்று அவளுக்கு உடம்பு கொஞ்சம் தேவலை. பாவம்! முப்பது வயதுதான் ஆகிறதாம் அவளுக்கு. என்னென்ன கஷ்டங்களையெல்லாம் இதற்குள் அனுபவித்து விட்டாள்! அவள் கணவன் ஏழு வருஷங்களுக்கு முன்னால் அபரிமிதமான குடியினால் செத்துப்போனானாம். அப்பா, அம்மாவுடன் இருந்தாளாம். அவர்களும் வறுமையால் வாடவே பிழைப்பைத் தேடி இங்கு வந்திருக்கிறாள். மூன்று வீடுகளில் பத்துப் பாத்திரங்கள் தேய்த்து மாதம் ஒன்பது ரூபாய் சம்பாதிக்கிறாளாம். இதில் கண்ணனை எப்படிப் படிக்கவைப்பாள்! கண்ணனுக்கு ஐந்து ரூபாய் சம்பளமாம். இதற்குள் அவர்கள் உண்டு உடுத்தி வாழவேண்டியிருக்கிறது. நமக்கு எத்தனை

## ஸ்ரீராம நாம யக்ஞம்

ஆனந்தாச்ரமத்தில் ஸ்ரீராமதாஸ ஸ்வாமியின் சீடராக இருந்து ஆத்மீகத் தொண்டு புரிந்து வரும் அன்னை கிருஷ்ணா பாயின் வெள்ளி விழாவை 1955-ம் வருஷம் நவம்பர் மாதம் கொண்டாடத் திட்டமிட்டிருக்கிறார்கள். அன்னை கிருஷ்ணாபாய் ஆத்ம சமர்ப்பணத் தொண்டில் ஈடுபட்டு 1955-ம் வருஷத்தோடு இருபத்தைந்து ஆண்டுகள் பூர்த்தியாகின்றன. மேற்படி வெள்ளி விழாவை ஸ்ரீ ராமநாம லிகித ஜப யக்ஞமாகக் கொண்டாட வேண்டும் என்று கிருஷ்ணா பாய் விரும்புகிறார். எனவே அந்த யக்ஞம் 1—10—1953-ல் ஆரம்பமாகி 31—10—1955-ல் பூர்த்தியாகும். அதில் கலந்து கொள்ள விரும்புவோர் நோட்டுப் புத்தகங்களில் "ஓம் ஸ்ரீ ராம ஜயராம ஜய ஜய ராம" என்று தங்களால் இயன்ற எண்ணிக்கை எழுதித் தங்கள் விலாசத்துடன் ஸ்வாமி ராமதாசருக்கு (P.O. Anandashram, Via Kanhangad, S. Rly.) அனுப்பவேண்டும். 30—10—1955-க்குள் பக்தர்கள் எழுதும் ராமநாமங்களின் மொத்த எண்ணிக்கை இருபத்தைந்து கோடி இருக்க வேண்டும் என்று நிர்ணயித்திருக்கிறார்கள். பக்தர்கள் ராம நாமத்தையோ அல்லது குருவால் தங்களுக்கு உபதேசிக்கப்பட்ட வேறு புனித மந்திரத்தையோ எந்தப் பாஷையிலாவது எந்த லிபியிலாவது எழுதி அனுப்பலாம்.

# படித்துப் பாருங்கள்!

## கவி ராட்சசன்

ஒட்டக் கூத்தரின் கவித் திறமையையும் புலமையையும் பற்றிய ஆராய்ச்சி பூர்வமான நூல் இது. அப்புலவர் பெருமானின் கவித் திறமையைக் குறிப்பிடுவதற்குத் தான் ஆசிரியர் 'ராட்சசன்' என்ற அடைமொழியைச் சேர்த்திருக்கிறார். இந்த ஆராய்ச்சி நூலுக்கு ஆதாரமாக, "தக்க யாகப் பரணி," "குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ்", "தமிழ் காவலர் சரிதை," "செங்குந்தர் பிரபந்தத் திரட்டு," "சோழ மண்டல சதகம்" முதலிய பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து சான்றுகள் காட்டியிருக்கிறார்.

எழுதியவர்: மலைமருமகன்; பிரசுரம்: கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை-4; விலை: ரூ. 1-4-0.

## 1. தமிழ்வையை
## 2. புதுவெள்ளம்

சங்க காலத்து மக்கள் கடவுளை வழிபட்ட முறை, கடவுளைப் பற்றி அவர்கள் அறிந்திருந்த செய்திகள் முதலியவற்றைச் சங்க நூல்களில் பரக்கக் காணலாம். அவற்றுள் பரிபாடல் என்னும் பழம் இலக்கியத்தில் முருகனையும் திருமாலையும் பற்றிய பாடல்கள் இருக்கின்றன. அவற்றுள் இரண்டு பாடல்களுக்குரிய விளக்கம் தமிழ்வையை என்னும் நூலில் விரிவாக எழுதப்பட்டிருக்கிறது.

கடைச் சங்க நூல்களுள் ஒன்றாகிய பதிற்றுப் பத்து என்னும் நூல் சேர மன்னர்களின் வீரத்தையும் தீரத்தையும் சிறப்பையும் விரித்துக் கூறுகிறது. புதுவெள்ளம் என்னும் நூல் பதிற்றுப் பத்திலிருந்து எட்டுப் பாடல்களுக்கு விளக்கம் கூறுகிறது. மேற்படி இரண்டு நூல்களையும் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் ஆராய்ச்சியுடன் விரிவாக எழுதியிருக்கிறார்.

பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை-18. விலை; ஒவ்வொன்றும் தனித்தனி மூன்று ரூபாய்.

---

இருந்தாலும் போதவில்லையே! அவர்கள் என்ன தான் செய்வார்கள்!" என்றாள்.

ஒரு மாதம் ஆயிற்று. கண்ணன் படிக்க ஆசையாக இருக்கிறது என்று சொன்னது விமலாவின் உள்ளத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது. ஏழைகளுக்காகக் கண்ணன் இருந்த இடத்தில் ஒரு சிறிய வகுப்பு நடத்தத் தீர்மானித்தாள் விமலா. சுமார் இருபது சிறுவர் அவள் நடத்தும் வகுப்பில் சேர்வதாகச் சொன்னார்கள். இலவசப் படிப்பு சொல்லிக் கொடுத்துத் தன் சேவையை ஆரம்பிப்பது என விமலா உறுதி பூண்டாள்.

மீனாட்சி அம்மாளுக்கு ஒரே ஆத்திரம் பொங்கியது. "இந்த மாதிரி பெண்ணாய்ப் பிறந்தவர்கள் செய்யலாமா! தண்டச் செலவு செய்வது நியாயமா! ஏதோ படிப்புச் சொல்லிக் கொடுத்துக் கிழிக்கப் போகிறாளாமே! லீலா! நீயாவது அவளுக்குப் பணம் செலவு செய்யாமலிருக்கும்படி புத்தி சொல்லக் கூடாதா!" என்றாள். லீலா தன் தாயாரைச் சமாதானப்படுத்தினாள்.

விமலா நான்கு நாட்கள் உற்சாகமாக வகுப்பு நடத்தினாள். ஐந்தாவது நாள் அவள் முகம் வாடியிருந்தது. லீலா அவளிடம், "என்ன விமலா ஒருமாதிரி இருக்கிறாயே!" என்றாள்.

"ஒன்றுமில்லை லீலா. கண்ணனின் அம்மாவுக்கு நான் அன்போடு கொடுத்த ஜமுக்காளத்தை ஒன்றரை ரூபாய்க்கு அவள் விற்றுவிட்டாளாம். என்னிடம் கேட்டிருந்தால் நான் ஒன்றரை ரூபாய் கொடுக்க மாட்டேனா!" என்று வருந்தினாள்.

"அவர்கள் அப்படித்தான் இருப்பார்கள் விமலா. நீ கொடுத்தது அவர்களுக்கு நிறையாது. அதை அவர்கள் மதிக்கவும் மாட்டார்கள். பதினைந்து ரூபாய் ஜமுக்காளத்தை நீ அவளுக்குக் கொடுத்தாய். அதில் ஒட்டி நின்ற உன் அன்பை அவள் தெரிந்து கொள்ளவில்லை. அதற்காக நீ வருந்தாதே. போனால் போகட்டும்" என்றாள்.

பத்துப் பதினைந்து தினங்களுக்குப் பிறகு வகுப்புக்கு வந்த சிறுவர்களிடம் சிரத்தை குறைந்து போயிற்று. அவர்களுக்கு விளையாடுவதில்தான் கவனம் சென்றது. அவர்கள் சுத்தமாக உடுத்திக் கொள்ள வேண்டும் என்று விமலா ஆளுக்கு ஒரு சோப்புக் கட்டி கொடுத்தாள். இரண்டு நாட்கள் நன்றாகத் தேய்த்துப் போட்டுக் கொண்டு வந்தார்கள். மூன்றாவது நாள் அழுக்காகத்தான் வந்தனர். தோய்ப்பதற்குச் சோம்பல் என்று எண்ணி விமலா, 'சோம்பற் கிடங்கொடேல்' என்று போதித்தாள். பிறகு அவர்கள் அந்த சோப்புக் கட்டிகளை ஒரு சலவைத் தொழிலாளியிடம் கொடுத்து விட்டார்களென்று தெரிந்து கொண்டாள். அவன் தலைக்கு அரையணா கொடுத்து அவர்களை ஏமாற்றி விட்டான்.

• • •

ஒரு விடுமுறை தினத்தன்று விமலா லீலாவையும் அழைத்துக் கொண்டு தன் வகுப்புக்குப் போனாள். வழியில் கண்ணன் ஒரு சிறிய பையனைப் பிடித்து அடித்துக் கொண்டிருந்தான். அவன் அருகில் இன்னும் மூன்று சிறுவர்கள் நின்று கொண்டு, "கண்ணு ரெண்டு போடு!" என்று பொசிகை செய்து கொண்டிருந்தனர். அடி வாங்கிய சிறுவனுக்கு ஏழு வயதுதான் இருக்கும்.

இதைப் பார்த்த விமலா துடித்துப் போனாள். அன்பைப் போதித்துக் கொண்டிருந்தவளுக்கு இக் காட்சி எப்படி இருந்திருக்கும்! ஓடிப்போய்க் கண்ணனை விலக்கி விட்டு அந்தச் சிறுவனைத் தன் கையில் பிடித்துக் கொண்டாள். "கண்ணா! நீயா இப்படி அடிக்கிறாய்! ஏன்! இவன் என்ன தவறு செய்தான்!" என்று கேட்டாள்.

கண்ணன் தலையைக் குனிந்து கொண்டே பதில் சொன்னான். "எங்கம்மா, எனக்கு வடையும் பிட்டும் வைத்திருந்தாங்க. அதை இந்தக் களவாணிப் பயல் எடுத்து மிச்சம் வைக்காமல் தின்று விட்டான். எனக்குக் கோபம் வந்து விட்டது. அதனால் இவனை அடித்தேன்" என்றான்.

விமலா லீலாவின் முகத்தைப் பார்த்தாள். லீலாவுக்கு விமலாவைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. இருவரும் பேசாமல் வீடு திரும்பினர்.

சிறிது தூரம் சென்றதும் லீலா, "விமலா! வருத்தப்படாதே!" என்று ஆறுதல் கூறினாள்.

"உலக இயல்பு இப்படித்தான் இருக்கும் போலிருக்கிறது, லீலா. நான் இன்றுதான் அதைத் தெரிந்து கொண்டேன்" என்று கலங்கிய கண்களுடன் தழுதழுத்த குரலில் பதிலளித்தாள் விமலா.

---

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras






## மேலும், டால்டா சிக்கனமானதும்கூட!

டால்டாவில் தயாரித்த ருசிமிக்க தின்பண்டங்களால் எப்பொழுதையும்விட இவ்வருடத் தீபாவளியை அதிக இன்பமுடையதாகச் செய்யுங்கள். டால்டா வனஸ்பதி ஒரு சிறந்த சமையல் கொழுப்பு. அது ஆரோக்கியம் அளிப்பதுடன் தீபாவளிக்கான தித்திப்புப்பண்டங்களை ருசிமிக்கதாகச் செய்கிறது. இது மிகவும் சிக்கனமானதும்கூட! டால்டாவில் சமைத்து இவ்விசேஷ பண்டிகையை வெற்றியுடையதாகச் செய்து இன்பம் அடையுங்கள்.

பிரத்தியேக தீபாவளித் தித்திப்புப் பண்டங்கள்
தயாரிப்பது எப்படி
இலவச ஆலோசனைகளுக்கு இன்றே எழுதுங்கள் :
தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1.

# டால்டா
வனஸ்பதி






HVM. 194-50 TM

REGD. No. M 4392
*Registered as a newspapers in Ceylon*

நாள் முழுவதும்

காலை வேளையில்



புத்துணர்ச்சி

பிற்பகலில்



அளிக்க...

இரவில்






ஹிமாலயா புக்கே
பௌடர்களை
உபயோகியுங்கள்




ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ண நிலைகளிலும்
சருமத்தைப் பாதுகாக்கிறது.

HBP. 8-X30 TM